# ஓஷோ



"தேடுதலை நிறுத்துங்கள்
தேடுவது கிடைக்கும்"

கவிதா வெளியீடு

ஓஷோ

# தேடுதலை நிறுத்துங்கள் தேடுவது கிடைக்கும்

*(சுபி கதைகளின் விளக்கம்)*

தமிழாக்கம்:

சுவாமி ஆனந்த் பரமேஷ்

Dr. M.P. Swamy, Ph.D., FIC.,




**கவிதா** பப்ளிகேஷன்

தபால் பெட்டி எண் : 6123

15, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார்,

தி.நகர், சென்னை – 600 017.

# உள்ளே...


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | ஒரு குருடனின் பிதற்றல்<br>(BLIND MAN'S BUFF) | 4 |
| 2. | கடல்பறவைகளை விரும்பும் ஒரு மனிதன்<br>(A MAN WHO LOVED SEAGULLS) | 38 |
| 3. | தாயின் அரவணைப்புக்கு அப்பால்<br>(BEYOND MOTHER'S KNEES) | 71 |
| 4. | 'சிப்லி' இல்லாத பொழுது<br>(WHEN SHIBLI IS ABSENT) | 102 |
| 5. | ஒரு சிறிய காசு<br>(JUST A SMALL COIN) | 134 |

# 1. ஒரு குருடனின் பிதற்றல்
## (BLIND MAN'S BUFF)

சாதி (SAADI), "ஒரு மனிதனுக்கு ஒரு அழகற்ற மகள் இருந்தாள். அவளை யாருமே விரும்பிக் கலியாணம் செய்யாத காரணத்தால், அவளை ஒரு குருடனுக்கு மணம் முடித்துவைத்தார். அதன்பிறகு, ஒரு டாக்டர், அவனுடைய கண்களை சரிசெய்ய முடியும் என்று அபிப்ராயம் சொன்னார். ஆனால், அந்தப் பெண்ணின் தகப்பனார் விருப்பப்படவில்லை. ஏனெனில், கண்தெரிந்த பிறகு, தன் மகளின் அவலட்சணத்தைப் பார்த்து, எங்கே தன் பெண்ணை விவாகரத்துப் பண்ணிவிடுவானோ என்று பயந்தார்" என்று சொல்லி, கடைசியில் சாதி,

"ஒரு அவலட்சணமான பெண்ணின் கணவனே சிறந்த குருடனாவான்" என்று முடித்தார்.

பொதுவாக, மனிதன் தூக்கத்திலும், குடிபோதையிலும் அறிவற்று வாழ்வதுபோல, ஒரு குருட்டு வாழ்க்கையைத்தான் வாழுகிறான். அவனிடம் எந்த விழிப்புணர்ச்சியும் கிடையாது. அவன் அந்த காலத்திலும் அப்படித்தான் இருந்தான், இந்த விஞ்ஞானயுகத்திலும் அப்படித்தான் இருக்கிறான்.

அவனுடைய தூக்க வாழ்க்கையிலிருந்து, தட்டி எழுப்ப பல வழிகளை பலபேர்கள் கையாண்டுப் பார்த்தார்கள். ஆனால், மக்கள் அவைகளை முழுமையாக ஒருபோதும் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே, பிரச்சினையின் உண்மை என்னவென்றால், மக்களின் அறியாமை இல்லை, ஆனால், அவைகளை மக்கள் ஏற்றுக்கொள்ளுவதில்லை என்பதே உண்மையான காரணம்.

அறியாமையை சரிசெய்து விடலாம். ஆனால், தான் அறியாமையிலிருந்து வெளியே வரமாட்டேன் என்பவனை என்ன செய்வது? முதலில், அதிலிருந்து விடுதலை அடைய அவன் ஒத்துழைக்கவேண்டும். அதுதான் முக்கியம். பிரச்சனையே இதுதான்.

அறியாமையில் இருப்பதுதான் ஒரு பாதுகாப்பு என்று அவன் நம்புகிறான். அதில், பல அரிய புதையல்கள் இருக்கின்றன என்றும், அறியைமையை இழந்தால், எங்கே அவைகளையும் இழந்து விடுவோமோ என்று அவன் பயப்படுகிறான்.

ஒருசமயம், ஒரு பெண், தன் கணவனை என்னிடம் அழைத்து வந்தாள். அவன் உண்மையிலேயே ஏதோ வியாதியில் இருக்கிறான். அவன் உடல் நடுங்கிக் கொண்டிருக்கிறது. கண்களில் ஒளி இல்லை. முகம் வெளுத்துக் காணப்படுகிறது. ஆனால், அவனோ, "எனக்கு ஒன்றுமே இல்லை. நான் நன்றாகத்தான் இருக்கிறேன். ஆனால் இவளும் (மனைவி) மற்ற சுற்றத்தார்களும், என்னை டாக்டரிடம் காண்பித்து, ஆஸ்பத்திரியில் சேர்க்க முயற்சிக்கிறார்கள். ஏன் என்றே எனக்குப் புரியவில்லை? எல்லோருமே, எனக்கெதிராகச் சதி செய்வதுபோல் தோன்றுகிறது. தயவுசெய்து எனக்கு உதவுங்கள்" என்று என்னிடம் கெஞ்சினான்.

இவனுக்கு, நான் என்ன உதவி செய்யமுடியும்? அவனுடைய மனைவியிடம் விபரம் கேட்டேன். அவள், "இவர் எப்பொழுதும் வியாதி என்றாலே பயப்படுகிறார். ஏனெனில், வியாதி தனக்கு இருக்கிறது என்று யாரும் சொன்னால், எங்கே இறந்துவிடுவோமோ என்று அச்சப்படுகிறார். ஆஸ்பத்திரி என்றாலே, சாவுக்கூடம் என்றுதான் அவர் நினைக்கிறார். சாதாரணமாக, யாராவது சொந்தக்காரர்கள், நண்பர்கள் ஆஸ்பத்திரியில் இருந்தால்கூட, போய்ப் பார்க்க மாட்டார். இப்பொழுது இவருக்கே உடல்நிலை சரியில்லை. ஆனால் ஆஸ்பத்திரிக்கு வர மறுக்கிறார். இவரது வியாதியை எப்படிப்போக்குவது என்று எங்களுக்குப் புரியவில்லை" என்றாள்.

நான் அந்த நிலைமையின் அடிப்படைக் கருத்தைப் புரிந்துகொண்டேன். உடனே அந்த ஆளிடம், "நீங்கள் சொல்லுவதுதான சரி. நீங்கள் மிகவும் ஆரோக்கியமாகவே

இருக்கிறீர்கள். உங்கள் மனைவிக்குத்தான் புரியவில்லை'' என்றேன். அப்பொழுது அவரது முகத்தில் ஒரு பூரிப்பு ஏற்பட்டது. ஏதோ புதிய சக்தி, அவர் உடல் முழுவதும் பரவுவதைக் கண்டேன். அவர் இப்பொழுது மனமகிழ்ச்சி யுடன் சிரிக்க ஆரம்பித்தார். அவர், "நீங்கள் ஒருவர்தான் என்னைச் சரியாகப் புரிந்துகொண்டீர்கள். இதோ பார், (மனைவியைப் பார்த்து) பகவானே, நான் ஆரோக்கியமாக இருக்கிறேன் என்று சொல்லிவிட்டார். இதைவிட வேறு என்ன 'சர்டிபிகேட்' வேண்டும்'' என்றான். நான் மேலும் "நீங்கள் ஆயுள்பூரா டாக்டரிடம் போகவேண்டியதில்லை. அவ்வளவு ஆரோக்கியமாக இருக்கிறீர்கள்'' என்றேன். இதைக் கேட்டதும், அவர் சிறிது சந்தேகத்தோடுப் பார்த்தார். ஏனெனில், அவருக்கே தெரியும், தான் வியாதி யோடு இருக்கிறோம் என்று! ஆனால், எல்லாம் தெரிந்த பகவான் (அதாவது நான்), தான் மிக ஆரோக்கியமாக இருப்பதாகச் சொல்லுகிறாரே இது எப்படி என்று யோசித்து, "என்ன நான் டாக்டரிடமே செல்லவேண்டாம் என்று சொல்லுகிறீர்களா?'' என்று சந்தேகத்தோடு கேட்டார். அதற்கு நான், "ஆமாம், அது தேவை இல்லை. ஆனால், உங்கள் மனைவிக்காக, அவள் திருப்திக்காக, ஏன் நீங்கள் ஒருதரம் டாக்டரிடம் செல்லக்கூடாது?'' என்று கேட்டேன்.

அவர் சிரித்துக்கொண்டே, "அப்படியானால் சரி. அவளுக்காக வேண்டுமானால் செல்லுகிறேன்'' என்றார். அப்படித்தான் அவரை, ஆஸ்பத்திரியில் கடைசியாகச் சேர்த்தார்கள்.

இதைப்போலப் பிரச்சனைகளில்தான், நீங்களும் இருக்கிறீர்கள். மற்றவர்களும் இருக்கிறார்கள். நீங்கள் எப்பொழுதும், எதையாவது நினைத்து பயந்தவாறே இருக்கிறீர்கள்.

சாக்ரடீஸ் காலம் முதல், இன்றுவரை, அல்லது வேதகாலம் முதல் இன்றுவரை, கடவுள்தன்மையின் ஒளிக்

கிற்றை உணர்ந்தவர்கள் எப்பொழுதும் சொன்னது என்ன வென்றால், ''உங்களை முதலில் நீங்கள் அறிந்து கொள்ளுங் கள்'' என்பதே. ஆனால், யார் அதை காது கொடுத்து கேட்டார்கள்? எல்லோருமே, தங்களைச் சுற்றி, அதாவது தன்னை அறிதலைச் சுற்றி, ஒரு பாதுகாப்பு வளையத்தை உண்டு பண்ணிக்கொண்டார்கள். நீங்கள் ஏன், உங்களை அறிய விரும்புவதே இல்லை. அதற்கு ஏன் பயப்பட வேண்டும்?

முக்கியமாக, அறியாமை ஒரு பொய்யான ஆனந்தத்தை ஒருவனிடம் ஏற்படுத்துகிறது. பெரும்பாலான மக்கள் மிகவும் மேலோட்டமாக வாழுகிறார்கள். அப்பொழுது, தங்களுக்குள்ள பொறுப்புகளை, மிகவும் இலேசாக எடுத்துக்கொண்டு, வாழ்வில் தாவிச் செல்லுகி றார்கள். எதைப்பற்றியும் ஆழமாகச் சிந்திப்பது இல்லை. ஆழமாகச் சிந்தித்தால், பொறுப்புகள் அதிகமாகும். அப்பொழுது உங்களையே சரியாக அறியக்கூடிய வாய்ப்பு கள் ஏற்படுவதால், உங்களால் ஏதும் தவறாகச் செய்ய முடியாது, எண்ண முடியாது.

உங்களை நீங்களே மேலும், அறிய அறிய, உங்களுடைய பொறுப்புகளும் அதிகமாகி, உங்களிடத்தில் ஒரு பெரிய மாற்றம் நிகழும். அப்பொழுதுதான், நீங்கள் உண்மையான மகிழ்ச்சியிலும், உண்மையான பாதுகாப்பி லும் இருப்பதாக உணருவீர்கள். உங்கள் சொந்த வீட்டை அடைந்ததாக உணருவீர்கள். ஆனால், உங்களை முதலில் அறிவது என்பது மிகவும் துன்பமான வேலை.

இதுவரையில், நீங்கள் அறியாமையில் உணர்ந்தது, ஒரு பொய்யான வீடு. அது ஏதோ ஒரு வீதியில் கட்டப்பட்டதற்கு (சத்திரம்) ஒப்பாகும். அந்த பொய்யான வீட்டில் இருந்துகொண்டு, உங்கள் வாழ்க்கை யாத்திரை முடிந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால், அந்த யாத்திரை முடியவே இல்லை. ஏன், இன்னும் ஆரம்பம் கூட ஆகவில்லை.

இப்பொழுது, நீங்கள் உங்களையே அறிய முயற்சிப்பது, ஒரு புதிய பிறவியின் ஆரம்பம்தான். அப்பொழுது, நீங்கள் இதுவரை தங்கி இருந்தது, உங்கள் சொந்த வீடு அல்ல, அது ஒரு பொது சத்திரம்தான் என்று உணர ஆரம்பிப்பீர்கள். ஏதோ, ஒரு நாள் ராத்திரிக்கு வேண்டுமானால், அது தங்க உபயோகப்படலாம். ஆனால், ஒரு சத்திரம் எப்படி உங்கள் சொந்த வீடு ஆகும்?

இதுவரை, நீங்கள் உங்கள் துன்பத்திலும், ஒரு பாதுகாப்பை, ஒரு வசதியை உணர்ந்து வந்தீர்கள். அது தான் இயற்கை என்று எண்ணியும் வந்தீர்கள். ஏனெனில், உங்களைச் சுற்றியுள்ள அனைவரும், அப்படியே இருப்ப தால், உங்களுக்கு வித்தியாசம் தெரியவில்லை. ஆனால், உங்களை அறிய முற்படும்பொழுது, நீங்கள் வெளி உலகத்தி லிருந்து, உங்கள் உள்ளே ஆழமாகச் செல்ல ஆரம்பிக்கி றீர்கள். அப்பொழுது, உங்களுக்குத் தெரியாதவைகள், புரியாதவைகள் அனைத்தும் மெல்ல புரிய ஆரம்பிக்கும். உண்மையில், அப்பொழுது இதுவரை தெரியாத, புரியாத ஒரு உலகத்திற்குள் செல்ல ஆரம்பிக்கிறீர்கள். அது உங்களிடம், ஒருவித பயத்தை ஏற்படுத்துகிறது. உங்களிடம் ஒரு நடுக்கத்தை உண்டாக்குகிறது.

இதுவரை, வாழ்ந்த வாழ்க்கைக்கும், இப்பொழுது வாழும் வாழ்க்கைக்கும், மிகுந்த வித்தியாசத்தைக் கண்டு, அதிர்ச்சி அடைகிறீர்கள். இதுவரை வாழ்ந்தது, மிகவும் மேலோட்டமானது. ஏதோ வாழ்வை தள்ளிக்கொண்டுச் சென்றிருக்கிறீர்கள். அதில் நீங்கள் ஆழமாகச் செல்லவே இல்லை. உங்களுடைய சகல துன்பங்களுக்கும் இதுவும் ஒரு காரணம். ஆக, உங்கள் வாழ்க்கையின் பாதியை, இப்படி மேலோட்டமாக கழித்துவிட்டீர்கள். மீதிபாதியையும், இப்ப டியே கழித்து, எல்லோரையும் போல் இறப்பை சந்தித்து விடலாம். அதற்கு பிறகு என்ன நடந்தால் என்ன? வாழ்வில், தன்னை அறிந்துகொள்ளுதல் என்பது

அவசியமா? பெரும்பாலோர், இப்படி எண்ணித்தான் மடிகிறார்கள்.

ஏனெனில், இந்த அறியாமையில், மேலோட்டமாக வாழ்வதில், ஒரு வசதியை, ஒரு பாதுகாப்பை ஏற்படுத்திக் கொண்டீர்கள். உங்களிடத்தில் பணம், அந்தஸ்து, சமூகம், அரசாங்கம், மதம் பற்றிய கொள்கை, கோட்பாடுகளில் கலந்துகொள்ளல், இப்படிப் பலவற்றில் உங்களை ஈடுபடுத்திக்கொண்டு, ஒரு பொய்யான உலகத்தில், ஒரு பொய்யான சுகத்தைக் கண்டு வந்திருக்கிறீர்கள். இவைகளெல்லாம் உங்கள் வாழ்வில், ஒரு பெரிய பாதுகாப்பு என்று கருதி வந்திருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் உங்களை அறிய முயற்சிக்கும்பொழுது, இந்த பாதுகாப்பு என்பது எவ்வளவு பொய்யானாது என்பதை அறிந்து, அதிர்ச்சி அடைகிறீர்கள். நீங்கள் இதுவரை நினைத்து வந்தது எதுவுமே பாதுகாப்பு இல்லாதது என்றும், ஆனால், அதைப் போன்றதொரு தோற்றத்தை அவைகள் அளித்து வந்திருக்கிறது என்பதைப் புரிந்து குழம்புகிறீர்கள். உண்மையும் அதுதான்.

உதாரணமாக, நீங்கள், மனைவியோடு வாழுகிறீர்கள். அதில் என்ன பாதுகாப்பு இருக்கிறது? நாளைக்கே, அவள் இன்னொருவனிடம் ஆசைகொண்டு, உங்களை விட்டு சென்றுவிடலாம். அப்பொழுது, நீங்கள் யாரோ, அவள் யாரோ! ஒரு சமயம், நீங்கள்தான் எல்லாம் என்று அன்புகொண்டு பிதற்றிய, அந்த மனைவி இப்பொழுது எங்கே? அதைப்போல, 'உன்னைவிட இந்த உலகத்தில் வேறு அழகியே கிடையாது' என்று காதல் மயக்கத்தில் பிதற்றிய நீங்கள் இப்பொழுது வேறு ஒரு பெண்ணோடு காதல் செய்ய ஆசைப்படுகிறீர்கள்! இப்படி நீங்கள் இருவரும் ஒரு காலத்தில் சொன்ன வார்த்தைகளில் அர்த்தம் என்ன? இப்பொழுது உங்கள் இருவரின் பாதுகாப்பு, நம்பிக்கை எங்கே போயிற்று?

அதற்காகத்தான், மனிதன் கல்யாணப் பதிவை, காதலைவிட நம்புகிறான்! அதை வைத்துக்கொண்டு, கோர்ட்டுக்குச் செல்லலாம். வெறும் காதலை வைத்துக் கொண்டு, எங்கே செல்லுவது? அப்படி கோர்ட்டுக்குச் சென்று அந்த கோர்ட்டும் உங்களை சேர்த்துவைக்கலாம். அதனால் என்ன பிரயோஜனம்? உங்கள் காதல் எப்பொழுதே இறந்துவிட்டதே! ஏதோ, வாழ்க்கை, பாதுகாப்பு என்ற பெயரில் சமூகத்திற்காக வாழலாம். இது உண்மையான வாழ்க்கையா? போலீசும், கோர்ட்டும் சேர்த்து வைத்த வாழ்க்கையில் என்ன இருக்கும்? நீங்கள், வெறும் கணவன் மனைவியாக நடித்துக் கொண்டிருக்கலாம். அவ்வளவுதான்.

நீங்கள் உங்களையே அறிய முற்படும்பொழுது, உங்களிடத்தில் ஒரு குழப்பம் கண்டிப்பாக ஏற்படத்தான் செய்யும். ஏனெனில், இதுவரை எவைகளெல்லாம் பெருமை வாய்ந்தது, மதிக்கக் கூடியது என்று எண்ணி வந்தீர்களோ, அவைகளெல்லாம் ஒன்றுக்கும் உதவாது என்பதை அறிந்து அதிர்ச்சி அடைவீர்கள். அப்பொழுது, இந்த உலகத்தை, வேறு ஒரு கோணத்தில் பார்க்க ஆரம்பிக்கிறீர்கள். உங்கள் பழைய கண்கள் மறைந்துவிட்டன. இப்பொழுது நீங்கள் பார்க்கும் அதே உலகம், வேறு விதமாக காட்சி அளிக்கும். நீங்கள் ஏதோ, ஒரு புதிய உலகத்தில் இருப்பதாக உணருவீர்கள்.

இதுவரை, நீங்கள் கண்டுவந்த அழகிய கனவுகள், பொடிப் பொடியாவதை உணர்ந்து விக்கித்து நிற்பீர்கள். கனவுகள் மறைந்து, உங்கள் உண்மை நிலையை அறியும் பொழுது, இதுவரை எவ்வளவு பொய்யான வாழ்க்கை வாழ்ந்தோம் என்று துயரப்படுவீர்கள். இந்த புதிய உலகத்தில், எந்த ஆசைகளோ, எந்த எதிர்பார்ப்போ, இருக்காது. அப்பொழுது முதன்முதலில், உங்கள் வாழ்க்கைக்கு, அதாவது உண்மையான வாழ்க்கைக்கு, நீங்கள் மட்டுமே பொறுப்பு என்ற உணர்வு தோன்றும். இந்தப் பொறுப்பில்,

பிறரின் தலையீடு எதுவும் இருக்காது. அவர்களுடைய அங்கீகாரம் எதுவும் தேவைப்படாது.

இதுவரை நடத்திய வாழ்க்கையிலும், ஒரு பொறுப்பை உணர்ந்தீர்கள். அதாவது, உங்கள் மனைவி மற்றும் பிள்ளைகளைக் காப்பாற்ற பொறுப்போடு வேலைக்குச் சென்று சம்பாதித்தீர்கள். அவர்களை படிக்கவைக்க கஷ்டப்பட்டீர்கள். ஆனால், இவைகளையெல்லாம், பொறுப்பு என்று அழைப்பதைவிட, கடமை என்று அழைப்பதே பொருத்தமாக இருக்கும். ஏனெனில், அந்த செய்கைகளில் பெரும்பான்மை, உங்கள் உள்ளத்திலிருந்து வருவதே இல்லை. பொறுப்பு என்பது உங்கள் உள்ளம் சம்பந்தப்பட்டது. கடமை என்பது அறிவு சம்மந்தப்பட்டது. உங்களை நீங்கள் அறிந்து கொள்ளுதல் என்பது உள்ளம் சம்மந்தப்பட்டது. இந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளுங்கள்.

அப்படி, ஒருவன் தன் விழிப்பு நிலையை அடைந்தால், தன்னுடைய செயல்கள் அனைத்திற்கும், தானே பொறுப்பு என்பதை ஏற்றுக்கொள்ளுவான். ஏன், தான் மூச்சு விடுவதற்குக்கூட, தானே பொறுப்பு என உணர்வான். அது மாத்திரம் அல்ல; இந்த பிரபஞ்ச உயிர் இயக்கத்திற்கும், தனக்கும் நெருங்கிய சம்மந்தம் இருப்பதையும் உணருவான். இந்த உலகத்தில் எது நடந்தாலும், உதாரணமாக, வியட்நாமில் கலகம் என்றாலும், அதில் தனக்கும் பொறுப்பு இருக்கிறது, தன்னையும் அது பாதிப்பதாக உணருவான். அவன், ஒருக்காலும், தான் ஒரு தனித்தீவு என்று உணரமாட்டான். இந்த பிரபஞ்சங்கள் அனைத்தும் ஒன்றை ஒன்று சார்ந்து இருக்கின்றன. இந்த பேரியக்கப் பெருங்கடலில், நாமெல்லாம் சிறு சிறு அலைகள் போன்றவர்கள். இதில் நடக்கும், நடந்த, நடக்கப்போகும் அனைத்து நிகழ்ச்சிகளுக்கும், தனக்கும் பொறுப்பு, அல்லது பங்கு உண்டு என்று மனதார உணருவீர்கள்.

ஆனால், இதுவரை நீங்கள் எப்படி இருந்து வந்தீர்கள்? யாரோ ஒருவன், யாரையோ கொன்றால், அதற்கும், நமக்கும் என்ன சம்மந்தம் என்றும், என்னுடைய பொறுப்பு, என் மனைவி மக்களைக் காப்பாற்றுவதுதான், அடுத்தவர்களைப் பற்றி எனக்கு என்ன கவலை என்றுதான் நினைத்து வந்திருக்கிறீர்கள்.

ஆனால், விழிப்படைந்த புத்தர்கள், இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு மரத்தின் இலைகளில், தானும் ஒரு பாகமாகக் கருதுவார்கள். தனக்கு என்று எந்தத் தனித்தன்மையும் இல்லை என்று உள்ளத்தளவில், முழுமை யாக உணருவார்கள். அவர்கள் இப்பொழுது தனிமனிதன் இல்லை. அவர்களே இந்த பிரபஞ்சமாகி விட்டார்கள். உங்களுடைய ஆத்மா, இப்பொழுது உங்களுக்கு மட்டும் சொந்தம் அல்ல. அது இப்பொழுது, இந்த பிரபஞ்சத்துக்கே உரியது.

உங்களுடைய உயிர்த்தன்மையின் மையம், இப்பொழுது உங்கள் உள்ளே இல்லை. அது இந்த பிரபஞ்சத்தில் இருக்கிறது. இதை ஓரளவு புரிந்தவர்கள், தன் உள்ளே செல்ல முதலில் பயப்படுவார்கள். ஏனெனில், இந்த பிரபஞ்சம் அனைத்திற்கும், தான் எப்படிப் பொறுப்பேற் பது? ஆகவே, பெரும்பாலோர், பூர்ண விழிப்பு நிலையை அடைய மறுத்து பாதியில் திரும்பி இந்த விழிப்பற்ற உலகத்திற்கே ஓடிவந்து விடுவார்கள்.

இப்பொழுது நீங்கள் நல்லவனாக, ஒழுக்கம் உள்ளவனாக இருக்கலாம். இது மிகவும் மேலோட்ட மானது. அது உங்களைவிட, இந்த சமூகத்திற்கு மிகவும் தேவை. உங்கள் சமூகம், ஒன்றை நீதி என்று அறிவித்து, அதை நீங்கள் கடைப்பிடித்தால், உங்களைவிட அந்த சமூகம் மிகவும் சந்தோஷப்படும். சமூகம் இப்படி உங்கள் மேல் ஆட்சி செய்வது, அதிகாரம் செய்வது உங்களுக்குப் புரிகிறதா? ஆனால், உண்மையில், நீங்கள் ஒழுக்கவாதி இல்லை. யார் ஒருவன் பூர்ண விழிப்புநிலையை அடை

றானோ, தன்னை முழுமையாக அறிந்துகொள்ளுகிறானோ, அவன் செய்யும் அனைத்தும் இயல்பாக ஒழுக்கத்தன்மை வாய்ந்தது. அதற்கு சமூகத்தின் கொள்கை, கோட்பாடு, நீதிகள் எதுவும் தேவை இல்லை. இப்பொழுது, நீங்கள் ஒழுக்கவாதி என்றால், உங்களால் சமூகத்திற்கு எந்தத் தீங்கும் இல்லை என்று அர்த்தம். இதனால், உங்களுக்கு, தனிப்பட்ட முறையில் என்ன லாபம்? இப்பொழுது, நீங்கள் முயற்சி செய்து தீயவைகளை ஒதுக்கிவிட்டு, நல்ல வைகளை, உங்கள் முயற்சியாக செய்யவேண்டும். அதில் உங்கள் உள்ளக்கலப்பை விட, மனக்கலப்புதான் அதிகம்.

ஆனால், விழிப்படைய மனிதனுக்கு, எது நல்லதோ, எது சரியோ அது அவர்களிடத்தில் தன் இயல்பாக செயல் படும். அதற்காக அவர்கள் எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளுவது இல்லை. பொய்மை, கெட்டவை, பிறருக்குத் தீங்கு செய்பவை எதுவும் அவர்களிடம் ஏற்படாது. அந்த பூர்ண விழிப்பு நிலையில், அவர் கருணையே வடிவமாக, அன்பே செயலாக மாறிவிடுகிறார். அந்த அன்பும், கருணை யும்தான், அவரை இந்த பிரபஞ்சத்தோடு இணைக்கிறது.

ஒரு சரியான விழிப்படைந்த மனிதனுக்கு, தனிப்பட்ட முறையில், நல்ல நடத்தை, கெட்ட நடத்தை (CHARACTER) என்று எதுவும் கிடையாது. அவரிடத்தில் பூர்ண பிரக்ஞை உணர்வுதான் இருக்கும். வேறு எதுவும் இருக்காது. ஆனால், உங்களிடத்தில், பூர்ண பிரக்ஞை நிலையைவிட, குணம், ஒழுக்கம், நடத்தை என்பதுதான் மேலோங்கி நிற்கும். இவைகள் அனைத்தும், பூர்ண உணர்வு நிலைக்கு, ஒரு மாற்று நிலைதான். மிகவும் அற்பமான மாற்று நிலை. உங்களுடைய அறியாமைக்கு, துன்பத்திற்கு, ஏழ்மை நிலைக்கு, இவைகள்தான் அடிப்படைக் காரணம்.

நடத்தை மற்றும் குணத்திற்கும், பூர்ண விழிப்பு நிலைக்கும் என்ன வித்தியாசம்? புத்தரிடம் எந்த ஒழுக்கமும் இல்லை என்று நான் சொன்னால், அதைச் சரியாகப் புரிந்துகொள்ளுங்கள். அதாவது, அப்படி எதுவும் தனியாக அவருக்குத் தேவை இல்லை. ஒழுக்கம், குணம் என்று

நீங்கள் பிரித்துப் பார்க்கும்பொழுது, நீங்கள் மிகவும் சாதாரண நிலையில்தான் இருக்கிறீர்கள். நீங்கள் சமூகத்தால் நிர்ப்பந்தப்படுத்துவது புரிகிறதா? ஆனால், விழிப்படைந்தவர்களிடம், தனிப்பட்ட முறையில் எந்த ஒழுக்கமும், நீதியும் கிடையாது. ஏனெனில், அவர்களே அதுவாக இயங்குகிறார்கள். அங்கு சமூகத்தின் நிர்ப்பந்தம் எதுவும் எடுபடாது.

நாம், ஒவ்வொரு குழந்தையிடமும், "உண்மையைப் பேசு, திருடாதே" என்று இப்படிப்பல அறிவுரைகளைச் சொல்லுகிறோம். ஏன் இப்படி செய்கிறோம்? நாம் அவர்களது உள்உணர்வை, பிரக்ஞையை நம்புவது இல்லை. சமூகத்திற்கு ஏற்ற மாதிரி, பல கொள்கை, கோட்பாடு, நீதி, ஒழுக்கம் என்று அவர்களை நிர்ப்பந்தப்படுத்துகிறோம். இவைகளெல்லாம், பிறகு குணங்களாக மாறுகின்றன. இந்த குணங்கள் அனைத்தும் இயல்பானது அல்ல. அவர்கள் மேல் திணிக்கப்பட்டவை. ஆனால், அவைகள் அனைத்தும் 'திணிக்கப்பட்டவைகள்' என்ற உணர்வை நீங்களும் அவர்களும் இழந்து எவ்வளவோ நாட்களாகி விட்டன! ஏனெனில், இது உங்கள் சிறிய வயதிலேயே ஆரம்பமாகி விடுகிறது. பிறகு நீங்கள் செய்யும் செயல்கள் அனைத்தும், இதை அடிப்படையாக வைத்தே அமையும். அதில் எந்த சுதந்திரமும் இருக்காது. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

அப்பொழுது அவன் ஒரு அடிமையைப் போல் இந்த சமூக, சட்டதிட்டங்களுக்குப் பயந்து இயங்குகிறான். சமூகம் தான் அவனை உருவாக்குகிறது, ஆளுகிறது. தன்னுடைய சொந்த உணர்வு என்றும், சொந்த கருத்து என்றும் எதையும் வெளியிட முடியாது. இவன், ஒரு ஹிந்துவாக, முஸ்லீமாக இருக்கலாம். ஆனால், அவனது நடத்தையில், அந்த மதக்கோட்பாடுகள் தொக்கி நிற்கவே செய்யும். அது பரிபூர்ண சுதந்திரத்தில் இயங்காது. அவன் ஏதாவது ஒன்றை செய்யும்பொழுது, மதமும், சமூகமும்

எப்பொழுதும் குறுக்கிடுகின்றன. அவனுடைய வாழ்க்கை, ஒரு நாகரீகமான அடிமை வாழ்க்கைதான்.

அதேசமயம், சிறிது தைரியமாக, அதை எதிர்த்து செயல்படும் பொழுது, அவன் குற்ற உணர்வு கொள்ளு கிறான். சமூகத்தின் வலிமையைத் தாங்க முடியாமல், மீண்டும் பழைய நிலைக்கே வந்துவிடுகிறான். அப்படியும் வராவிட்டால், சமூகமும், மதமும் எப்படியும் அவனை பழைய நிலைக்குக் கொண்டு வந்துவிடும்! ஆகவே, நீங்கள் தன் உணர்வாக, விழிப்பு நிலையில் செயல்படுவதற்கு உங்களுக்கு தனித்து புரிந்துகொள்ளும் ஆற்றலும், மன தைரியமும் மிகவும் தேவை. அப்பொழுதுதான், நீங்கள் சுதந்திரம் பெறுவீர்கள். அப்பொழுது, அந்த பூர்ண விழிப்பு நிலையில், கணத்துக்கு கணம் வாழுகிறீர்கள். உங்களுக்கு பின்னே, எந்த இறந்தகால சமூக சட்டதிட்டங்களோ, நீதி நேர்மைகளோ பின் தொடர்வது இல்லை. ஒருவன், முழுமையாக, 'இங்கே இப்பொழுது' இயங்கும்பொழுது, அவன் பூர்ண பிரக்ஞையில் இருக்கிறான். அங்கு மனம் என்று எதுவும் இல்லை. மனம் என்றாலே கடந்தகால இறந்த எண்ண மூட்டைகள்தான். அதை, ஏன் நிகழ்காலத்தோடு கலக்கிறீர்கள்?

நன்றாகக் கவனியுங்கள். ஒரு குருடன் இங்கு இருந்து வெளியே செல்ல விரும்பினால், அவன், கதவு எங்கே இருக்கிறது என்று பிறரை விசாரிப்பான். அவன், ஒருவரை மட்டும் விசாரிக்காமல், பலபேர்களை விசாரித்து, உறுதி செய்துகொள்ளுவான். ஏனெனில், மக்களை முழுவதும், அவன் நம்பத் தயாராக இல்லை. அவர்கள் அனைவரும் அடிப்படையில் மிருக இயல்பு கொண்டவர் கள். அவனைத் தவறான திசைக்குத் திருப்பிவிட்டு, வேடிக்கைப் பார்க்கவே நினைப்பார்கள். இது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகவேதான், அவன் பல பேர்களிடம் விசாரித்து உறுதிபடுத்திக் கொள்ளுகிறான். அது மாத்திரம் அல்ல. அவன் கைத்தடியால் தட்டிப் பார்த்து, மெல்ல செல்லுவான். இந்த குணத்தை, அவனிடத்தில்

ஏற்படுத்தியது யார்? நீங்கள்தான். இந்த குணம், எவ்வளவு மேலோட்டமானது, அருவறுப்பானது. உங்களுடைய சமூக சட்டதிட்டங்கள் எல்லாம், இப்படிப்பட்ட குணங்களைத் தான், உங்களிடம் ஏற்படுத்தி இருக்கின்றன. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இப்பொழுது, அந்த குருடனிடம் 'பிரக்ஞை உணர்வு' இருக்கிறது. ஆனால், அது அவனுடைய சொந்த பிரக்ஞை இல்லை. அந்த பிரக்ஞையை நீங்கள்தான் கொடுத்திருக்கிறீர்கள். இதந்க் குருடனைப் போல்தான், நீங்கள் இயங்குகிறீர்கள். உங்களுடைய பிரக்ஞை உணர்வு, சமூகத்தால் கொடுக்கப்பட்டது. இந்த சமூகம் அளித்த கொள்கை கோட்பாடுகள், இயற்கைக்கு விரோதமாக இருந்தாலும், நேர்மையற்று இருந்தாலும், நீங்கள் அதைக் கடைப்பிடிக்காவிட்டால், நீங்கள் தவறு செய்வதாக, அது உங்களை சுட்டிக்காட்டும். உங்களிடத்தில் ஒரு குற்ற உணர்வை ஏற்படுத்தும். நீங்கள் சமூகத்தால் வெறுக்கப் படுவீர்கள். மெல்ல, மெல்ல, நீங்கள் உங்களையே வெறுக்க ஆரம்பித்துவிடுவீர்கள்! உங்கள் சமூகம் எப்படி தந்திரமாக வேலை செய்கிறது என்பதை ஆழ்ந்து சிந்தியுங்கள். அதாவது, உங்கள் கையைக் கொண்டே, உங்கள் கண்களை குத்தச் செய்கிறது. அதாவது, நீங்களே உங்களுக்குத் தண்டனை கொடுத்துக் கொள்ளுகிறீர்கள்!

உங்கள் சமூகம், வெளிஉலகத்தில், நீதி நிலையம் (COURT) மற்றும் காவல் நிலையத்தையும் ஏற்படுத்திவிட்டு, மனசாட்சியை உங்கள் உள்ளேயே வைத்து பூட்டிவிட்டது. அதாவது, அது உங்களை உள்ளேயும், வெளியேயும் ஆதிக்கம் செலுத்துகிறது. நீங்கள் அதை அநுசரித்துச் சென்றால், அது உங்களைப் போற்றச் செய்யும். உங்களுக்குப் பல வெகுமதிகளை அளிக்கும். அதேசமயம், அதை எதிர்த்து நின்றால், அது உங்களுக்குக் கண்டிப்பாக தண்டனை வழங்கும். உங்களைத் தூற்றும்.

முழு விழிப்பு நிலை எய்திய மனிதன், தன்னுடைய நடத்தையைப் பற்றிக் கவலைப்படமாட்டான். அவனிடம் பிரக்ஞை நிலை (CONSCIENCE) என்று தனியாக எதுவும் இல்லை. ஏனெனில், அவனே முழு பிரக்ஞையாக (CONSCIONSNESS) இருக்கிறான். இந்த வேறுபாட்டை உணர்ந்து கொள்ளுங்கள். அவன் கண்களையுடைய மனிதன் போன்றவன். இவன், கதவு எங்கிருக்கிறது என்று தேடமாட்டான். அவன் வெகு இயல்பாக கதவை அடைவான். அதைப்போல விழிப்பு நிலையைப் பெற்றவன், வெகு இயல்பாக நன்னடத்தை உள்ளவனாகவே இருப்பான். அவன் நினைத்தால்கூட, பிறருக்குக் தீங்கு இழைக்க முடியாது. அவன் அதைப்பற்றி சிந்திக்கவே மாட்டான். பிறகல்லவா தீங்கு செய்யவேண்டும்? அவனிடம் எந்த குற்ற உணர்வும் இருக்காது. நல்லது, கெட்டது என்ற உணர்வுகள் இருக்காது. ஏனெனில், அவன் செய்வது அனைத்தும் நல்லதாகவே இருக்கும்பொழுது, 'கெட்டது' என்று பாகு படுத்த தனியாக என்ன இருக்கமுடியும்? அவன் மனம் எதையும் செய்து விட்டு, அதற்காக வருத்தப்படாது.

அவன் கணத்துக்குக் கணம் வாழுகிறான். அவன் இறந்த காலத்திலிருந்து எதையும் எடுத்துக்கொள்ளுவது இல்லை. ஏனெனில், அவன் எப்பொழுதும் நிகழ்காலத்தி லேயே இருக்கிறான். வருங்காலத்தில்கூட வசிப்பதில்லை. அதாவது அவனிடம் எந்த எதிர்ப்பார்ப்போ, கனவுகளோ எதுவும் கிடையாது. அவன் முழுமையாக, 'இங்கே இப்பொழுது' இருக்கிறான். அவ்வளவுதான். அவனுடைய சக்தி அனைத்தும் நிகழ்காலத்திலேயே குவிந்து இருக்கிறது.

ஆனால், நீங்களோ, இறந்தகாலத்தை வழிகாட்டி யாக அமைத்துக்கொண்டு வாழுகிறீர்கள். உங்களுடைய பெற்றோர்கள், தங்களுடைய இறந்தகால அநுபவத்தின் பேரில், உங்களை வழிநடத்திச் செல்லுகிறார்கள். உங்கள் சமூகமும், உங்களை நிழல்போல, தொடர்ந்து வந்து கொண்டு இருக்கிறது. உங்களுடைய குரானும், பைபிளும்,

்வதமும், உங்களை வழிநடத்திச் செல்லுகின்றன. அதாவது, இறந்தகாலம், நிகழ்காலத்தை வழிநடத்திச் செல்லுகிறது! முகமது, மனு மற்றும் காரல் மார்க்ஸ் போன்றவர்கள் தங்கள், தங்கள் பாதையில் உங்களை செலுத்த முயற்சிக் கிறார்கள். நீங்கள் உயிரோடு இருந்தாலும், உங்கள் மனம் எப்பொழுதும் இறந்த காலத்தோடு தான் சம்மந்தப்பட்டு இருக்கிறது. ஆகவே, நீங்கள் உண்மையாக 'இப்பொழுது இங்கே' வாழவில்லை.

அதைப்போல, வருங்கால கனவு உலகத்திலும் வாழுகிறீர்கள். ஒன்று முடிந்த காலம், மற்றொன்று வருங்காலம். வருங்காலத்தைப் பற்றி என்ன நிச்சயமாகச் சொல்லமுடியும்? விழிப்புணர்வு பெற்றவன், ஒருக்காலும் இறந்தகாலத்தாலும், மற்றும் வருங்காலத்தாலும் ஆளப்படு வதில்லை. உங்கள் வேதமும், மஹாவீரரும், கிருஸ்துவும் மற்றும் முகமதுவும் அவனை அதிகாரம் செய்யமுடியாது. அவன் தன் முழு சுதந்திரத்தில் இயங்குகிறான். ஆகவேதான், அப்படிப்பட்டவர்களை, 'முக்தா' (MUKTA) என்று இந்தியாவில் அழைக்கின்றனர். 'முக்தா' என்றால் முழு சுதந்திரம் என்று அர்த்தம். அந்த சூழ்நிலைக்கு ஏற்ப, அப்போதைக்கப்போது முழுமையாகச் செயல்படுகிறான். இந்த செயலாற்றுதலில், எந்த கடமை உணர்வும் கிடை யாது. கடமை என்று வரும்பொழுது இறுக்கமும் சேர்ந்து விடும். இந்த நிகழ்கால செயலில், உணர்வுதான் இருக்குமே ஒழிய, கடமை என்று எதுவும் இருக்காது. எது நடந்தாலும், ஒரு விழிப்புணர்வு பெற்றவன், தன் முழுமையான சக்தியோடு அதை எதிர்கொள்ளுகிறான். எதையும் பாக்கி வைப்பதில்லை. ஆகவே, அவனிடம் எந்த குற்ற உணர்வும் ஏற்பட வழியில்லை.

உங்களுடைய அறியாமையில் செய்பவை அனைத்தும், முற்றுப் பெறாமலே இருக்கும். உங்கள் உள்ளத்தில் பல லட்சம் அநுபவங்கள் முற்றுப் பெறாமல்

காத்துக் கிடக்கின்றன. அவைகளையெல்லாம் முடிக்க, உங்களுக்கு எத்தனை பிறவிகள் தேவைப்படுகின்றனவோ?

ஒரு சிறிய உதாரணம் சொல்லுகிறேன். நீங்கள் சிரிக்க விரும்புகிறீர்கள். ஆனால், உரக்க சிரிக்க, உங்கள் சமூகம் அனுமதிக்கவில்லை. ஆகவே, அந்த எண்ணம் உங்கள் உள்ளத்தில் அடக்கப்பட்டுவிட்டது. அது அங்கே ஒரு வடுவை ஏற்படுத்திக்கொண்டு, தக்க தருணத்தை எதிர்ப்பார்த்து இருக்கிறது. அதைப்போல, நீங்கள் ஒருவரை உண்மையாக விரும்பிகிறீர்கள். ஆனால், உங்கள் சமூகம் ஏற்படுத்திய நீதி ஒழுங்கு முறைகள் அதைத் தடுக்கிறது. நீங்கள் இருவரும் தனியாக சந்திக்கும்பொழுது, அங்கே உங்கள் உள் மனத்தில் உங்கள் சமூகமும் கூடவே இருக்கிறது. நீங்கள் செய்வது தவறு என்று சுட்டிக்காட்டிக் கொண்டே இருக்கிறது. நீங்கள் ஏற்படுத்தியக் கடவுள், உங்கள் தலைக்குமேல் நின்றுகொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறார்! அப்பொழுது உங்களால் இயல்பாக காதல் செய்ய முடியுமா? அப்பொழுது உங்கள் உள்ளத்தில் ஏற்படும் விரக்தியையும், கோபத்தையும் யாரிடம் காட்டமுடியும்? அப்படியே காதல் செய்தாலும், அதில் எந்த முழுமையும் இருக்காது. இப்படி உங்கள் உள்ளம் புழுங்கி, கண்ணீர் விடும். நீங்கள் சமூகத்தின் மூலமாக, பாதிரியார்கள் மூலமாகக் கேட்டவை அனைத்தும் இப்பொழுது உங்களுக்கு ஒரு சுமையாக, தொந்திரவாக இருப்பதை உணர்ந்து வேதனைப்படுவீர்கள். பிறகு, இது உங்கள் நடத்தையாக (CHARACTER) மாறி விடுகிறது. ஆனால், அந்த ஆழ்ந்த விரக்தி உங்கள் உள்ளத்தில் அமுங்கிக் கிடக்கிறது.

உங்களுக்கு ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். அதாவது புத்தருக்கு எந்த 'நடத்தையும்' (CHARACTER) தனித்து கிடையாது. அவருடைய செயல்கள் அனைத்தும் ஆற்று நீரோட்டம் போன்றது. அவரது உள்ளத்தில் எந்தத் தேக்கமும் கிடையாது. நடத்தை என்பது உங்களைப் பாதுகாக்கும் ஆயுதம் போன்றது. அது வளைந்து

கொடுக்காது. அது உங்களை சில சமயங்களில் காப்பாற்ற லாம். ஆனால், முடிவில் உங்களையே கொன்றுவிடும்.

இப்பொழுதுதான், சிக்கிம் என்ற இமயமலையின் பக்கத்தில் உள்ள ஒரு சிறிய கிராமத்தை இந்தியா தன்னுடன் சேர்த்துக்கொண்டது. அதைப்போல, சைனா, திபெத்து என்ற கிராமத்தை தன்னுடையதாக்கிக் கொண்டது. இந்த செய்கையில், இந்தியா சைனாவையும், சைனா இந்தியாவையும் குறை கூறிக்கொண்டிருக்கின்றன.

ஆனால், சிக்கிம் நாட்டு அரசன், சோகியாம் (CHOGYAM) தன் வீட்டிலேயே சிறை வைக்கப்பட்டிருக் கிறான். அதற்கு இந்திய அரசாங்கம் என்ன சொல்லுகிறது? "அந்த அரசனுடைய மக்களே, அவனுக்கு எதிராக இருக்கிறார்கள். அவனை எந்த நேரமும் கொல்லலாம். அதற்கு ஒரு பாதுகாப்பிற்காக, அவனை சுற்றி போலீஸ் பந்தோபஸ்து கொடுத்திருக்கிறோம்" என்று. ஆனால் அந்த அரசனோ, "என்னை சுதந்திரமாக இயங்க, இந்தியா அனுமதிக்கவில்லை" என்று சொல்லுகிறான்.

இதைப் போலத்தான் நீங்களும் பாதுகாப்பாக, உங்கள் சமூகத்தால் சிறை வைக்கப்பட்டிருக்கிறீர்கள்! இந்த சமூகம் அல்லது அரசாங்கம் உங்களை அடக்க போலீஸ், பட்டாளம் (ARMY) எல்லாம் தன்னிடம் தயாராக வைத்திருக்கிறது. ஆனால், இந்த அரசாங்கம் என்ன சொல்லுகிறது "எல்லாம் உங்கள் பாதுகாப்புக்குத்தான்" என்கிறது. ஆனால், மக்கள் எல்லோரும் வீட்டுச் சிறையில் தான் வைக்கப்பட்டிருப்பதாகவே, நான் தீர்மானமாக உணருகிறேன். ஆனால், இதை நீங்கள் உணராதபடி, மிகவும் நாகரீகமாக அவர்கள் செய்கிறார்கள். இந்த பாதுகாப்பு உணர்வு உங்கள் ஆழ்மனத்தில் படிந்து, உங்களோடு ஒன்றாகிவிட்டது. ஆகவே, நீங்கள் இருக்கும் இடத்தை விட்டுத் தப்பித்து, இமயமலைக்குச் சென்றாலும், அந்த பாதுகாப்பு உணர்விலிருந்து, விடுதலை அடைய முடிய வில்லை. அது உங்களை அங்கேயும் துரத்திக் கொண்டு வருகிறது. ஆகவேதான், நீங்கள் உங்கள்

அறியாமையிலிருந்து, விடுதலை அடைய விரும்புவதே இல்லை. ஏனெனில், உங்களால் அந்த சமூகப் பாதுகாப்புச் சிறையை உடைத்து வெளியே வர தைரியம் இல்லை. அது ஒரு அவசியமான பாதுகாப்பாக உணருகிறீர்கள்.

அறியாமை என்பது ஒரு சிறிய விஷயம் இல்லை. அப்படி இருந்தால், அதற்கு தீர்வும் சுலபமாகவே இருக்கும். ஆனால், உங்களிடமே, பல சிக்கல்கள் இருக்கின்றன. முக்கியமாக, நீங்கள் அதிலிருந்து வெளியே வர விருப்பப் படுவதே இல்லை. நீங்கள் அதை மிகவும் நேசிக்கிறீர்கள்! ஏனெனில், உங்கள் அறியாமையில், கோழைத்தனத்தில், பல ஆயிரம் ஆசைகளையும், எண்ணங்களையும், உங்கள் உள்ளே போட்டுப் புதைத்து வைத்திருக்கிறீர்கள். அது ஒரு எரிமலையைப் போல் அங்கு கொதித்துக் கொண்டு இருக்கிறது. நீங்கள் விழிப்போடு, உங்கள் உள்ளே சென்றால், எங்கே அது வெடித்து சிதறி விடுமோ என்று அஞ்சுகிறீர்கள்.

ஆகவே, நீங்கள் மேலோட்டமாக, சமூகத்தை அநுசரித்து ஏதோ வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எப்பொழுதும் உங்கள் அறியாமையில் இருப்பதுதான் பாதுகாப்பு என்று நினைக்கிறீர்கள். ஆகவே, பெரும்பாலோர், வெளியிலேயே மேலோட்டமாக இருக்கவே ஆசைப் படுகின்றனர். யாருமே, தங்கள் உள்ளே, செல்ல விரும்புவதில்லை. அதற்கு முக்கியம் பயம்தான் காரணம். ஏனெனில், உங்கள் உள்ளே அடக்கப்பட்ட பெண் இன்பம், வஞ்சம், கோபம், விரக்தி, போராசை போன்ற ஆயிரக்கணக்கானவைகளை சந்திக்க வேண்டி வரும். அவைகள் எல்லாம் பீறிட்டு வெளியே வரத் துடிக்கின்றன. ஆகவே, அவைகளையெல்லாம் சந்தித்து, மேற்கொண்டு தொந்திரவை உண்டாக்கிக் கொள்ளுவதை விட, வெளியி லேயே பார்த்துக்கொண்டு, மேம்போக்காக வாழ்க்கையை ஓட்டுவதே மேல் என்றுதான் எல்லோரும் நினைக்கிறார்கள்.

அதற்காக, அவர்கள் பலவழிகளைக் கையாளுகிறார் கள். அதில் ஒன்று, அவர்கள் எப்பொழுதும், ஏதாவது

ஒன்றில் மனதை ஈடுபடுத்திக் கொண்டு இருக்கவே விரும்புகிறார்கள். மனதை ஈடுபடுத்த எதுவுமே இல்லையென்றால், இவர்களாகவே, ஏதாவது ஏற்படுத்திக்கொண்டு, பொழுதைக் கழிக்க எண்ணுகிறார்கள். உதாரணமாக, காலை செய்தித்தாளை ஒரு தடவை படித்து முடித்தாலும், பிறகும் எடுத்து வைத்துக்கொண்டு படிக்க ஆரம்பித்து விடுகிறார்கள்! அதில் என்ன அப்படி இருக்கிறது?

ஒரு 10 நாள் தினசரியை எடுத்துவைத்துப் பாருங்கள். எல்லாவற்றிலும், கிட்டத்தட்ட ஒரே மாதிரியான செய்திகள்தான் இருக்கும். கொஞ்சம் அரசியல், விபத்து, கற்பழிப்பு, கொள்ளை, கொலை, சாலை விபத்து, கொஞ்சம் விளையாட்டு, சினிமா அக்கப்போர் மற்றும் விளம்பரங்கள்! இவைகளின் இடம் மற்றும் செயல்பாடு தான் மாறி இருக்குமே தவிர, 100க்கு 90 சதம் மேற்கண்ட செய்திகள்தான் இருக்கும்! இதைப் படித்து, நீங்கள் அடையும் பயன் என்ன? அதிலும் பாதி செய்திகள் பொய் இது ஒரு முட்டாள்தனமான வேலை.

இப்படி ஏதாவது செய்துகொண்டிருக்கவே ஆசைப் படுகிறீர்கள். ஏனென்றால், நீங்கள் ஒன்றுமே செய்யாது இருந்தால், உங்கள் சக்தி வெளியே செல்லுவதற்குப் பதிலாக, உங்கள் உள்ளே செல்ல ஆரம்பிக்கிறது. அதை நீங்கள் விரும்புவதே இல்லை. நீங்கள் வெறுமனே உட்கார்ந்திருந்தால், அதுவே உங்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும். நீங்கள் ஒரு சீட்டாட்ட கிளப்புக்கோ, சினிமா பார்க்கவோ அல்லது சந்தைக்கோ, நண்பரிடம் அரட்டை அடிக்கவோ இப்படி எத்தனையோ வழிகளில், உங்கள் சக்தியை வெளியிலேயே விட விரும்புகிறீர்கள். மக்கள் தேவையின்றி, தன் சக்தியை வீணே செலவழிக்கிறார்கள். எப்பொழுதும் ஏதோ ஒன்றில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறார்கள்.

சிலபேர்கள், நான் ஒய்வாக இருக்கவே விரும்புகிறேன் என்பார்கள். ஆனால், உண்மையில் அவர்கள் ஓய்வாக இருப்பதில்லை. அப்படி உட்கார்ந்திருக்கும்

பொழுது, அவர்கள் மனம் பல எண்ணங்களில் தாவித்தாவி ஓடும். அதற்கு பதில் மேற்சொல்லிய ஏதாவது ஒரு செயலில் ஈடுபடுவது எவ்வளவோ நல்லது. ஏனெனில், அப்பொழுது அவர்களது எண்ணம் குறைந்தது அந்த செயலில் மட்டுமாவது இருக்கும். உண்மையில் ஒருவன் ஓய்வாக இருந்தால், அவன் தியானத்தில்தான் இருக்கமுடியும். ஆகவே, உண்மையில் யாரும் ஓய்வாக இருக்க விரும்புவதே இல்லை. தியானம் என்பதே உங்கள் உள்ளே செல்லுவது தான். இதை யாரும் சாதாரணமாக விரும்புவதே இல்லை.

இப்படி எங்கேயும் போகத் தோன்றாவிட்டால், கோவிலுக்கோ, மசூதிக்கோ, சர்ச்சுக்கோ சென்று, "ஹரே கிருஷ்ணா, ஹரே ராம்" என்று கூட்டத்தோடு கூட்டமாகப் பாடலாம், அல்லது ஒரு முட்டாள் பாதிரி சொல்லும் பிரசங்கத்தைக் கேட்கலாம். இப்படி எத்தனையோ வழிகள். எப்படியோ, உங்கள் சக்திக்கு ஏற்ப, உங்கள் விருப்பத்துக்கு ஏற்ப, எப்பொழுதும் ஏதாவது ஒன்றில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கவேண்டும் என்று நினைக்கிறீர்கள். அதாவது, எப்படியோ, உங்கள் சக்தி வெளியிலேயே சென்று கொண்டிருக்கவேண்டும். உங்கள் மனம் எதை யாவது பற்றிக்கொண்டிருக்கவேண்டும். இப்படித்தான் கோடிக்கணக்கானவர்கள் எண்ணி வாழுகிறார்கள்.

என்னிடம் சிலபேர்கள் வந்து, எப்படி தியானம் செய்வது என்று கேட்பார்கள். அதற்கு நான், "அதைப்பற்றி கவலைப்படாதீர்கள். ஆனால், எப்படி உங்கள் மனத்தை எதிலும் சாராமல், படியாமல் இருப்பது என்பதை அறிந்துகொள்ளுங்கள்" என்பேன். அப்படி ஒருவன் செய் முற்பட்டால், தியானம் தானாகவே செயல்பட ஆரம்பித்து விடும். அதுதான் தியானம் என்பதே. இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். உங்கள் மனம் எதுவுமே செய்யாமல் இருக்கும்பொழுது, உங்கள் சக்தி, எங்கே உண்டானதோ, அதைநோக்கித் தான் திரும்பிச் செல்ல ஆரம்பிக்கும்.

நீங்கள் குரானைப் படிக்கலாம், பைபிளைப் படிக்கலாம். வேதங்களை ஓதலாம். இவைகளையெல்லாம்,

உங்கள் மனம், மிகவும் புனிதமான காரியம், தெய்வீகமான செயல் என்று பெருமையாகச் சொல்லும். ஆனால், புனிதமோ, புனிதமற்றதோ, உங்கள் சக்தி வெளியேதான் பாய்ந்து கொண்டிருக்கிறது. அந்த செயலில்தான் உங்கள் மனம் வாழமுடியும். அதற்கு மாறாக, உங்கள் சக்தி, தன் மையத்தை நோக்கிச் சென்றால், உங்கள் மனம் இறக்க ஆரம்பித்துவிடும். இதையும் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். மனம் எப்படி தானே தற்கொலை செய்து கொள்ள விரும்பும்?

பொதுவாக மக்களில் பெரும்பாலோர் அறியாமையிலும், சிந்தனையற்றும்தான் செயல்படுகிறார்கள். அதே சமயம், அப்படி இருப்பதையேதான் விரும்புகிறார்கள். ஏனெனில், தன் உள்ளே, தன் சக்தி பாயும்பொழுது, அங்கு பல குழப்பங்களை சந்திக்கவேண்டி வரும். அவைகள் பல பிறவிகளாக சேர்த்து வைக்கப்பட்டவை, அடக்கி வைக்கப்பட்டவை. அதற்கு உங்களுக்கு மிகுந்த தைரியம் தேவை. அது சாதாரண வகையைச் சார்ந்தது இல்லை. நீங்கள் இப்படி தியானத்தில் ஆழ்ந்து செல்ல, உங்களுக்கு முழுமையான தைரியம் வேண்டும்.

ஆனால், நீங்கள் அப்படி தியானத்தில், அமைதியாக உட்கார்ந்திருந்தால், பலர் உங்களை கேலி செய்வார்கள். உள்ளே என்ன இருக்கிறது? என்ன ஏதாவது நாவலை உள்ளே படிக்கிறீர்களா? இல்லை, உங்கள் மூன்றாவது கண்ணைத் திறக்க முயற்சி செய்கிறீர்களா? இப்படி.

ஆனால், எல்லோரும், வெளியிலேதான் எல்லாம் இருக்கின்றன, உள்ளே ஒன்றுமே இல்லை, உள்ளே ஒரே இருட்டு மயம்தான் என்று நினைக்கிறார்கள். ஆனால், உண்மை இதற்கு மாறானது. உள்ளேதான், நீங்கள் உண்மையில் அறியவேண்டியது, உணரவேண்டியது அனைத்தும் இருக்கின்றன. வெளிஉலகம் என்பது ஒரு கனவுக்குச் சமம்தான். ஆனால், மேல்நாட்டவர்கள், கீழைநாட்டு மக்களின் மனம் வியாதியுற்று, குறுகிய நிலையில்

இருக்கிறது என்று அபிப்ராயப் படுகிறார்கள். வெறுமனே உட்கார்ந்து கொண்டு, உள்ளே பார்ப்பதினால், நீங்கள் அடையக்கூடியது என்ன என்று அவர்கள் நினைக்கிறார் கள்.

டேவிட் ஹூம் (DAVID HUME) என்ற ஒரு சிறந்த ஆங்கிலேய தத்துவவாதி, கீழைநாட்டு உபநிஷத்தைப் படித்துவிட்டு, தியானம் செய்ய முயற்சித்தார். ஆனால், ஆழமாகச் செல்லமுடியவில்லை. சிறிது செய்துவிட்டு, "இது எவ்வளவு அலுப்பான வேலை. எண்ணங்கள் மாறி, மாறி வருகின்றன. அதைப்போல உணர்வுகளும் வருகின்றன. இவைகளை வெறுமனே, பார்ப்பதால், என்ன பிரயோஜனம்?" என்று கூறினார்.

இவரைப் போலத்தான், பெரும்பாலான மக்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், ஹீம் இன்னும் கொஞ்சம் பொறுமையாக, முயற்சி செய்திருந்தால், எண்ணங்களும், உணர்வுகளும் அடங்கி வருவதை கண்டு கொண்டு இருப்பார். ஆரம்பத்தில் எதுவுமே கஷ்டம்தான். மேலும், தியானத்திற்கு அவசியம் பொறுமை வேண்டும். ஆனால், ஹீம் போன்றவர்கள், இன்னும் பொறுமையாக முயற்சி செய்திருந்தால், எண்ணங்கள், உணர்வுகள் மறைந்து, ஒரு கட்டத்தில் ஒன்றுமே அற்ற (EMPTY) நிலையை அடைந்திருப்பார்கள். ஆனால், அதைக்கண்டு மிகவும் பயப்படுவார்கள்! முன்பு, கொஞ்சமாவது எண்ணங் கள் இருந்தன. பரவாயில்லை இப்பொழுது ஒன்றுமே இல்லையே என்று திகைப்பார்கள். இந்த ஒன்றுமே இல்லாத நிலையினால், என்ன பிரயோஜனம்? இது என்ன முட்டாள்தனம் என்றுதான் நினைத்திருப்பார். ஏனென்றால், அவர் மிகவும் படித்த அறிவாளி, தர்க்கவாதி. அறிவும், தர்க்கமும், மனம் சம்மந்தப்பட்டது. இவர்கள் ஒரு போதும் எண்ணங்களற்ற நிலையை அல்லது மனமற்ற நிலையை ஒரு போதும் ஒத்துக் கொள்ளமாட்டார்கள்.

ஆனால், அவர், எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லாமல், தன் உள்ளே உள்ள இருட்டை, தைரியமாக எதிர்கொண்டிருக்க வேண்டும். உங்கள் கண்கள் வெளிச்ச மான வெளிஉலகத்திலேயே பார்த்துப் பழகிவிட்டது. திடீரென்று, உங்கள் உள்ளே பார்க்கும்பொழுது, அது முதலில் இருட்டாகத் தான் தெரியும். அதாவது, சூரிய ஒளியிலிருந்து, உங்கள் வீட்டின் உள் அறைக்குச் சென்றால், எப்படி ஒரே இருட்டாக இருக்குமோ, அப்படி உணரு வீர்கள். அதற்கு உங்களுக்குக் கொஞ்சம் அவகாசம் தேவை. அந்த சூழ்நிலைக்கு ஏற்ப, உங்கள் கண்கள், தன்னை தயார்படுத்திக் கொள்ளவேண்டும். பிறகு மெல்ல மெல்ல வெளிச்சத்தை உணருவீர்கள். இன்னும் கொஞ்சம் பொறுமையாக இருந்தால், அந்த அறையில் உள்ள பொருள்கள் அனைத்தும் இயல்பாகத் தெரிய ஆரம்பிக்கும்.

நீங்கள், உங்களை அவசரமாக அறிந்துகொள்ள முடியாது. அது ஒரு போதும் நடக்காது. அதற்கு, மிகுந்த பொறுமையும், ஒய்வுத்தன்மையும் வேண்டும். பிறகு, எந்த ஆதாரமும் இல்லாமல், மெல்லிய ஒளி ஒன்று உங்கள் உள்ளே ஊடுறுவதை உணருவீர்கள். அதில் எந்த ஜீவாலை யும் இருக்காது. இருள் மறைந்து, காலை ஆரம்பிக்கும் பொழுது, எப்படி மங்கலான, அமைதியான, குளிர்ச்சியான ஒளி இந்த உலகத்தில் பரவுகிறதோ, அதைப்போல, அந்த ஒளி உங்கள் உள்ளே மிளிர ஆரம்பிக்கும். இதைத்தான் ஹிந்துக்கள் 'சந்தியா' (SANDHYA) என்று அழைப்பார்கள். சந்தியா என்றால், இருட்டும், ஒளியும் கலந்த ஓர் ஆதாரமற்ற மங்கலான ஒளி என்று பொருள். அந்த ஒளி எங்கிருந்து வருகிறது என்று யாருக்கும் தெரியாது. இந்த மங்கிய நிலவு போன்ற ஒளியில், நீங்கள் "யார்" என்பது விளங்க ஆரம்பிக்கும். நீங்கள்தான் அந்த ஒளி. அந்த நிலையில், பார்ப்பவனும், பார்க்கப்படும் பொருளும் மறைந்துவிடுகின்றன. வெறும் அந்த நிழல் போன்ற ஒளி மட்டும் தன் அறிவாய், தன் உணர்வாய், மிக விழிப்பாக

இருக்கும். அது தன்னைத்தானே பார்த்துக்கொள்ளுகிறது. ஆகவேதான், பார்ப்பவனும், பார்க்கப்படும் பொருளும் மறைந்துவிடுகின்றன என்று சொன்னேன்.

ஆனால், இந்த நிலையை அடைய கொஞ்சம் காலம் ஆகும். அதற்கு தீவிர தியானமும், இடைவிடாத முயற்சியும் தேவை. முதலில், நீங்கள் உங்கள் உள்ளே செல்லும் பொழுது, வெறும் குழப்பத்தையும், இருட்டையும் தான் சந்திப்பீர்கள். இந்த கட்டத்தை, ஒருவன் தைரியமாக, மனசலிப்பின்று, எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லாமல், பொறுமையாக, அமைதியாகக் கடக்கவேண்டும். நீங்கள்தான், நீங்கள் மட்டும்தான், இதைச் செய்யவேண்டும். உங்களுக்காக உங்களுடைய அன்புமயமான குரு கூட செய்ய முடியாது. இதை நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். ஒருவனது பிறப்பும், ஞானமும், இறப்பும் தனிப்பட்ட செயல்கள். அதை வேறுயாரும் உங்களுக்காக செய்ய முடியாது. நீங்கள் அந்த ஞானப் பாதையில் செல்ல, ஒரு மாஷ்டர் உங்களை ஊக்கப்படுத்தலாம். சரியான வழியைக் காண்பிக்கலாம். அவ்வளவுதான்.

ஒருசமயம், புத்தரும் அவரது சீடர்களும் ஒரு நகரத்திலிருந்து, மற்றொரு நகரத்திற்குச் சென்றார்கள். ஆனால், வழியை தவற விட்டுவிட்டார்கள். அப்பொழுது அங்குள்ளவர்களிடம், பக்கத்து நகரம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "சுமார் இரண்டு மைல் தூரம்தான்" என்றார்கள். இந்தியாவில், கிராமவாசிகளிடம், தூரத்தைப் பற்றிக்கேட்டால், மேற் சொல்லியபடி தான் கூறுவார்கள். அது 50 மைலோ அல்லது 20 மைலோ இருந்தாலும், அவர்களைப் பொருத்தவரையில் 2 மைல்தான்! புத்தாவும், அவரது சீடர்கள் ஆனந்தா உட்பட 2 மைல் தூரம் நடந்தபிறகு, எந்த நகரத்தையும் காணாமல், அங்குள்ளவர்களிடம் மறுபடியும் கேட்டார்கள். அவர்களும், அது இன்னும் 2 மைல் தூரம்தான் இருக்கிறது என்று சொன்னார்கள் பிறகு

2 மைல் தூரம் நடந்து சென்று பார்த்து, எதுவுமே தென்படாத காரணத்தால், ஆனந்தா மிகவும் கோபம் அடைந்து, "என்ன, இந்த முட்டாள் ஜனங்கள், நம்மை ஏமாற்றுகிறார்களா என்ன?" என்று கேட்டார்.

அதற்கு புத்தர், "நீ அவர்களைப் புரிந்து கொள்ள வில்லை. நான் எப்படி இருக்கிறேனோ, அப்படியேதான் அவர்களும் இருக்கிறார்கள்! அவர்களுடைய கருணை உள்ளத்தால், நாம் தைரியம் இழக்கக்கூடாது என்று, அவர்கள் நம்மிடம் "2 மைல் தூரம்தான்" என்று சொல்லி வருகிறார்கள். அவர்கள் உண்மையிலேயே 50 அல்லது 100 மைல் என்று உண்மையைச் சொன்னால், நீ வெறுப்புற்று இங்கேயே உட்கார்ந்து விடுவாய். ஏன், இறந்து கூட விடுவாய். உன்னைக் காப்பாற்றவே உனக்குத் தைரியம் ஏற்படுத்தவே, அப்படி சொல்லுகிறார்கள். வேறொன்றும் இல்லை" என்றார்.

அதைப்போல, ஒரு மாஷ்டர் உங்களுக்குத் தைரியம் கொடுத்து ஊக்குவிக்கலாம். அப்பொழுதுதான் நீங்கள் ஆத்மீகத்தில் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறுவீர்கள். அதற்காக, உங்கள் உள்ளே உள்ள குழப்பத்தையும், இருட்டையும் அவர் உங்களுக்காக தானே சந்திக்க முடியாது. ஆனால், ஒரு மாஷ்டரின் உதவி இல்லாமல், நீங்கள் முன்னேறுவது கடினம். யார் அவ்வப்பொழுது, உங்களுக்குத் தைரியமும், ஆறுதலும், ஊக்கமும் கொடுத்துக் கொண்டிருக்க முடியும்? யார் வந்து, "இதோ இன்னும் 2 மைல் தான், 2 மைல் தான்" என்று சொல்லி உங்களுக்குத் தைரியம் சொல்ல முடியும்?

லாசு (LAO-TZE) சொல்லுகிறார், "ஆயிரம் மைல் யாத்திரையை, நீங்கள், ஒரு சமயத்தில் ஒரு அடி வீதம் வைத்துதான் அடையவேண்டும்" என்று.

ஆகவே, நீங்கள் உங்கள் உள்ளே செல்லும்பொழுது, உங்களுடைய அடக்கி வைக்கப்பட்ட துன்பங்கள், ஆசைகள் அனைத்தும் மேலே வர ஆரம்பிக்கும். அதனால் நீங்கள் முதலில் மிகவும் துன்பம் அடைவீர்கள், பயப்படு

வீர்கள். அவைகள் உங்களுக்கு முதலில் அமைதியை உண்டாக்காது. அதற்குத்தான் ஒரு குரு அவசியம் என்கிறேன். இந்த நரகத்தை நீங்கள் கடந்துதான் ஆகவேண்டும். வேறுவழியில்லை. இதைத் தாண்டத் தயங்கினால், அதன் பின்னே உள்ள சொர்க்கத்தை உங்களால் அடையவே முடியாது. அந்த சொர்க்கத்துக்கு, இந்த நரகம்தான் வாயில். இதில் நுழைந்துதான், அங்கு செல்லவேண்டும். ஆகவே, நரகத்தின் வழியாக சொர்க்கத்தை அடையவேண்டும். இருட்டைக் கடந்துதான், காலை஌ய அடையமுடியும். வேறுவழி இல்லை.

உங்கள் உள்ளே உள்ள குழப்பங்களை, உங்களது மனம் சந்தேகித்துதான், உங்கள் சக்தியை உள்ளே செல்ல அது அநுமதிப்பதில்லை. அவைகளை உங்கள் மனம் சந்தித்தால், அது கிட்டத்தட்ட பைத்திய நிலைக்கே சென்று விடும். அப்பொழுது தான் ஒரு குரு, தேவைப்படுகிறார். அதனால் தான், உங்கள் மனமும், பல தந்திரங்களைச் செய்து, உங்களை திசை திருப்பியவாறே இருக்கும். உங்களை தியானம் செய்ய லேசில் அநுமதிக்காது. ஏனெனில், தியானம் என்பது அதற்கு சாவுமணி! அப்படி இருக்கும்பொழுது, அது தெரிந்தே எப்படி தியானத்தை அநுமதிக்கும்?

இப்பொழுது ஷேக் சாதியின் (SHEIKH SAADI) கதையைப் பார்ப்போம். இது சிறிய நிகழ்ச்சிதான். இருந்தாலும், இதில் அடங்கிய அர்த்தம் மிக ஆழமானது, மிக எளிமையானது.

கதையில், "ஒரு மனிதனுக்கு அவலட்சணமான ஒரு பெண் இருந்தாள். அவளை யாருமே கலியாணம் செய்து கொள்ள விரும்பவில்லை. ஆகவே, அவளை ஒரு குருடனுக்குக் கட்டிவைத்தான்"

பெரும்பாலும், உங்களை வந்து அடையும் பொருள்களை, நீங்கள் ஆழ்ந்து பார்ப்பது இல்லை. அந்த வகையில், நீங்களும் குருடனாகவே இருக்கிறீர்கள். நீங்கள் ஏற்கனவே, இந்த அழகற்ற உலகத்தை விரும்பி மணந்துகொண்டீர்கள்.

இந்த உலகத்தில் உள்ள பணம், பதவி, அரசியல், பேராசை என்று இப்படி எவ்வளவோ உலகப் பொருள்களை மணந்து இருக்கிறீர்கள்! ஆனால், அவைகளுடைய அவலட்சணம், உங்கள் கண்களுக்குப் புலப்படவில்லை.

ஒரு பேராசைப் பிடித்த மனிதனை, கவனித்துப் பார்த்திருக்கிறீர்களா? அவன் எவ்வளவு அவலட்தணமாக இருக்கிறான்?! அவனிடம் எந்த கவர்ச்சியோ, ஈர்ப்போ இருக்காது. ஏனெனில், அந்த பேராசை அவனுடைய கவர்ச்சியை அழித்துவிட்டது. ஒரு பேராசை பிடித்த மனிதன் எப்பொழுதும் தீவிரமாகவும், எதிர்த்து நிற்பவனாக வும், கிட்டத்தட்ட பைத்தியம் பிடித்தவன் போல் இருப்பான். ஆகவேதான், இந்த பேராசைப் பந்தயத்தில், எவன் ஒருவன் தீவிரமாகவும், பிடிவாதமாகவும், பைத்தியம் போல் இருக்கிறானோ, அவன்தான் அதை அடையமுடியும்.

உதாரணமாக, ஹிட்லர், மாசேதுங், ஸ்டாலின் போன்றவர்களைப் பாருங்கள். அவர்களுடைய பதவி உயர்வுக்காக, அதைத் தக்கவைத்துக் கொள்ளுவதற்காக, ஒரு பைத்தியம் போல், எத்தனை லட்சம் மக்களை கொன்று குவித்தார்கள். அவர்களுடைய உயர்ந்த பீடம், மனித இரத்த ஆற்றில் மிதந்தது. அவர்கள் எப்பொழுதும் அதிகார பலத்தோடு இருப்பதற்காக, எவ்வளவு கோழைத்தனமான காரியங்களைச் செய்தார்கள்! எவ்வளவு முட்டாள்தனமான காரியங்களைச் செய்தார்கள்! ஏனெனில், பார்ப்பதற்கு அவர்கள் அதிகார வெறியோடு இருந்தாலும், அவர்களது மன ஆழத்தில், எப்பொழுதும் ஒரு பய உணர்வோடுதான் இருந்தார்கள். எந்த நிமிடமும், தான் தாக்கப்படலாம் என்ற அச்ச உணர்விலேதான் இருந்தார்கள். இது ஒரு வாழ்க்கையா?

ஆகவே, ஒருவன் அரசியலில் உயர்ந்த பதவியை எட்டியவன் பெரும்பாலும் ஒரு கோழையாக, பைத்தியத் தன்மை உடையவனாகவே இருப்பான். அவன் எப்பொழு தும் வெறி பிடித்து இருப்பான். தன் பதவிக்காக எதையும் செய்யத் தயங்கமாட்டான். இவர்களை பைத்தியக்கார

ஆஸ்பத்திரியில்தான் அடைக்கவேண்டும். ஆனால், மக்களின் முட்டாள்தனத்தால், அந்தஸ்த்தோடு இருக்கிறார்கள். இது மிகவும் வேதனைக்குரியது. இவர்கள் தான் யுத்தங்களை ஆரம்பித்து, மக்களை எப்பொழுதும் கஷ்டத்திலேயே வைத்திருப்பவர்கள். நீங்களெல்லாம் சேர்ந்து, ஒரு பைத்தியக்காரன் கையில், கத்தியை கொடுத்துவிட்டீர்கள். அதைக்கொண்டு, எவ்வளவு சாதாரண, ஒன்றும் அறியாத மக்களைக் கொன்று குவித்தார்கள். என்ன முட்டாள்தனம்!

ஆகவே, எப்பொழுதாவது, உங்களிடம் பேராசை எண்ணம் எழுந்தால், உஷாராகி, அப்பொழுது உங்கள் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். உங்கள் முகத்தில் ஒரு அவலட்சணம் பரவுவதைக் காண்பீர்கள். ஒரு பாறையின் கவர்ச்சியைவிட, ஒரு விலங்கின் கவர்ச்சியைவிட, உங்களது முகம் விகாரமாவதை உணருவீர்கள். ஒரு மனிதன், பணத்தின் மேல் பேராசை கொண்டு அலைந்தால், அவன் முகத்தை, அவன் கண்களை உற்றுப்பாருங்கள். எவ்வளவு அசிங்கமாக இருக்கும். எந்தத் தீவிர எண்ணங்களும், உங்கள் அழகை, கவர்ச்சியை கெடுக்கவே செய்யும். அதைப்போல, ஒரு கஞ்சனது முகத்தைப் பாருங்கள். ஐயோ, உலகத்தில் அவனைவிட, அவலட்சணம் உடைய வஸ்து, வேறு எதுவும் இருக்கமுடியாது!

ஆகவே, நீங்கள் குருடாக இல்லாமல் இருந்தால், இந்த உலக அவலட்சணங்களை, நிச்சயம் மணந்து கொண்டிருக்கமாட்டீர்கள். ஆனால், இதை ஒருவன் எவ்வளவு சீக்கிரம் புரிந்துகொள்ளுகிறானோ, அவ்வளவு சீக்கிரம் அதிலிருந்து விடுதலை அடைவான். அந்த உணர்வு, கொஞ்சமாவது உங்களிடம் ஏற்பட்டால்தான், நான் மேற்கொண்டு உங்களுக்கு உதவமுடியும். இல்லாவிட்டால், உங்களைப் பொருத்தவரையில், நான் சொல்லுவது அனைத்தும் குப்பைக்குச் சமம்தான். அது உங்கள் உள்ளே சென்றவேகத்தில், வெளியே சென்றுவிடும்!

இந்த அவலட்சணங்களை, நீங்கள் தியானத்தில் ஆழ்ந்து செல்லும்பொழுது, கண்டிப்பாக உணருவீர்கள். உங்களுடைய அவலட்சணத்தின் பரிமாணத்தைக் கண்டு, நீங்களே அதிர்ச்சி அடைவீர்கள். அப்பொழுது, நீங்கள் அன்பாக இருந்தாலும், அந்த அன்பும் அவலட்சணம் உடையதாகவே இருக்கும்!

இப்பொழுது கதையில், "ஒரு கண்வைத்தியர் அவனுக்கு சிகிச்சை செய்து பார்வை அளிக்கமுடியும் என்றார். ஆனால், அந்தப் பெண்ணின் தகப்பனார் அதற்கு இணங்கவில்லை. ஏனெனில், பார்வை கிடைத்தால், தன் பெண்ணின் அவலட்சணத்தைக் கண்டு எங்கே அவளை விவாகரத்து செய்து விடுவானோ என்று பயந்தார்".

இந்தத் தகப்பனார் என்பவர் யார்? இந்தத் தகப்பனாரை, உங்கள் உள்ளத்தில் தேடி இருக்கிறீர்களா? அவர்தான் உங்கள் 'அகங்காரம்' (EGO). உங்களுடைய சகல துன்பங்களுக்கும், இவர்தான் காரணம். இவர், உங்கள் கண்களை சரிசெய்ய அனுமதிக்கமாட்டார். இதோ; இங்கு நான் அந்த வைத்தியராக இருக்கிறேன். எத்தனை பேர்கள், உங்கள் கண்களை சரிசெய்து கொள்ளுவதற்குத் தயாராக இருக்கிறீர்கள்? அதைத் தடுப்பது உங்களிடம் யார்? உங்கள் மனம்தான், உங்கள் அகங்காரம்தான், இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

உங்கள் அகங்கார மனம் என்ன சொல்லுகிறது, "அவரிடம் எல்லாவற்றையும் கொடுத்து சரணாகதி அடையாதே. உன்னுடைய தனித்தன்மையை இழக்காதே. சரணாகதி அடைந்தால், நீ ஒரு அடிமையாகி விடுவாய். இது தேவையற்ற வீண்வேலை" இப்படித்தான் அது மிகவும் பகுத்தறிவோடு தர்க்கம் பண்ணும்.

ஆனால், அதன் அடிப்படை கருத்து என்னவென்றால், உங்களை எப்பொழுதும் குருடாகவே வைத்திருக்க வேண்டும் என்பதே. வேறு ஒன்றும் இல்லை. எப்பொழுது உங்கள் கண்கள் திறக்கப்படுகிறதோ, அப்பொழுது உங்கள்

அகங்காரம் ஒரு போதும் உங்களிடம் வாழமுடியாது. அது ஒரு இருட்டைப் போன்றது. நீங்கள் வெளிச்சத்தை அங்கு கொண்டுவந்தால், இருட்டுக்கு அங்கு என்னவேலை? ஆகவேதான், அது பயப்படுகிறது. புத்தரின் அருகில், வெகு சிலரே செல்லமுடியும். ஏனெனில், அவரது ஒளி, உங்களையும் அடையும். அதற்கு உங்கள் இருட்டு மனம் இடங்கொடுக்காது. பல தடங்கல்களை ஏற்படுத்தும். பல ஆசைகளைக் கொண்டு உங்களைத் திசை திருப்ப முயலும்.

என்னைப் புரிந்துகொள்ளாமலே, என்னுடைய எந்த புத்தகத்தையும் படிக்காமலே, ஏன் என்னைப் பார்க்கக் கூட இல்லாமலே, நான் உண்மையிலேயே, இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பதில் அக்கரைக் காட்டாமலே, எனக்கு எதிராக எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்! இது எனக்கு ஆச்சரியத்தையேக் கொடுக்கிறது. எதிரியாக இருப்பதற்குக் கூட, ஒருவன், என்னை நெருங்கி வரவேண்டும். என்னை உற்றுப் பார்க்கவேண்டும். நான் செய்வதில் எது அவனுக்கு உடன்பாடில்லை என்று புரிந்துகொள்ளவேண்டும். ஆனால், என்னைப் பார்க்காமலே, என்னைப் புரிந்துகொள்ளாமலே, என்னை எப்படி அவர்களது எதிரியாகப் பாவிக்கமுடியும்? ஒருசிலர் என்னைக் கொல்லக்கூடத் தயாராக இருக்கிறார்கள்!

இவர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்களிடம் உள்ள அந்த அகங்காரம்தான், என்னைக் கண்டு பயப்படுகிறது, என்னை வெறுக்கிறது. அது என்னை சந்திக்கவோ, என்னை கேட்கவோ அச்சப்படுகிறது. ஏனெனில், என்னை நெருங்கினால், அது அதன் மரணத்தை நெருங்குவதற்கு சமம். ஆகவே, அவர்கள் எப்பொழுதும் தன் குருட்டுத் தன்மையிலேயே, தன் அறியாமையிலேயே இருக்கத்தான் விரும்புவார்கள்.

ஆகவே, அந்த கதையில் உள்ள தகப்பனார், உங்கள் மனத்தில் உள்ள அகங்காரத்தைத் தவிர வேறுயாரும் இல்லை.

சாதி முடிவில், "ஒரு அவலட்சணமான பெண்ணின் குருட்டுக் கணவன்தான் அவளுக்கு சிறந்த துணை" என்று சொல்லுகிறார்.

நீங்கள் ஒரு அவலட்சணமான பெண்ணின் கணவனாக இருந்தால், உங்கள் குருட்டுத்தன்மையை காப்பாற்றியே ஆகவேண்டும். அப்படி இல்லாமல், நீங்கள் பார்வை பெற்றுவிட்டால், அந்த அவலட்சணமான மனைவியை எதிர்கொள்ள வேண்டிவரும். அதைப்போல, நீங்கள் உங்கள் குருட்டு அறியாமையிலிருந்து, விழிப்பு நிலையை அடைந்தால், நீங்கள் உங்கள் உள்ளேயுள்ள அகங்காரம், பேராசை, காமம், கோபம், ஏமாற்றம் போன்ற அவலட்சணங்களை சந்திக்கவேண்டி வரும். இது ஆரம்பத்தில் மிகுந்தத் துன்பத்தையேக் கொடுக்கும். அந்தத் துன்பம்தான் உங்களது உண்மையான நரகம். இதைத்தவிர நரகம் என்று வேறு எதுவும் இல்லை. ஆனால், இந்த நரகத்தைக் கடந்தால்தான் உங்கள் சொர்க்கத்தை அடைய முடியும். வேறு வழியே இல்லை. அந்த சொர்க்கத்தை அடைய இந்த கஷ்டத்தில், துன்பத்தில் ஒருவன் நுழைந்து தான் செல்லவேண்டும். அந்த கஷ்டத்திலும், துன்பத்திலும் செல்லுவது, உங்களுக்கு ஒரு நீண்ட யாத்திரை போல் தோன்றும். ஏனெனில், நீங்கள் அதை விரும்பவில்லை. அதில் நீங்கள் களைப்புற்று, சலிப்புற்று தளர்ந்து விழுந்துவிடலாம். ஆனால் தொடர்ந்து முயற்சி செய்து முன்னேறினால், அந்த இறுதி கட்டத்தை திடீரென்று அடைந்துவிட்டதை உணருவீர்கள். அப்பொழுது ஆப்ரஹாம் மாஸ்லோ (ABRAHAM MASLOW) கூறியது போல், "ஓ ஹா" என்று ஆனந்தக் கூச்சலிடுவீர்கள். அப்பொழுது நீங்கள் பட்ட துன்பங்கள் அனைத்தும் மறைந்துவிடும். நீங்கள் இப்பொழுது ஓர் புதிய பிறவியை எடுத்திருப்பதை உணருவீர்கள்.

நீங்கள் உங்கள் உள்ளத்தளவில் படும் துன்பம், முதலில் தாங்கமுடியாததாக இருக்கும். அதனால்தான் பெரும்பாலோர், தங்கள் உள்ளே செல்ல விரும்புவதே

இல்லை. சாக்ரடீஸ் எப்பொழுதும், "உங்களை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்" என்றுதான் சொல்லுவார். ஆனால், யாரும் அவர் சொன்னதை கேட்டதாகத் தெரியவில்லை! ஏனெனில், அது மிகவும் துன்பம் தரக்கூடியது என்று அவர்களுக்கு மிக நன்றாகத் தெரியும்!

பிறப்பு என்பது மிகவும் துன்பம் தரக்கூடியது. ஆனால், அதற்கு பயந்து ஒரு குழந்தை தன் தாயின் கர்ப்பப்பையிலே இருந்தால், என்ன ஆகும்? பிறகு வாழ்க்கை என்ற சொர்க்கம் எப்படி மலரும்? ஆகவே, நீங்கள் சொர்க்கத்தை அடைய, முதலில் இந்தத் துன்பம் தரக்கூடிய அகங்காரத்தைக் கடந்துதான் செல்லவேண்டும். அது உங்களை சுலபத்தில் மேலே செல்ல அனுமதிக்காது. அவைகள் உங்களை விட்டு நீங்க ஒருபோதும் சம்மதிக்காது. நீங்களும் அதைவிட்டு பிரிய விருப்பப்படமாட்டீர்கள். அப்பொழுது அங்கு ஒரு மரண பேராட்டம் நடத்த வேண்டிவரும். அதற்கு உங்களுக்கு மிகுந்த தைரியம் வேண்டும்.

ஒரு விதை, விதையாக எவ்வளவு காலம் வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால், அது முளைத்து, செடியாகி, பூக்களை சொறிந்து, கனிகளை கொடுத்தால் தான், அதன் வாழ்வு முழுமை பெறும். அப்பொழுது அது பல அபாயங்களைக் கடக்க வேண்டிவரும். அதற்கு பயந்தால், அது விதையாகவே இருக்கவேண்டியதுதான். 10,000 வருடங்களுக்கு முன் உள்ள விதைகளை மொகன் ஜோதாரோவில் (MOHENJOODARO) கண்டு எடுத்தார்கள்.

அவைகள் இன்றும் முளைக்கும் சக்தியோடு இருந்தன! சைனாவில் உள்ள சில குகைகளில் காணப்பட்ட விதைகள் பத்து லட்சம் வருடங்களுக்கு முந்தியவை. ஆனால், இன்றும் முளைவிடும் தன்மையில் இருக்கின்றன! என்ன விந்தை!

நீங்களும் அந்த விதையின் நிலையிலேதான் இருக்கிறீர்கள். பல பிறவிகளாக, பல லட்சம் ஆண்டுகளாக,

பல நாட்டில் பிறந்து, இறந்து வந்த கொண்டே யிருக்கிறீர்கள். ஆனால், உங்கள் நிலையில் எந்த மாற்றமும் இல்லை! நீங்கள், தைரியமாக உங்களைக் கடந்து, ஒரு செடியாக மாற முயற்சிக்கவே இல்லை. அது ஒரு மிகத் தைரியமான தாவலுக்கு (JUMP) சமம். ஏனெனில், அந்த விதையாகிய நீங்கள், அதன் மேல் தோலை கிழித்துக் கொண்டு வெளியே வரவேண்டும். அதற்கு மிகுந்த தைரியம் வேண்டும். ஏனெனில், இதுவரை உங்களுக்குக் காவலாக, பாதுகாப்பாக இருந்தத் தோலை துச்சமென மதித்து, கிழிக்கவேண்டும். அப்படி வெளியே வரும் செடி, மிகவும் மென்மையானதாகவே இருக்கும். அதற்கு காற்று, மழை, விலங்குகள், பூச்சிகள் முதலியவற்றால் எந்த நேரத்திலும் ஆபத்து ஏற்படலாம். அது மெல்ல வளர்ந்து, செடியாவது என்பது ஒரு தீரச் செயல்தான். ஏனென்றால், அந்த செடிக்கு, இந்த உலகத்தில் உள்ள ஆபத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. அது வாழ பயந்தால், விதையாகவே இருக்க வேண்டியதுதான்.

அதைப்போல நீங்கள் உண்மையாக வாழ பயப்படுகிறீர்கள். இப்பொழுது நீங்கள் வாழும் வாழ்க்கை, அந்த விதைக்கு சமம் தான். மிகவும் மேலோட்டமானது. உங்கள் வாழ்க்கை அனைத்தும் வெளி உலகத்திலேயே மையம் கொண்டு உள்ளது. நீங்கள் உங்கள் உள்ளே தைரியமாகச் செல்லுவதுதான், அந்த விதை, முளைப்பதற்கு சமமாகும். ஆகவே, நீங்கள் உங்கள் அகங்காரத் தன்மையி லிருந்து, அறியாமையிலிருந்து விடுதலை அடையுங்கள். இந்த அகங்காரம் தான், விதையாகிய உங்களுடைய மேல் ஓடு, பாதுகாவலன் எல்லாம். நீங்கள் முளைவிட, இதை கிழிக்கத்தான் வேண்டும்.

முதலில், நீங்கள் கஷ்டத்தைத் தான் சந்திக்க வேண்டும். ஆனால், இது நிரந்தரமல்ல. நான் சத்தியம்

செய்து சொல்லுகிறேன். ஆகவே பயப்படவேண்டாம். நீங்கள் அந்தத் துன்பத்தை முழுமையாக எதிர்கொண்டால், வெகு சீக்கிரம், அதைக் கடந்து சென்று விடுவீர்கள். ஏன், அது இப்பொழுதே கூட நடக்கலாம். இந்த கணம், அந்த சகல துன்பங்களையும், முழுமையாக, தைரியமாக எதிர் கொண்டால், அதை ஒரே தாவலாகத் தாவி கடந்து செல்லுவீர்கள்.

அந்தத் துன்பத்தில், நீங்கள் சுத்தமாக்கப்படுகிறீர்கள். அதாவது உங்களுடைய அவலட்சணமான அகங்கார குணங்கள், நடத்தைகள் அனைத்தும் எரிந்து சாம்பலா கின்றன. அதன்பிறகு நீங்கள் புடம் போட்ட தங்கமாகி விடுகிறீர்கள். அது உங்களை ஒருக்காலும் அழிக்காது. ஆகவே பயப்பட வேண்டாம். உங்கள் உள்ளே உள்ள குப்பை கூழங்களைத்தான் அது அழிக்கும். அதன்பின், உங்கள் இயற்கைத் தன்மை, உண்மைத் தன்மை மாசு மறுவின்றி ஒளிர ஆரம்பிக்கும். அந்த சுத்தமான உணர்வில், நீங்கள் சொர்க்கத்தை, மோட்சத்தை, பூர்ண விடுதலையை அடைவீர்கள். அதை நீங்கள் 'கடவுள்' என்று அழைக்க லாம். ஏன் அந்த நிலையில், நீங்களே கடவுளாகத்தான் காட்சி அளிக்கிறீர்கள்.

## 2. கடல்பறவைகளை விரும்பும் ஓர் மனிதன்
### (A MAN WHO LOVED SEAGULLS)

கடல்பறவைகளை நேசிக்கும் ஒரு மனிதன் ஓர் கடற்கரையோரம் வசித்து வந்தான். ஒவ்வொரு நாள் காலையிலும், அவன் கடலுக்கு அருகில் சென்று அங்கு அந்த பறவைகளோடு விளையாடுவான். அந்த பறவைகளும், நூற்றுக்கணக்கில், அவனோடு விளையாட விரும்பும்.

ஒருநாள், அவனுடைய தகப்பனார் அவனிடம் "உன்னைச் சுற்றி பல கடல் பறவைகள் சப்தமிட்டு விளையாடுவதை தினமும் பார்க்கிறேன். அதில் சிலவற்றை, என்னிடம் கொண்டு வா. நானும் அதனுடன் விளையாட ஆசைப்படுகிறேன்" என்றார்.

அடுத்த நாள், அவன் கடற்கரைக்குச் சென்ற பொழுது, அந்த பறவைகள் அனைத்தும் அவன் தலைக்கு மேல் ஆட்டம் போட்டன. கீழே ஒரு பறவைகூட இறங்கி வரவே இல்லை.

ஒன்றை எப்பொழுதும் நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். வாழ்வின் மிகப் பெரிய ரகசியம் என்ன வென்றால், வாழ்வு என்பது உங்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு விலை மதிப்பற்ற வெகுமதி என்பதே. அதற்கு முதலில் நீங்கள் தகுதி இல்லாமல் இருந்தும், அதை அடைய உங்களுக்கு எந்த உரிமையும் இல்லாதபோதும், அது உங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அதை நீங்கள் உழைத்து சம்பாதிக்கவில்லை. இதை நீங்கள் மிகவும் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். அப்படிப் புரிந்து கொண்டால், அநேக விஷயங்கள் உங்களுக்குத் தெரிய ஆரம்பிக்கும்.

வாழ்வு என்பதே ஓர் அன்பளிப்பு அல்லது வெகுமதி என்றால், அது சம்மந்தமான அனைத்தும் வெகுமதிதான், அன்பளிப்புதான். மகிழ்ச்சி, அன்பு, தியானம் எல்லாமே மிகவும் அழகு வாய்ந்தவை. ஏனெனில்,

எல்லாமே அந்த் அழகான முழுமையிலிருந்து (WHOLE), புனிதத்திலிருந்து (HOLY) வந்த வகைகள்தான்.

உங்களுடைய மகிழ்ச்சிக்காக, இந்த பேரியக்க உயிர்த்தன்மையை கட்டாயப்படுத்த முடியாது. உங்களுடைய அன்பிற்காக, தியானத்திற்காக, அதை அதிகாரம் செய்யமுடியாது. அப்படி செய்தால், அதுவே உங்கள் அக்ங்காரமாகி விடும். அது உங்களை மிகவும் துன்பத்தில் ஆழ்த்தி, அழிவை உண்டு பண்ணிவிடும். அது தற்கொலைக்கு சமம்தான்.

அமெரிக்க அரசாங்க சாசனத்தில் (CONSTITUTION), ஓர் அடிப்படை உரிமையை தங்கள் குடிமக்களுக்கு வழங்கி இருப்பதாக ஒரு வரி இருக்கிறது. அதாவது, "மக்கள் அனைவரும் மகிழ்ச்சியில் இருக்க இந்த அரசாங்கம் ஆவன செய்யும்" என்று.

ஆனால், சந்தோஸத்தை யாரும் உங்களிடம் திணிக்கமுடியாது. இது எவ்வளவு முட்டாள்தனமான வாசகம்! எந்த நீதிமன்றமும் அதற்கு ஆணையிட முடியாது!

ஒருவன் தன் சந்தோஸத்தை, மகிழ்ச்சியை தானே தான் உண்டாக்கிக் கொள்ளவேண்டும். சந்தோஸம், மகிழ்ச்சியைப் பற்றி ஓர் அரசியல்வாதிக்கு என்ன தெரியும்? இந்த உலகத்தில் மிகவும் மகிழ்ச்சியற்ற மனிதன் யார் என்றால் அரசியல்வாதிதான். இந்த அமெரிக்க சாசனத்தை உண்டாக்கிய ஜெபர்சன் (JEFFERSON) ஒரு தேர்ந்த அரசியல்வாதி. அவனுக்கும், மகிழ்ச்சிக்கும் சம்மந்தமே கிடையாது! இந்த வார்த்தையை அந்த சாசனத்தில் சேர்த்த காரணத்தினாலேயே, அமெரிக்கா, மகிழ்ச்சியற்ற தேசங்களில் ஒன்றாகிவிட்டது! ஏனெனில், "மகிழ்ச்சியாக இருக்க உங்களுக்கு உரிமை இருக்கிறது. உங்களுக்குத் தகுதி இருக்கிறது, அதை நீங்கள் கேட்டுப் பெறலாம்" என்பதே முட்டாள்தனம்.

மகிழ்ச்சியாக நீங்கள் இருக்கலாம். அது முற்றிலும் உங்கள் தனிப்பட்ட விஷயம். அதற்கு என்ன உரிமை வேண்டியிருக்கிறது? அப்படி உரிமை என்ற அடிப்படையில், அதை அணுகினால், நீங்கள் ஆரம்பத்திலிருந்தே தவறு செய்தவராவீர்கள்.

வாழ்வு என்பது உங்களுக்கு அளித்த வெகுமதி என்று முன்பே கூறினேன். அப்படி இருக்கும்பொழுது, அதை ஒட்டி வரும், மகிழ்ச்சி, அன்பு, கருணை, அமைதி எல்லாமே அந்த வெகுமதியில் அடக்கம்தான். அதை அடைய நீங்கள் காத்திருக்க வேண்டியிருக்கலாம், எதையும் வாங்கும் தன்மையில் பொறுமையாக, சரணாகதி நிலையில் இருக்வேண்டி இருக்கலாம். ஆனால், அதை உரிமை என்ற பெயரில் வலுக்கட்டாயப்படுத்த முடியாது.

ஜெபர்ஷனை விட, எமிலி கூ (EMILE COVE') மிகவும் புத்திசாலி. அவர் 'திரும்பும் தன்மை' (LAW OF REVERSE EFFECT) என்ற சட்டத்தை உண்டாக்கினார். அதன்படி, "நீங்கள் ஒரு காரியத்தைச் செய்ய முனைந்தால், அதை செய்யமுடியாது. அதைப்போல, நீங்கள் அதைச் செய்ய முயற்சி செய்யாமல் இருந்தால், அதைச் செய்ய முடியும். நீங்கள் செய்ய முனைதலே, எதிர் பலனைக் கொடுக்கும்" என்கிறார்.

இதைக் கொஞ்சம் விளக்குகிறேன். உதாரணமாக, நீங்கள் தூங்க முயற்சி செய்தால், நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் போலீஸைக் கூப்பிட்டு, தூங்குவதற்கு உதவி செய்யும்படிக் கேட்பீர்களா? நீங்கள் தூங்குவதற்காக செய்யும் முயற்சிகள், அனைத்தும் உங்களைத் தூங்க விடாமல்தான் செய்யும்! அது, உங்களுடைய முயற்சி ஏதும் இல்லாமல், தானே நடைபெறவேண்டும். நீங்கள் ஏதும் செய்யாமல், வெறுமனே ஓய்வில் இருந்தாலே போதும். தேடுதலை நிறுத்துங்கள், தேடுவது கிடைக்கும்.

தூக்கம் வராமல் அவதிப்படுபவர்கள், இதைப் போன்று முட்டாள்தனமாக, முயற்சி செய்வதுதான்

காரணம். அதில் உங்கள் கவலைகளும், எதிர்பார்ப்பும் அடங்கும். தூக்கம் உங்களைத் தழுவ நீங்களாக முயற்சி செய்தால், நீங்கள் அதைக் கண்டிப்பாக இழப்பீர்கள். அதாவது, "நீங்கள் ஒரு காரியத்தை செய்ய முனைந்தால், அதை செய்யமுடியாது. அதைப்போல நீங்கள் செய்ய முயற்சி செய்யாமல் இருந்தால், அதைச் செய்யமுடியும்". இப்பொழுது புரிந்திருக்கும் என நம்புகிறேன்.

உங்கள் வாழ்க்கையில், உரிமை என்பது உங்களுடைய கடைவீதிகளிலும், வியாபாரத்திலும் வேண்டுமானால் இருக்கலாம். ஆனால், நீங்கள் உங்கள் உள்ளே செல்லச் செல்ல, உரிமை மறைந்து, வெகுமதி உதயமாகும். இதை நீங்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். அதாவது உங்களுடைய வெளி உலகத்தில் வேண்டுமானால், உரிமை என்பது செல்லுபடியாகும். ஆனால், உங்கள் உள்ளே அது செயலற்றுவிடும்.

உங்களின் உயிரோட்டம், சக்தி அனைத்தும் உங்களுடைய உரிமையினால் ஏற்பட்டது இல்லை. அதைப்போல அதை ஒட்டி உண்டாகும் மகிழ்ச்சி, அன்பு, ஆனந்த பூரிப்பு அனைத்தும் தானாகவே ஏற்பட்டவைகள். உங்கள் முயற்சியால், உரிமையால் உண்டானது அல்ல. இவைகள் அனைத்தும் எமிலி கூ' வின் சட்டப்படி இயங்கு கின்றன.

அந்த சட்டம் என்ன சொல்லுகிறது.? "எதையும் நேரடியாக செய்ய முயற்சி செய்யாதீர்கள். மகிழ்ச்சியை நீங்கள் துரத்திக்கொண்டு செல்லமுடியாது. ஆனால், அதை நீங்கள் மறைமுகமாகத் தூண்டிவிடலாம்"

தூண்டிவிடுதல் என்பது மறைமுகமான செயல். அது நேரடியான தாக்குதல் அல்ல. நேரடியாக எதையும் எதிர்கொள்ளும் பொழுது, அங்கு ஆக்ரமிப்பு ஏற்படுகிறது. தீவிரம் உண்டாகிறது. அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை.

வாழ்வு ஒரு வட்டத்தில் இயங்குகிறது, நேரான கோட்டில் அல்ல. சூரியனைச் சுற்றி, பூமி இயங்குகிறது. சூரியன், அதைவிட ஒரு பெரிய சூரியனை மையமாக வைத்து இயங்குகிறது. 'பால் வீதி நஷத்திர மண்டலம்' (GALAXY) நகர்ந்துகொண்டே இருக்கிறது. ஏன், இந்த பிரபஞ்சமே, ஒரு வட்டத்தில் நகர்ந்துகொண்டு இருக்கிறது. பருவங்கள் வட்டத்தில் மாறி மாறி வருகின்றன. உங்கள் வாழ்க்கையில், இளமை, வாலிபம், வயோதிகம் என்பதெல்லாம் ஒரு வட்டத்தில்தான் ஏற்படுகின்றன. ஆகவே, இந்த பிரபஞ்ச வாழ்க்கையே ஒரு வட்டத்தில்தான் இயங்குகிறது. அது அம்புபோல் நேராகப் பாய்வது இல்லை. இயற்கைத் தன்மைகள் அனைத்தும் மெதுவாக, அமைதியாகவே இயங்குகின்றன. உங்கள் வாழ்க்கையின் மாற்றங்களை உற்று கவனியுங்கள். அவைகள் எவ்வளவு மெதுவாக மாறுகின்றன? மாற்றம் நிகழுவதே உங்களுக்குத் தெரியாது. நீங்கள் குழந்தைப் பருவத்திலிருந்து, எப்பொழுது முழு வாலிபத் தன்மைக்கு மாறினீர்கள்?

ஜீசஸின் கொள்கை வெறிபிடித்த ஒருவன் எழுதிய ஒரு சிறிய புத்தகத்தை முன்பு ஒருநாள், நான் படிக்க நேர்ந்தது. அதில் கூறப்பட்டதில், 99% முட்டாள்தனமாகவும், 1% மிகவும் அழகாகவும் இருந்தன. இந்த 1% என்பதே அதிகம்தான். ஏனெனில், கிருஸ்துவ வேதாந்தங்கள் (THEOLOGY) சுத்தமாக 100% வடிகட்டிய முட்டாள் தனமாகவே இருக்கும்.

அந்த 1% என்னவென்றால், "சீக்கிரம் செல்லுங்கள். நேரத்தை வீணாக்காதீர்கள்" அவ்வளவுதான்!!

கடவுள் எப்பொழுதும் பொறுமையாகவே செயல் படுகிறார். கடவுள் எல்லா இடத்திலும் வியாபித்து இருக்கிறார். ஆகவே, அவர் எங்கேயும் செல்லுவது இல்லை. அவருக்கு எந்த இலக்கும் இல்லை. அவர் எப்பொழுதும் சுற்றி வளைத்துதான் செயல்படுகிறார். அவர் ஒரு குழந்தையை உண்டாக்கினால், அது பூர்ண வளர்ச்சி பெற,

9 மாதம் எடுத்துக் கொள்ளுகிறார். ஆகவே, அவர் ஒரு பெரிய திறமைசாலி என்று கூறுவதற்கில்லை. இதைப் போலத் தான் காலங்காலமாக, பல லட்சம் வருடங்களாக செயல்பட்டு வருகிறார். அவர் ஏதும் கற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை! இல்லாவிட்டால், ஒரு குழந்தையை உண்டாக்கி, சுமார் 9 நிமிடத்தில் அதற்கு பரிபூர்ண வளர்ச்சியைக் கொடுக்கலாம். ஏன் இன்னும் 9 மாதங்கள்? அவர் தன் கூட சிறந்த விஞ்ஞானிகளை வைத்திருக்கலாம். அவர்கள், அவருக்கு இந்த வகையில் உதவக்கூடும். 9 மாதம் என்பது மிகவும் நீண்டகாலம். அதைக் குறைக்க, அவருக்கு, வழி தெரியவில்லை. என்ன கடவுள்!

குழந்தையை விடுங்கள். ஒரு சாதாரண பூவை உண்டாக்க, புற்களில் இலையை உண்டாக்க, மற்றும் பறவையை பூர்ண வளர்ச்சி பெற எவ்வளவு நாட்கள் எடுத்துக் கொள்ளுகிறார்? அவருக்கு காலத்தின் அருமை தெரியவில்லை. இதுதான் அதன் விளக்கம்!

நீங்கள் அவரோடு இருக்க ஆசைப்பட்டால், நீங்களும் அவரோடு ஒத்துப்போகத்தான் வேண்டும். அதாவது, உங்களுக்கும் காலத்தின் அருமை தெரியக் கூடாது. காலம் என்று ஒன்று இருக்கிறது என்றுகூட உங்களுக்குத் தெரியக்கூடாது. அவர் எப்பொழுதும், 'இங்கே இப்பொழுது' இருக்கிறார். ஆனால், நீங்களோ அங்கேயும், இங்கேயும் இருக்க ஆசைப்படுகிறீர்கள். உங்களு டைய அவசர புத்தியில், அவரைத் தாண்டிச் செல்லவும் முற்படுகிறீர்கள்! நீங்கள் உங்கள் செயலில் ஒரு அம்புபோல பாய விரும்புகிறீர்கள். உங்கள் அவசரத்துக்கு, அவரால் ஈடுகொடுக்க முடியவில்லை! ஆனால், நீங்கள் கடவுளோடு இருந்தால், மகிழ்ச்சியாக, ஆனந்தமாக, உயிரோட்ட முள்ளவராக, தியானத்தன்மையில், மிக அமைதியாக, மிக ஓய்வாக இருக்கலாம்.

ஆனால், ஒரு வேலையை எவ்வளவு சீக்கிரம் செய்யக்கூடும் என்று மனிதன் எப்பொழுதும் சிந்தித்த

வண்ணமாகவே இருக்கிறான். ஏனெனில், அப்படி அவனுக்கு பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறது! ஆனால், நீங்கள் அவசரப்படுவது, உங்களை எங்கே அழைத்துச் செல்லும், தெரியுமா? பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு!

ஆகவே, கடவுளைப் போல சுற்றி வளைத்து, பொறுமையாகச் செயல்படுங்கள். 'சுற்றி வளைத்து' என்றால் என்ன?

எனக்கு ஒரு கிழவனை நன்றாகத் தெரியும். அவன், எப்பொழுதும், எதைப் பற்றியாவது புகார் செய்தவாறே இருப்பான். அவனைப் பொறுத்தவரையில், எல்லாமே தவறுதான்! அவன் இயற்கையிலேயே குறை காணுபவன் (CRITIC). ஆகவே, ஒரு குறை காணுபவன் எப்படி தன் வாழ்க்கையில் துன்பப்படுவானோ, அப்படியே அவனும் துன்பத்தில் இருந்தான். பருவங்கள் மாறுகின்றன. ஒரு சில காலம் வெயில் கடுமையாக இருக்கிறது, பிறகு மழை, பிறகு பனி. இதையெல்லாம் அவனால் சகித்துக் கொள்ள முடியவில்லை!

அவனுடைய மனம், எப்பொழுதும் எதிர்மறை யாகவே வேலை செய்வதால், அவன் எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும் என்று ஆசைப்படுவான். அவனுடைய மகிழ்ச்சி மாறவே கூடாது என்று நினைப்பான். இப்படிப்பட்டவர்கள், பெரும்பாலும் 'போதும்' என்ற எண்ணத்தோடு இருக்கவேண்டும் என்றே ஆசைப்படுவார்கள். ஆனால், அவர்களால் அப்படி ஒருக்காலும், இருக்கமுடியாது! எதிலும் திருப்தி அடையாத காரணத்தால், அவர்கள் முகம் இறுகி, அதில் பலகோடுகள் இருக்கும்! அவரது திருப்தி அற்ற எண்ணங்கள் அனைத்தும், அவர் முகத்தில் எழுதியிருக்கும்.

ஆனால், ஒரு நாள் அவன் திடீரென்று மாறிவிட்டான். அவனுக்கு 60 வயது முடிந்து, பிறந்தநாள் வாழ்த்து சொல்ல, நண்பர்கள் வந்தார்கள். அந்த ஆள், எப்படி ஒரே இரவில், இப்படி மாறிவிட்டான் என்று

ஆச்சரியப்பட்டார்கள். இதை ஒருவர் என்னிடம் சொல்ல, நானும் ஆச்சரியம் அடைந்து, அவனைப் பார்க்கச் சென்றேன். என்னைப் பொருத்தவரையில், அது ரஷ்யா மற்றும் சைனா புரட்சிக்கு சமம்தான்!

ஜீசஸ் கூட, இந்த மாதிரியான மாற்றத்தைச் செய்திருப்பாரா என்று என்னால் கருத முடியவில்லை! அவர், ஒரு குருடனை, காது கேளாதவனை, ஊமையை சுகப்படுத்தி இருக்கலாம். ஆனால், அவர், ஒரு திருப்தியற்ற மனிதனை, சரிசெய்தார் என்று எந்த கதையும், பைபிளில் இல்லை!

அந்த கிழவனிடம், நான், "உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் எப்படி இவ்வளவு மகிழ்ச்சியில் இருக்கிறீர்கள்?"

"இதுவரை திருப்தியற்று இருந்ததுபோதும். மேற்கொண்டு எதற்கும் ஆசைப்படவில்லை. சுமார் 60 வருடங்கள், நான் மகிழ்ச்சியாக இருக்க முயற்சி செய்தேன். ஆனால், முடியவில்லை. எதிலும் ஏதோ குறை இருப்பதாகவே கண்டேன். நேற்று இரவுதான் ஒரு முடிவு செய்தேன். மகிழ்ச்சி என்பதையே மறந்துவிட்டு, வெறுமனே அமைதியாக இருக்க முடிவு செய்தேன். என்ன ஆச்சரியம். என்னாலேயே நம்பமுடியவில்லை. நான் இப்பொழுது மகிழ்ச்சியாக இருக்கிறேன்" என்றான்.

இந்த ஆள், சுமார் 60 வருடங்களாக, மகிழ்ச்சியை துரத்திக் கொண்டிருந்தான். ஆனால், அதை அடைய முடியவில்லை. அவன் மேலும், மேலும் முயல, முயல, அவன் துன்பம்தான் அதிகரித்தது. ஏனெனில், அதை அடைய நேர்வழியைத் தேர்ந்து எடுத்தான். ஒரு அம்பு போல செயல்பட்டான். கடவுள் எந்த நேர்வழியிலும் அல்லது குறுக்கு வழியிலும் செயல்படமாட்டார். ஆனால், அந்த பாதையில் நீங்கள் முன்னேறி, நீங்கள் நினைத்ததை அடையலாம். ஆனால், அதனால் நீங்கள் மகிழ்ச்சியை

அடைய முடியாது. இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள்.

கோடிக்கணக்கான மக்கள், தாங்கள் நினைத்ததையெல்லாம் இந்த உலகத்தில் சாதித்தார்கள். இந்த சாதித்தல் எப்படி ஏற்பட்டது. ஒன்றை அடைந்ததும், திருப்தியற்று வேறு ஒன்றை அடைய முயன்று, முயன்று, எவ்வளவோ உலகப்பொருள்களை அடைந்தார்கள். அலெக்ஷாண்டரை விடவா? ஆனால், முடிவில் மகிழ்ச்சியை மட்டும் அவர்கள் அடைந்திருக்கவே மாட்டார்கள். நன்றாகக் கவனித்துப் பாருங்கள். புரியும்.

ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு பணக்காரனாகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு, அவன் மகிழ்ச்சியற்று, துன்பத்தில் இருப்பான். அவர்கள் என்ன நினைத்து, தன் சக்தி அனைத்தையும் செலவழித்து, பணக்காரனாகிறார்கள்? ஆனந்தமாக எப்பொழுதும் இருக்கலாம்; எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருக்கவேண்டும் என்றுதான். அந்த இலக்கை அடைந்தார்கள். ஆனால், இப்பொழுது மகிழ்ச்சியும் இல்லை, மேற்கொண்டு முயற்சி செய்ய எந்த இலக்கும் இல்லை. ஒரு பணக்காரன் முகத்தை ஆழ்ந்து பாருங்கள். அவன் எப்பொழுதும், எங்கேயோதான் இருப்பான். அவன் எண்ணங்கள் இந்த உலகத்தை சுற்றியவாறே இருக்கும். எப்பொழுதும் சிந்தனையில், இறுக்கத்திலே இருப்பான். அப்படி ஏதும் சந்தோஸமாக அவன் காட்டிக்கொண்டால், அதில் எந்த ஆழமும் இருக்காது. நன்றாகக் கவனித்துப் பாருங்கள். தெரியும். அவன் முகத்தில் எப்பொழுதும் ஒரு விரக்தி இருக்கும். அப்படி இல்லையென்றால், அவன் பணக்காரனாகவில்லை என்று அர்த்தம்!

ஆனால், ஒரு ஏழை, எப்பொழுதும் எதையோ நம்பிக்கொண்டு ஓடிக்கொண்டே இருப்பான். இன்னும் அடைய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது என்றே அவன் மனம் நினைத்து, அவனை விரட்டிக்கொண்டே இருக்கும். அதை அடைந்தால், நாம் மிகவும் மகிழ்ச்சியாக

இருப்போம் என்று நினைத்து அலைந்துகொண்டிருக்கிறான். அதைப்போலத்தான், இந்தக் கிழவனும், சந்தோஸத்தை சுமார் 60 வருடமாக துரத்திக் கொண்டிருந்தான். அது, இதில் இருக்கிறது, அதில் இருக்கிறது என்று எதிலும் திருப்தி இல்லாமல் அலைந்து கொண்டிருந்தான். எப்பொழுதாவது உங்களுக்கு பிறந்தநாள் வந்தால், உங்கள் உள்ளத்தின் ஆழத்தில் இறப்பை நெருங்கும் எண்ணம் வந்து, உங்களை துக்கப்படுத்தும். இதை நீங்கள் ஆழ்ந்து பார்த்தால் புரியும். நீங்கள் வெளியே மகிழ்ச்சியாக இருப்ப தாகக் காட்டிக் கொள்ளலாம். ஆனால், உண்மையில், உங்கள் பிறந்தநாளில், நீங்கள் துக்கமாகவே இருக்கிறீர்கள்! அதைப்போல, இந்த கிழவன், 60 வயதை நெருங்கியதும், அந்த இறப்பு உணர்வைதான் அடைந்தான். அதை ஒருவன் மறக்கவேண்டும் என்பதற்காகவே, நண்பர்கள் மற்றும் சுற்றத்தினர் வந்து வாழ்த்துக்கூறி வெகுமதி அளிக்கின்றனர்! ஆகவே, ஒவ்வொரு பிறந்த நாளும், இறந்தநாள் தான்! அதை நீங்கள் மறக்கவேண்டும் என்பதற்காகவே, உங்கள் சமூகம் தந்திரமாக உங்களை உற்சாகமூட்டுகிறது!

அந்த கிழவனின் முந்தைய இரவில் ஏற்பட்ட இறப்பு உணர்வு, அவனை அடியோடு மாற்றிவிட்டது. "சே, என்ன முயற்சித்தும் நாம் மகிழ்ச்சியாகவே இருக்கமுடிய வில்லை. என் வாழ்க்கையே முடியப்போகிறது. நான் ஒருபோதும் திருப்தியாக இருந்ததில்லை. ஆகவே, இன்று முதல், அதை நினைப்பதையே விட்டுவிடப் போகிறேன். அதைப்பற்றிய எண்ணமே இல்லாமல் இருக்க முடிவு செய்துவிட்டேன்'' என்றான். மேலும், அவன், "ஆனால், பாருங்கள், இப்பொழுதுதான் நான் மிகவும் சந்தோஸமாக இருக்கிறேன். இது எப்படி ?'' என்றான்.

நீங்கள் சந்தோஸத்தைத் தேடி அலைந்தால், அது உங்களிடமிருந்து தப்பி ஓடிக்கொண்டிருக்கிறது. நீங்கள் அந்தத் தேடுதலை நிறுத்தினால், அது உங்களை நோக்கி

ஓடி வருகிறது. இதுதான் வாழ்வின் முரண்பாடான தத்துவம்!

உங்கள் மனம், உங்களை ஒருக்காலும் சந்தோஸமாக இருக்கவிடாது. அதனுடைய உண்மை சொரூபமே, திருப்தியற்று இருப்பதுதான். இதுவரையில் ஏற்பட்ட துன்பங்களுக்கெல்லாம் காரணம், உங்கள் மனதுதான். ஆனால், அது மகிழ்ச்சியை எப்பொழுதும் துரத்தியவாறே இருக்கிறது. ஆகவேதான், அது, அவற்றைத் தவற விட்டுக் கொண்டே இருக்கிறது. நீங்கள் திருப்தியோடு இருக்கலாம். அவைகள் உங்களை சுற்றியவாறே இருக்கின்றன. ஆனால் நீங்கள்தான் எப்பொழுதும் வேறு எங்கேயோ இருக்கிறீர்கள்.

நீங்கள் பெரும்பாலும் எதிர்காலத்திலேயே இருக்கிறீர்கள். அங்குதான் அவைகள் கிடைக்கும் என்று ஓடிக்கொண்டே இருக்கிறீர்கள். ஓர் இலக்கை, நிர்ணயித்துக் கொண்டு, அதை அடைந்தால்தான், நீங்கள் மகிழ்ச்சி, மற்றும் திருப்தியை அடையமுடியும் என்று நம்பிக்கையில் அதைத் தேடி அலைந்து கொண்டே இருக்கிறீர்கள்.

போதும், இந்த அலைச்சலை முதலில் நிறுத்துங்கள். திரும்பி உங்களிடமே வாருங்கள். உங்கள் சொந்த வீட்டுக்கு வாருங்கள். அங்கு வெறுமனே, அமைதியாக இளைப்பாருங்கள். சந்தோஸம், மகிழ்ச்சியைப் பற்றி எந்தக் கவலையும் படாதீர்கள். இந்த வாழ்க்கை, எப்படி உங்களுக்கு அந்த பேரியக்க பெரும் சக்தியில், ஒரு அன்பளிப்பாக வழங்கப் பட்டிருக்கிறதோ, அதைப்போல உங்கள் மகிழ்ச்சியும் வழங்கப்பட்டிருக்கிறது என்பதை அப்பொழுதுதான் உணருவீர்கள்.

உங்கள் தேடுதலில், உங்கள் மனம் மூடியவாறே இருக்கிறது. அந்த்த தேடுதலின் இறுக்கமே, அதை மூடிவிடுகிறது. நீங்கள் ஒன்றை அடைய மிகவும் ஆவலாக இருந்தால், அந்த ஆவலில் ஏற்பட்ட எதிர்ப்பார்ப்பில், உங்கள் மகிழ்ச்சி மறைந்துவிடுகிறது. மகிழ்ச்சியும், திருப்தி

யும், உங்கள் தூக்கத்தைப் போல, உங்கள் அமைதியான நிலையில், எதுவும் செய்யாத நிலையில்தான், அவைகள் தானே உங்களை வந்து அடையும். அதற்கு நீங்கள் மிகவும் ஓய்வாகக் காத்திருக்கவேண்டும்.

உங்கள் ஓய்வுத்தன்மையில் தான், நீங்கள் மிகவும் உணர்வோடு இருக்கிறீர்கள். மகிழ்ச்சி என்பது மிகவும் மென்மையானது. மிகவும் ஆழமானது. வாழ்வின் முக்கிய மான தன்மையே, தன் அடக்கமான மகிழ்ச்சியும், அன்பும் தான். அது உங்கள் அமைதியில்தான் (எதைக் கருதியும் ஓடாத தன்மையில்தான்) தன்னை வெளிப்படுத்தும். அது ஒரு வட்டத்தில் இயங்குவது. அம்புபோல் நேராக பாய்வது இல்லை. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

பாபரைப் பற்றி, ஒரு கதை படித்திருக்கிறேன். அவர் மிகச் சிறந்த அரசர்களில் ஒருவர். ஒரு மனிதனின் ஆளுகையில், உலகத்தில் இவ்வளவு பெரிய தேசப்பரப்பு, இதுவரை அடங்கியது இல்லை.

ஒருசமயம், அவரை சந்திக்க, ஒரு புத்திசாலியான மனிதன் வந்தான். அப்பொழுது பாபர், தன் மந்திரி பிரதானிகளுடன், மிகவும் சரிசமமாக சிரிப்பும், கும்மாள முமாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டு அதிர்ச்சி அடைந்தான். சாதாரணமாக, ஒரு பெரிய அந்தஸ்த்தில் உள்ளவன் வயறுவலிக்க சிரிப்பதே சரியில்லை. ஆனால், இவ்வளவு பெரிய அரசர், தன் கீழே வேலை செய்யும் ஆட்களுடன் இப்படியா சிரித்துப் பேசுவது? அந்த மனிதன் மிகவும் ஏமாற்றம் அடைந்து, "மதிப்புமிக்க அரசனே, நீங்கள் மிகவும் அறிவாளியென்றும், மிகவும் நாகரீகம் தெரிந்தவர் என்றும், நீங்கள் புத்திசாலித்தனத்தை மிகவும் விரும்புபவர் என்றும் பலர் சொல்லிக் கேள்விப் பட்டேன். ஆகவேதான், உங்களை சந்திக்க வந்தேன். உங்களோடு, உங்களது அரண்மனையில், பல படித்த அறிஞர்கள், மேதாவிகள், தத்துவவாதிகள், மதவாதிகள், பாடகர்கள் என்று ஒரு புத்திசாலிக் கும்பலே இருக்கும்

என்று கேள்விப்பட்டேன். ஆனால், நான் இங்கு பார்ப்பது, வேறுவிதமாக இருக்கிறது. அதில் எந்த புத்திசாலித்தனமும் தெரியவில்லை. மிகவும் மட்டம். இதை என்னைப்போல உள்ளவர்களால், சகித்துக் கொள்ளமுடியாது. இனி ஒரு கணம் கூட, இங்கு இருக்கமாட்டேன்'' என்றான்.

பாபர் உடனே இடைமறித்து, "கொஞ்சம் பொறுங்கள். அப்புறம் நீங்கள் திரும்பிச் செல்லலாம்'' என்று சொல்லிவிட்டு, மேலும், அவரிடம்,"அதோ அந்த மூலையில் ஒரு வில்லு இருப்பதைக் கவனியுங்கள்'' என்றார்.

"அதற்கும், இப்பொழுது உள்ள சூழ்நிலைக்கும் என்ன சம்மந்தம்?''

"என்னால் எப்பொழுதும் இறுக்கமாக இருக்க முடியாது. அந்த வில்லோடு அம்பும் சேர்ந்து எப்பொழுதும் இருந்தால் (தயார் நிலையில்), அந்த இறுக்கத்தில், சிறிது நாளில், அந்த வில் கண்டிப்பாக உடைந்துவிடும். அது தன்னுடைய வளைந்துகொடுக்கும் தன்மையை இழந்துவிடும். ஒரு வில் எப்பொழுதும் வளைந்துகொடுக்கும் தன்மையில் இருந்தால்தான் அதனால் செயல்பட முடியும். அதனால், எவ்வளவு வளைந்து கொடுக்கமுடியுமோ, அவ்வளவுக்கு அது உயிரோட்டமுள்ளதாக இருக்கும்.

நான் அந்த வில்லைப் போல இருக்கிறேன். சிலநேரங்களில், நான் இறுக்கமாக இருக்கவேண்டியுள்ளது. ஆனால், பெரும்பாலும், இப்படி ஓய்வாக, எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லாமல், நண்பர்களுடன் ஆனந்தமாக இருக்கவே விரும்புகிறேன்'' என்றார் பாபர்.

அதற்கு அப்புறம், அந்த புத்திசாலி மனிதன் என்ன செய்தார் என்று எனக்குத் தெரியாது. ஆனால், அந்த புத்திசாலி மனிதனைவிட, பாபர் மிகுந்த புத்திசாலி என்று மட்டும் என்னால் அடித்துச் சொல்லமுடியும். நீங்களும், அந்த நாணேற்றிய வில்லைப் போலத்தான் இருக்கிறீர்கள். உங்களுக்கு அவ்வப்பொழுது அமைதி தேவை, ஓய்வு

தேவை, மகிழ்ச்சி தேவை; அதைப் புரிந்துகொண்டவனே, வாழ்க்கையை இயல்பாக நடத்தமுடியும்.

உலகத்தில் உள்ள சின்ன விஷயங்களுக்கெல்லாம், நீங்கள் அம்பு பாய்வது போல் செயல்படுகிறீர்கள். அவைகள் அனைத்தும், மனிதனால் ஏற்படுத்தப்பட்டவைகள். ஆனால், உலகத்தால், மனிதனால், ஏற்படுத்தாத விஷயங்களில், நீங்கள் அம்புபோல் செயல்படக்கூடாது. அதை நீங்கள் வளைந்து கொடுத்துதான் அடையவேண்டும். கடவுள் உங்கள் உள்ளே முழு ஓய்வில் இருக்கிறார். இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

ஆகவேதான், பதஞ்சலி, "முழு சமாதி என்பது ஆழ்ந்த தூக்கத்திற்கு சமம்" என்று சொன்னார். ஆனால், ஒரே ஒரு வித்தியாசம். அதாவது, தூக்கத்தில் உங்களிடத்தில் எந்த பிரக்ஞை உணர்வும் இல்லை. சமாதியில், நீங்கள் முழு பிரக்ஞை நிலையில் இருக்கிறீர்கள். இரண்டுக்கும் ஓய்வுத்தன்மை மிக அவசியம். அப்பொழுது நீங்கள் அறிந்தவைகள் எதுவும் வெளியே செல்லாது. அதேபோல வெளியிலிருந்து அறியாயது எதுவும் உங்கள் உள்ளே நுழையாது. நீங்கள் "இப்பொழுது இங்கே" வெறுமனே இருக்கிறீர்கள். திடீரென்று உங்களிடம் ஓர் ஆத்மீக மாற்றம் ஏற்படும். நீங்கள் அதற்காக எதுவும் செய்யவேண்டியது இல்லை. நீங்கள் சந்தோஸமாக இருப்பதற்கு எவ்வளவோ செய்து, தோல்வி அடைந்து விட்டீர்கள். மேற்கொண்டு எதுவும் செய்யவேண்டாம். அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை.

நீங்கள் இன்னமும் துக்கத்தில், துன்பத்தில் இருக்கவேண்டுமானால், ஓய்வாக இல்லாமல், அலைந்து கொண்டே இருங்கள். நீங்கள் சந்தோஸமாக இருக்க விரும்பினால், நடப்பவைகளை ஒரு சாட்சியாக நின்று பார்க்கக் கற்றுக்கொள்ளுங்கள். மிகவும் ஓய்வாக இருக்கப் பழகிக்கொள்ளுங்கள். எதையும் அதன் போக்கில் விடவும். அதன் குறுக்கே பாயவேண்டாம். இதுதான் வாழ்வின்,

மதத்தன்மையின் மிகப்பெரிய ரகசியம். இதை ஆழ்ந்து சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள்.

நீங்கள் எதையும் அதன் அதன் போக்கில் செல்ல அனுமதித்தால், உங்களிடம் அநேக மாற்றங்கள் ஏற்படு வதை, நீங்கள் மெல்ல மெல்ல ஆனந்தத்தை உணர ஆரம்பிப்பீர்கள். இவைகளெல்லாம், இப்பொழுதும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால், உங்களிடம் எந்த பிரக்ஞையும் அதைப்பற்றி இல்லை. ஏனெனில், உங்கள் மனம் எங்கேயோ, எதையோத் தேடி அலைந்துகொண்டு இருக்கிறது.

பறவைகள் இசைத்துக்கொண்டு இருக்கின்றன. மரங்கள் பூக்களை சொரிந்த வண்ணமாக இருக்கின்றன. ஆறு எப்பொழுதும் 'சலசல' வென்று ஓடிக்கொண்டிருக்கிறது. இப்படி எல்லாமே ஒரு இயக்கத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றும் எவ்வளவு வர்ண ஜாலத்துடன் ஜொலிக்கின்றன! இந்த உலகமே வண்ணமயம் தான். அவைகள் அனைத்தும் தன்னைத்தானே கொண்டாடிக்கொள்ளுகின்றன. கொஞ்சம் ஆழ்ந்து பார்த்தால், புரியும்.

ஆனால், நீங்கள் இந்த இயற்கையான தன்மைகளுக்கு மாறாக, எப்பொழுதும் ஏதோ சிந்தனையில், இறுக்கத்தில் இருக்கிறீர்கள். அப்பொழுது நீங்கள் மூடிய நிலையில் இருக்கிறீர்கள். அப்பொழுது அதில் எந்த ஜன்னலும் கிடையாது. எதுவும் உள்ளே செல்லமுடியாது. செல்லவும் அனுமதிக்கமாட்டீர்கள். ஆனால், அதில் ஜன்னல்கள் இருக்கின்றன. நீங்கள் அதைத் திறக்க மறுக்கிறீர்கள். நீங்கள் திறப்பதற்காக, அவைகள் காத்துக் கொண்டிருக்கின்றன. இப்படி உங்களது தனிப்பட்ட எண்ணங்களினால், எதிர்ப்பார்ப்பினால், உங்கள் மனதை எப்பொழுதும் மூடிவைத்துக்கொண்டு, உங்களால் எப்படி மகிழ்ச்சியாக இருக்கமுடியும்? அதுமட்டுமல்ல, இந்த உலகத்தில் எவ்வளவோ அற்புதங்கள் நடந்துகொண்டிருக்

கின்றன. அதிலெல்லாம். நீங்கள் பங்கு பெறவேண்டாமா? அதையெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? இந்தத் தெய்வீக நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள, நீங்கள் திறந்த மனத்துடன், உங்களது மூடிய ஜன்னலையெல்லாம் திறந்துவிட்டு வெளியே வாருங்கள். வாழ்க்கை "இங்கே இப்பொழுது" உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. ஆனால், அது எதிர்காலத்தில் இருப்பதாக எண்ணி, எதிர்ப்பார்ப்புடன், ஒரு கனவு உலகத்தில் இருக்கிறீர்கள். உங்கள் மனம் இறந்தகாலத்துடனும், எதிர்காலத்துடனும் எப்பொழுதும் கலந்துகொண்டே இருப்பதை நன்றாகக் கவனித்துப் பாருங்கள். புரியும். ஆனால், வாழ்வின் உயிரோட்டம் மிக மென்மையானது. அதனால்தான், அதை உங்கள் அலையும் மனத்தால் அறியமுடியவில்லை. நீங்கள் உணர்வற்று இருக்கிறீர்கள். அந்த உணர்வை தள்ளிப் போட்டுக் கொண்டே இருக்கிறீர்கள். ஏன், அது தேவையில்லை என்று கூட நினைக்க ஆரம்பித்து விடுகிறீர் கள். இப்படியாக, உங்களை நீங்களை அழித்துக்கொள்ளு கிறீர்கள்.

யார் ஒருவரால், 'இங்கே இப்பொழுது' இருக்க முடிகிறதோ, அவர் மேல், இந்த பேரியக்க உயிர்த் தன்மை, தன் மலர்களைச் சொரிய தயாராக இருக்கிறது. அவர்கள் அறியாத பல அற்புதங்களைத் தெரிய, அவர்களுக்கு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கிறது. தியான நிலையில்; நீங்கள் வெறுமையாக, மிகவும் ஒய்வுத் தன்மையை அடையும்பொழுது, வாழ்வு இவ்வளவு அற்புதமா என்று வியப்பீர்கள்! இவ்வளவு அழகானதா என்று ஆச்சரியப்படு வீர்கள். அதைத்தான், சித்தர்கள், 'சத்சித் ஆனந்தம்' என்று அழைக்கிறார்கள்.

இதை முதலில் புத்தர் சொன்னபோது, ஒருவரும் நம்பத் தயாராக இல்லை. இப்படி, ஜீசஸ், "கடவுளின் சாம்ராஜ்யம்" என்று அழைத்ததை யாரும் ஏற்றுக்கொள்ள

வில்லை. ஏன், அவரை நெருங்கி பின்பற்றியவர்கள் கூட அதை நம்பத் தயாராக இல்லை.

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

ஜீசஸின் சீடர்களிலேயே, தாமஸ் (THOMAS) என்பவரைத்தான் அவருக்கு மிகவும் பிடிக்கும். ஆனால், அந்த சீடருக்கு, ஜீசஸின் மேல் முழு நம்பிக்கைக் கிடையாது. இருந்தாலும் ஜீசஸ், அவரை மிகவும் நேசித்தார். அதனாலேயே மேல்நாட்டில் "சந்தேகிக்கும் தாமஸ்" (DOUBTING THOMAS) என்று ஓர் சொற்றொடர் ஆங்கிலத்தில் ஏற்பட்டது.

ஒரு சமயம், ஜீசஸ், தன் சீடர்களோடு கலிலீ (GALILEE) என்ற ஏரியின் ஒரு கரையிலிருந்து மறுகரைக்குச் செல்லும்பொழுது சீடர்களிடம், நீங்கள் முன்னே செல்லுங்கள் என்று சொன்னார். அவர்களெல்லாம் ஒரு படகில் இருந்தனர். அதைப்போல அவர்களும் சென்றனர். அப்பொழுது, அவர்களது படகு, நடு ஏரியில் சென்று கொண்டிருக்கும்பொழுது, திரும்பிப் பார்த்தனர். ஜீசஸ் வெறுமனே தண்ணீரின்மேல் நடந்துவந்து கொண்டு இருந்தார். ,அவர்களது கண்களை அவர்களால் நம்பவே முடியவில்லை!

அப்பொழுது அது ஏதோ பிசாசு (GHOST) என்று எண்ணினார்கள். அது ஜீசஸ்தான் என்று அவர்களால் நம்பமுடியவில்லை. அதற்குமுன், ஜீசஸ் செய்த பல அற்புதங்களைக் கண்டிருக்கின்றனர். இறந்தவன், உயிர் பெற்று வந்திருக்கிறான். ஆனால் இதைப்போல பார்த்த தில்லை. உடனே அவர்கள் மிகவும் அச்சம் கொண்டு, கடவுளை பிரார்த்திக்க ஆரம்பித்தனர். "எங்களை இந்த பிசாசுவிடமிருந்து காப்பாற்றுங்கள்" என்று பிரார்த்தனை செய்தார்கள். அந்த சமயம் தாமஸ் தைரியமாக ஜீசஸை நோக்கி, "யார் நீ?" என்று கத்தினான். அப்பொழுது ஜீசஸ், "என்னை உன்னால் பார்க்க முடியவில்லையா? என்னை

முற்றிலும் மறந்துவிட்டாயா, என்ன? நான்தான் உன் மாஷ்டர், ஜீசஸ்'' என்றார்.

இருந்தும், அவர்களது நடுக்கம் நின்றபாடில்லை அதாவது இன்னும் அவர்கள், அது ஜீசஸ்தான் என்று நம்பத்தயாராக இல்லை. அப்பொழுது தாமஸ், ''நீ உண்மையிலேயே ஜீசஸ்ஸாக இருந்தால், நீ உண்மையிலேயே தண்ணீரின் மேல் நடப்பதாக இருந்தால், நானும் தண்ணீரில் நடக்கவேண்டும். அதை நீ செய்யமுடியுமா?'' என்றான். மாஷ்டரை சோதிக்க இது ஒரு பரிஷை!

அதற்கு ஜீசஸ், ''ஆமாம் அது உன்னாலேயும் முடியும்'', என்று சொன்னதும், தாமஸ் தைரியமாக நீரின்மேல் நடக்க ஆரம்பித்தான். இரண்டு, மூன்று அடிகள் வைத்ததும், அவனிடம் ஒரு சந்தேகம் எழும்பியது. அதாவது, ''இந்த பிசாசு, ஏதோ என்னிடம் தந்திரம் செய்கிறது. இல்லாவிட்டால், என்னால் எப்படி நீரின்மேல் நடக்கமுடியும்?'' அவ்வளவுதான். அவன் உடனே தண்ணீரில் மூழ்க ஆரம்பித்துவிட்டான். உடனே ஜீசஸ் அவனிடம் சென்று அவனை தூக்கிக் காப்பாற்றினார். பிறகு அவனைப் பார்த்து ஜீசஸ், ''உன்னிடம், என்னைப் பற்றி கொஞ்சமாவது நம்பிக்கை வேண்டும்'' என்றார். அதனால்தான் ''சந்தேகிக்கும் தாமஸ்'' என்ற சொற்றொடர் வழக்கத்துக்கு வந்தது. ஆனால், இன்னும் அவன்தான், ஜீசஸின் நெருங்கிய சீடனாகக் கருதப்பட்டான். ஏனெனில், அவன் ஒருவனுக்குத்தான், நீரில் இறங்கி, தன் மாஷ்டர் சொன்னது சரிதானா என்று சோதிக்கும் அளவுக்குத் தைரியர் வந்தது. மற்றவர்கள் நடுங்கிக் கொண்டு இருக்கும்பொழுது, இவன் ஒருவன்தான் நீரில் நடக்க முயற்சித்தான். அந்தத் தைரியத்திற்காக, ஜீசஸ் அவனை மிகவும் நேசித்தார்.

அதைப்போல ஜீசஸ் சொன்ன, ''கடவுளின் சாம்ராஜ்யம்'' பற்றி, யாரும் நம்பத் தயாராக இல்லை. அதைப்போல, புத்தர் சொன்ன, சூன்யம், நிர்வாணம்

பற்றியும், யாரும் நம்பத் தயாராக இல்லை. ஏனெனில், யாருக்காவது கொஞ்சமாவது அந்த அநுபவம் கிட்டி இருக்கவேண்டும். இல்லாவிட்டால், எப்படி நம்புவது?

ஆனால், மக்கள் தங்கள் நரகத்திலிருந்து வெளியே வர மறுக்கிறார்களே? அந்தத் துன்பத்திலிருந்து விடுதலை யாவதே, அவர்களுக்கத் துன்பத்தைக் கொடுக்கிறதே? எதிலும் சந்தேகப்படும் தாமஸ்ஸாக இருக்கிறார்களே? அப்படி இருக்கும்பொழுது, அநுபவம் சிறிதாவது கிட்ட, ஏது வழி? ஒரு மனிதன் ஆத்மீகத்தில் சந்தேகப்படுவது தவறில்லை. ஆனால், உண்மையான மாஷ்டர் என்று புரிந்துகொண்ட பிறகு, அவரை மேலும் சந்தேகிப்பதா னால், அவனிடம் எந்த ஆத்மீக முன்னேற்றமும் ஏற்படாது. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். அப்படி சந்தேகப்படும் மனிதனுக்கு, மதத்தன்மை என்பது வெறும் கனவுக்குச் சமம்; மதத்தைப் பற்றிய நூல்கள் அனைத்தும் வெறும் கட்டுக்கதைகளாகத் தான் தெரியும். ஏனெனில், உங்கள் மனத்தை மூடிய நிலையில் வைத்திருக்கிறீர்கள். உங்களுக்கென்று ஒரு கொள்கையை, கருத்தை, உருவாக்கிக் கொண்டு, அதிலேயே வாழ விரும்புகிறீர்கள்.

ஆகவே, முதலில் உங்கள் மூடிய மனத்தின் ஜன்னல்களை திறங்கள். அதன் கதவை உடைத்து எறியுங்கள். அதை விட்டு வெளியே ஓடிவந்து, இந்த பரந்த ஆகாயத்தின் கீழ் திறந்த மனத்தோடு வெறுமனே இருங்கள். இயற்கையை உணர ஆரம்பியுங்கள். அதை ஆராய்ச்சி செய்வது வீண்வேலை. மனத்தின் மூலமாக, நீங்கள் ஆழமாக சிந்தித்து உங்கள் உள்ளே செல்லலாம். அப்பொழுதும், உங்கள் மனக்கதவை முழுவதும் திறக்க மாட்டீர்கள்! அங்கும், மூடிய மனத்தோடுதான் இருக்க விரும்புவீர்கள். உணர்வுதான், உங்களை அந்த மனத்திலிருந்து விடுதலை செய்யும். ஆனால், அதைக்கண்டு தான், நீங்கள் மிகவும் பயப்படுகிறீர்கள்! ஏனெனில், அதுதான், இந்த இயற்கை ஓட்டத்தோடு உங்களைச்

சேர்க்கும். இந்த பிரபஞ்ச உயிர்த்தன்மையோடு உங்களை ஒன்றுபடுத்தும்.

ஆகவே, உணர்வை அதிகமாக்குங்கள். சிந்திப்பதைக் குறையுங்கள். மெல்ல, மெல்ல, உங்கள் உணர்வு அதிகரித்து, நீங்கள் மிகுந்த ஒய்வுத்தன்மையை அடைவீர்கள்.

உங்களுடைய உணர்வு அதிகமாக அதிகமாக, நீங்கள் வாழ்வின் ரகசியங்களை உணர ஆரம்பிப்பீர்கள். அதற்காக, நீங்கள் எந்த முயற்சியும் செய்யத் தேவை இல்லை. நீங்கள் வெறுமனே எதையும் வாங்கிக்கொள்ளும் (RECEPTIVITY) தன்மையில் இருந்தால்போதும். எல்லாம் உங்களைத் தேடிவரும். எப்பொழுது அவைகளையெல்லாம் அறியவேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களோ, அப்பொழுதே அவைகளெல்லாம் உங்களை விட்டு மறைந்துவிடும். இந்த சுபி கதையின் அர்த்தம் இதுதான். இந்த கருத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இப்பொழுது கதையில்,

"கடற்கரைக்கு அருகில் ஒருவன் வசித்துவந்தான். அவன் கடல்பறவைகளை மிகவும் நேசித்தான்"

எல்லா உணர்வுகளுக்கும், அன்புதான் ஆதாரம். அதுதான், உணர்வுக்கு இருதயம். உங்களிடம் அன்பு இல்லாவிட்டால், எல்லா உணர்வுகளும் மெல்ல மெல்ல மறைய ஆரம்பிக்கும். நீங்கள் அன்போடு இருந்தால், எல்லா உணர்வுகளும் புத்துயிர் பெற ஆரம்பிக்கும். அந்த உணர்வு, நல்லதோ, கெட்டதோ, எல்லாமே முழுமையில் இயங்கும். நீங்கள் அன்போடு இருந்தால், வேண்டாத உணர்வுகளான, வெறுப்பு, கோபம், துக்கம் கூட முழுமையில் இயங்க ஆரம்பிக்கும். இதைக்கண்டு அதிர்ச்சி அடைவீர்கள். ஆனால், புரிந்துகொள்ளுங்கள்.

இந்தத் தொந்திரவால்தான், உங்கள் சமூகம், முழுமையான அன்பை அங்கீகரிப்பதில்லை. ஏனெனில், அன்பினால், சொர்க்கம் மட்டும் உண்டாவது இல்லை;

நரகமும் கூடவே உண்டாகிவிடும். இரண்டும் இணை பிரியாதத் தோழர்கள்! இவைகள் இரண்டும், ஒரு நாணயத்தின் இருபக்கங்கள்போல. ஆனால், இப்படி இருந்தால்தான், அந்த சொர்க்கத்துக்கு மதிப்பு. கோபம் கலக்காத அன்பு, எந்த ஆழமும் இல்லாதது. துக்கம் கலக்காத அன்பில் எந்த உயிரோட்டமும் இருக்காது.

வாழ்க்கை என்பதே இருதுருவங்கள் அடங்கியதே. இந்த இரண்டு துருவங்களிடையே. வாழ்வு மிகவும் சக்தியுடன், பல கோடி நிகழ்ச்சிகளால் தன்னை வெளிப் படுத்திக் கொள்ளுகிறது. அப்பொழுது அது மிகவும் சிக்கலாகிவிடுகிறது. இரண்டு மாறுபட்ட தன்மைகள் எப்பொழுதும் மோதியவாறு ஒரு புதிய உயிரோட்டத்தை உண்டு பண்ணிவிடுகின்றன. இப்படி நிகழ்ச்சிகள் தொடர்ந்து கொண்டே .போகின்றன. பிறகு அதில் ஒரு லயம் (HARMONEY) ஏற்படுகிறது. அது அரிஷ்டாட்டலின் தர்க்கத்தை சார்ந்தது அல்ல. ஜெக்லியனின் இருதுருவக் கொள்கையைச் (HEGELIAN DIALECTICS) சார்ந்தது. இப்படித் தான் வாழ்க்கை இயங்கிக்கொண்டே இருக்கிறது. அது மின்சாரத்தின் பாசிட்டிவ் (POSITIVE) நெகடிவ் (NEGATIVE) தன்மையையும், உயிரினங்களில், ஆண் பெண் தன்மையை யும் போல இயங்கிக்கொண்டிருக்கிறது. ஆனால், வாழ்வு இப்படி இருவேறுபட்டு இயங்கினாலும், மறுபடியும் இது ஒன்றாகிவிடுகிறது. அந்த ஒன்றும் ஒரு துருவாக இயங்குகிறது. பிறகு அதுவே இன்னொரு மாறுபட்ட துருவத்தை உண்டாக்கிக்கொள்ளுகிறது. எப்படி அமீபா, தன் உடலையே இரண்டாக்கிக் கொண்டு பல அமீபாக்களாகிறதோ, அதைப்போல, வாழ்வும் ஒன்றிலிருந்து இரண்டாகி, பிறகு பலவாறாகிறது. ஒரு கட்டத்தில், எல்லாம், மறுபடியும் ஒன்றாகிறது. இது மாறி மாறி நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. இதுதான் இந்த பிரபஞ்ச உயிரிக்க ரகசியம். இதை அறிவால் புரிந்துகொள்ள முடியாது. உங்களுடைய எந்தக்

கருத்துக்கும் ஒத்துவராது. இது ஒரு விளங்காத புதிர் (MYSTIC). அவ்வளவுதான்.

ஆகவே, உங்கள் அன்பில், துக்கமும் கலந்துதான் இருக்கும். உங்கள் மகிழ்ச்சியில், துன்பமும் கலந்துதான் இருக்கும். வாழ்வு என்பது ஆற்றின் இருகரைகள் போல. எந்த ஆற்றுக்கும் ஒரு கரை கிடையாது. அப்படி இருந்தால், அது ஆறே கிடையாது.

முதலில், மனிதன் பிரக்ஞை உணர்வு பெற்றபொழுது, வெறுப்பு, கோபம் போன்ற எதிர் வினை குணங்களைத் தவிர்க்க எண்ணினான். ஏனெனில், அவைகள் தீங்கு விளைவிக்கக் கூடியவை. ஆனால், அவைகள் மட்டும் தனித்து இயங்கினால், அது மிகவும் கெடுதலை உண்டுபண்ணும். ஒருவனை அவைகள் முழு பைத்தியமாக்கி விடும். அந்த எதிர்மறை செயல்களில் அன்பும் கலந்திருக்கவேண்டும். அப்பொழுதுதான், அதில் ஒரு உயிரோட்டம், லயம் எல்லாம் இருக்கும். ஒரு தகப்பன், தன் பிள்ளை மேல் கோபப்பட்டால், அதன் பின்னே, அன்பு மறைந்திருக்கும். அப்படி இல்லாவிட்டால், அது கொலை வெறிக்குச் சமம்தான். இப்படிப்பட்ட பெற்றோர் களை, குழந்தைகள் ஒருக்காலும் மன்னிக்காது. ஆகவே, அன்பு கலக்காத வெறுப்பு, கோபம் எல்லாம் விஷத்தன்மை யுடையது. அது உங்களையும், பிறரையும் சேர்த்து அழித்துவிடும்.

ஒரு கணவன், அன்பில்லாமல், மனைவிமேல் கோபப்பட்டால், அது அவனுடைய வெறும் அகங்காரத் தின் வெளிப்பாடு. அவளை எப்பொழுதும் தன் அதிகாரத் தின் கீழ் வைக்கவே, அவன் நினைக்கிறான். இப்படி வாழ்வதை விட, தனித்தனியே, சுதந்திரமாக வாழுவது எவ்வளவுவோ மேல்.

ஆகவே, அன்பு மேலே கிளம்பும்பொழுது, உணர்வு கள் எரிமலை போல் வெடிக்க ஆரம்பிக்கின்றன. அதைக் கண்டு மனிதன் மிகவும் பயப்படுகிறான். ஆகவே, அந்த

எரிமலையை சந்திக்க யாரும் விரும்புவதில்லை. அது அப்படியே மறைந்தே இருக்கட்டும் என்றுதான் விரும்புகிறான்.

ஆனால், புரிந்த ஞானிகள், அதில் சிதறும் கெட்ட உணர்வுகளைக் கண்டு அஞ்ச வேண்டாம் என்று தைரியம் சொல்லுவார்கள். அது இயற்கையான நிகழ்ச்சிதான். அதை ஒதுக்கவேண்டாம். அந்த அன்பில் எப்படி முழுமையாக வாழ வேண்டுமோ, அப்படியே அந்த வெறுப்பிலும், கோபத்திலும் முழுமையாக, தைரியமாக வாழுங்கள் என்பார்கள்.

செயிண்ட் அகஸ்ட்டினிடம் (SAINT AUGUSTINE) சில பேர்கள், "கிருஸ்துவின் செய்தியை, ஒரு சிறிய எளிமையான வாக்கியத்தின் மூலம் தெளிவுபடுத்துங்கள்" என்றார்கள். செயிண்ட் அகஸ்டின், தன் கண்களை மூடி, தியானத்தில் சிறிது நேரம் இருந்து, பிறகு, "ஒன்றே ஒன்றுதான். அது நீங்கள் அன்பாக இருங்கள். மற்றவை எல்லாம் தன்னால் நடக்கும்" என்றார்.

அன்புதான் இந்த உலகத்தில் மிகவும் சக்தி வாய்ந்தது. அதுதான் உங்கள் ஒழுக்க விதிகளுக்கெல்லாம் முதன்மையானது, ஆதாரமானது. அதுதான் உங்களை மேலே உயர்த்தும். உங்களுடைய அறிவார்ந்த அல்லது அறிவற்ற சிந்தனைகள் உங்களை எப்பொழுதும் கீழேயே கொண்டு செல்லும். சிந்தனை செய்வது தவறில்லை. ஆனால், அது உங்களது எஜமானனாக இருக்கக்கூடாது. உங்கள் சிந்தனை, உங்கள் உணர்வை மேம்படுத்துவதாக இருக்கவேண்டும். உணர்வுதான் உங்களுடைய மாஷ்டராக இருக்கவேண்டும். அறிவு, சிந்தனையெல்லாம் உங்களுக்குச் சேவகனாக இருக்கவேண்டும். வாழ்வு உணர்வுமயமானது, அறிவுமயமானது அல்ல. இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். வெறும் பகுத்தறிவு வாழ்வு, இயந்திர மனிதனுக்கு (ROBOT) சமம்தான். ஒரு இயந்திர மனிதனிடம் உணர்வை, அன்பை எதிர்பார்க்க முடியுமா? ஒரு மரம்

பகுத்தறிவு இல்லாமல் வாழமுடியும். ஆனால், உணர்வு இல்லாமல் அதனால் வாழவே முடியாது. அதைப்போலத் தான் நீங்களும். இப்பொழுது விஞ்ஞானிகள், மரங்களுக்கு உணர்வு உண்டு என்று நிரூபித்திருக்கிறார்கள். ஏன், நட்சத்திரங்கள், பாறைகள், ஆறுகள் என்று அனைத்திற்கும் உணர்வு உண்டு காட்டியிருக்கிறார்கள். ஆனால், அவைக ளுடைய உணர்வுகள் மிகவும் மென்மையானது.

ஆகவே, பறவைகள் முதல் விலங்குகள் அனைத்தும் உணர்வு மூலமாகவே வாழுகின்றன. ஆனால், மனிதன்? தன் தலையின் மூலமாகவே (அறிவு, எண்ணம்) வாழுகிறான். அதாவது இயற்கைக்கு மாறாக செயல்படுகிறான். அப்படி எண்ணத்தின் மூலமாக வாழும்பொழுது, உணர்வு அடக்கப்பட்டு விடுகிறது. அரசியல்வாதிகள், இந்த சமூகத்தை தங்கள் எண்ணங்களின் வாயிலாகவே ஆளுகிறார்கள். இந்த சமூகத்தை சரியான முறையில் வழிநடத்திச் செல்ல ஓர் சிறந்த கவிஞன்தான் தேவை. வஞ்சக எண்ணம் கொண்ட அரசியல்வாதி அல்ல. ஓர் கவிஞன் உணர்வுப்பூர்வமானவன். அவனிடம் அறிவைவிட, உணர்வு மேலோங்கி நிற்கும். அப்பொழுது இந்த உலகம் வேறுவிதமாக மாறிவிடும். அங்கு கருணை, அன்பு, மனிதாபிமானம் என்பவைகள் அடிப்படையாகி விடுகின் றன. ஆனால், ஒரு சமூகத்தை, மூளை ஆட்சி செய்தால், அது எப்பொழுதும், சண்டை, சச்சரவு என்று பல துன்பங் களில் தான் உழலும். தனி மனிதன்தான், சமூகமாகிறான். ஆகவே, மாற்றம் என்பது தனிமனிதனிடம் ஏற்பட வேண்டும்.

நீங்கள் உணர்வுமயமானால், உங்கள் எண்ணத்தில் மிருதுத்தன்மை ஏற்படும். அப்பொழுது உங்களது உணர்வு, அறிவை ஆட்சி செய்கிறது. உணர்வு மூலமாக, அறிவு இயங்குகிறது. இதுமிகவும் அழகானது, வரவேற்கத்தக்கது. அப்பொழுது, அந்த மென்மையான உணர்வை, அறிவு பாதுகாக்கிறது. அடுத்தது என்ன நடக்கும் என்று அறிவு,

உணர்வுக்கு எடுத்துச் சொல்லுகிறது. அது ஒரு அரசனின், மந்திரிபோல் வேலை செய்கிறது. நீங்கள் அறிவுப் பூர்வமாகத் திட்டமிடலாம். ஆனால், அதில் உணர்வும் கலந்தே இருக்கவேண்டும். உங்கள் அறிவு, உங்கள் உணர்வுக்கு ஒரு உண்மையான ஊழியனாகவே இருக்க வேண்டும். இதில் ஜாக்கிரதையாக இருக்கவும்.

நீங்கள் அன்போடு இருந்தால், நீங்கள் இந்த பிரபஞ்ச உயிர்த்தன்மையோடு இயைந்து வாழமுடியும். இந்த மரங்கள் உங்களிடம் பேசும். இந்தப் பறவைகள் உங்களை நேசித்து, உங்கள் அருகில் பயமின்றி வரும். மிருகங்கள் உங்களைக் கண்டு பயப்படாது. மனிதன் பொதுவாக தன் தலையின் மூலமாகவே, பயத்தை உண்டு பண்ணிக் கொள்ளுகிறான். ஆனால், அன்பின் மூலமாக, இதயத்தின் மூலமாக, அவன் இயற்கையோடு, இந்த உயிரினங்களோடு ஒன்றாகுகிறான். அப்பொழுது பயத்துக்கு வேலை என்ன?

மறுபடி கதையில் "கடற்கரையோரம் வசிக்கும் அந்த மனிதன், ஒவ்வொரு நாள் காலையிலும், கடற்கரைக்குச் சென்று, அங்குள்ள பறவைகளுடன் கலந்து விளையாடுவான். அவனை நோக்கி, பல நூறு பறவைகள் அன்புடன் ஓடிவரும்".

அவனைக் கண்டதும், அவைகளெல்லாம் குதித்தும், ஆடியும், மகிழ்ச்சியில் கத்திக்கொண்டும் அவனை நோக்கி ஆயிரக்கணக்கில் ஓடி வருகின்றன. ஏனெனில், அவனுடைய உணர்வை, அன்பை, அவைகள் உணர்ந்துகொண்டன. அவைகள் உணர்வு வழியாக வாழுவதால், மற்றொரு உணர்வை எளிதில் புரிந்துகொள்ளும். ஆனால், மனிதனால் முடியாது. ஏனெனில், பெரும்பாலான மனிதர்கள் மூளையைக் கொண்டே வாழுகிறார்கள். அந்த பறவைகள் மாத்திரம் அல்ல. இந்த இயற்கையே உணர்வு வழியாகவேச் செயல்படுகிறது. இந்த அடிப்படைக் கருத்தை, நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

யுனானி மருத்துவத்தைக் கண்டுபிடித்த, லூக்மான் (LUKMAN) என்ற மனிதர் மிகுந்த புத்திசாலி. அவர், தன் தோட்டத்தில் உள்ள மரங்கள், செடிகள், கொடிகளிடம் சென்று, அன்புடன் அவைகளைத் தடவிக்கொடுத்து, அவைகளிடம், "உங்களால் என்ன உபயோகம்? உங்களால், எந்தெந்த வியாதிகளைக் குணமாக்க முடியும்?" என்று அன்புடன், மென்மையாகக் கேட்பார். அப்பொழுது அவரிடம் ஏற்படும் உணர்வுப்பூர்வமான அறிவினால், அவர் பல வியாதிகளுக்கு, அரிய மூலிகைகளைக் கண்டுபிடித்தார். அவரிடம் ஏற்பட்ட அந்த உணர்வுகள், அந்த செடிகளால் கொடுக்கப்பட்டவை.

இது ஏதோ கட்டுக்கதைப் போலத் தோன்றும். ஆனால், அவர் எவ்வளவு வியாதிகளைக் குணப்படுத்தி இருக்கிறார்? இது எப்படி சாத்தியமானது? விஞ்ஞானிகளுக்குப் புரியவே இல்லை. அவரிடம் எந்த பரிசோதனைக் கூடமும் இல்லை. எந்த விஞ்ஞானக் கருவிகளும் கிடையாது. ஆனால் கண்டுபிடித்த மூலிகைகள், ஒன்றா, இரண்டா? பல நூறுகள் இருக்கும். அவைகளையெல்லாம் சோதித்துப் பார்க்க, ஏன் 100 அல்லது 1000 வருடங்கள் ஆனாலும், ஆச்சரியப்படுவதற்கில்லை.

இதைப்போலத்தான் இந்தியாவில், இந்திய மருத்துவம், அதாவது ஆயுர்வேதம் உண்டாயிற்று. இதனுடைய ரகசியமே யுனானி மருத்துவத்தின் ரகசியம் தான். அதாவது, மூலிகைகளே தங்களுடைய குணங்களை, தகுந்தவர்களிடம் உணர்த்தியது. அந்தத் 'தகுந்தவர்'களுக்கு, அவைகளுடைய மொழி புரியும்! அது முழுக்க முழுக்க உணர்வுமயமானது. அந்த மொழிதான் இந்த பிரபஞ்ச மொழி. மனிதனுடைய ஆயிரக்கணக்கான மொழிகள், அவன் அறிவால் ஏற்படுத்தப்பட்டன. அதற்கும், இந்த பிரபஞ்ச மொழிக்கும் எந்த சம்மந்தமும் கிடையாது. அவனுடைய மொழிகளின் ஆதாரம் அறிவு. இந்த பிரபஞ்ச மொழிக்கு ஆதாரம் உணர்வு. இந்த வித்தியாசத்தைத்

தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். ஆகவே, இந்தப் பிரபஞ்ச உயிரினங்களை, உணர்வோடு, அன்போடு, கருணையோடு நெருங்கினால், அவைகள் நட்புடன், தங்களுடைய ரகசியங்களை, உங்களுக்கு உணர்த்தும்.

அவனைச் சுற்றி, ஆயிரக்கணக்கான பறவைகள் சூழ்ந்து கொள்வதின் காரணம், அவனுடைய இதயம் கலந்த் அன்பு. அன்பைக்கண்டு யாராவது பயப்படுவார்களா? கடவுளின் சிம்மாசனமே அன்புதான். ஒரு மனிதனைவிட, பறவைகள், விலங்குகள், மரங்கள், செடிகொடிகள், உங்களுடைய உணர்வுகளை எளிதில் புரிந்துகொள்ளும். ஏனெனில், அவைகளிடம் எண்ணுவதற்கு என்று எந்த கருவியும் கிடையாது. அவைகளுடைய மூளையின் திறன் மிக அற்பமானது.

மேல்நாட்டில், செடிகளை வைத்து பரிசோதனை பண்ணும்பொழுது, அதாவது, நீங்கள் அந்த செடியின் மலரை பறிக்கும் எண்ணத்துடன் நெருங்கினாள், வெறும் எண்ணத்துடன், அது முழுமையாக ஓர் அதிர்ச்சி அதிர்வை உண்டு பண்ணுகிறது. பய உணர்வை வெளிப்படுத்துகிறது என்பதை மிக நுண்மையான கருவிகளை வைத்து நிரூபித்து இருக்கிறார்கள். அதேசமயம், அதற்கு தண்ணீர் விடும் எண்ணத்துடன் நெருங்கினால், அது மகிழ்ச்சி அலையை வெளிப்படுத்துகிறது.

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள். நியூயார்க்கில், ஒரு பரிசோதனைக் கூடத்தில், ஒரு விஞ்ஞானி, மண்புழுக்களை வைத்து ஆராய்ச்சி செய்யும்பொழுது, அவருக்கருகில் ஒரு செடியும் இருந்தது. அப்படி ஆராயும்பொழுது, அந்த புழுக்களை துன்புறுத்திதான் ஆகவேண்டும். அதைப்போல வேறு பூச்சிகளை ஆராயும்பொழுதும், அவைகளை சிதைத்து துன்புறுத்திதான் புரிந்துகொள்ள வேண்டும். அந்த சமயம், அவர் ஒரு மண்புழுவை, எதற்கோ கொதிக்கும் தண்ணீரில் போட்டார். அப்பொழுது தவறுதலாக, செடிகளின் அதிர்வை அளக்கும் கருவியின் இணைப்பை, அந்த செடியோடு இணைத்துவிட்டார். அந்த

செடி, தன் கோபத்தையும், பயத்தையும், அதிர்ச்சியையும் வெளிப்படுத்தியதை, பல அலைகளாக அந்த நுண்ணிய கருவி காட்டியது!

நீங்கள், தோட்டத்தில் உள்ள ஒரு செடியை வெட்டினால், அது அந்த தோட்டம் முழுவதும் உள்ள செடிகளில், ஓர் பய அதிர்வை ஏற்படுத்துகிறது என்றும் கண்டுபிடித்து இருக்கிறார்கள். அதைப்போல, நீங்கள் கோபமாக இருந்தால், காமமாக இருந்தால், அன்பாக இருந்தால், பலவித அலைகளை, உங்களை அறியாமலே நீங்கள் வெளிப்படுத்துகிறீர்கள். இந்த அலைகளின் மொழியை, அல்லது கருத்தை, இந்த பிரபஞ்ச உயிர்த்தன்மை எளிதாக புரிந்துகொள்ளும். ஏனெனில், இந்த அலைகளின் வேறுபாடு, உங்கள் உள்ளத்தில் ஏற்படும் உணர்வால் உண்டாகிறது. இந்த பேரியக்க உயிர் சக்தியும் உணர்வுமயமானது. ஆகவே, அந்த உணர்வின் மொழி, அதற்கு மிக நன்றாகத் தெரியும்.

புத்தர், தன் ஞானநிலையை, பூர்ண விழிப்பு நிலையை (ENLIGHTMENTS) அடைந்தபொழுது, மரங்கள் தன் பருவ காலங்களை மறந்து, பூக்களை சொறிந்தன என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவருடைய அப்போதைய பூர்ண பேரானந்த நிலை, சுற்றிலும் பரவி ஓர் மகிழ்ச்சி அலையை ஏற்படுத்த, அந்த உணர்வை புரிந்துகொண்ட மரங்கள், தன் மகிழ்ச்சியை பூக்களை உண்டாக்கி மகிழ்ந்தன. இது கட்டுக்கதையாக இருக்கலாம், அல்லது உண்மையாக இருக்கலாம். இப்படி இப்பொழுது யாராவது, பூர்ண விழிப்பு நிலையை அடைந்தால், அந்த நேரத்தில், அவரைச் சுற்றிலும் உள்ள செடிகளின் உணர்வை, கருவியின் மூலம் அளந்தால், இந்த உண்மை வெளிப்படும்.

வாழ்க்கை, பல மர்மங்களையுடையது. அதனுடைய செயல்கள், கட்டுக்கதைக்கு மேலாக, கற்பனைக்கெட்டாததாகவே உள்ளன! இதை ஆழ்ந்து நோக்கினால் புரியும்.

மறுபடி கதையில்,

"ஒருநாள், அவனுடைய தகப்பனார் அவனிடம், "இந்தக் கடல்பறவைகள் அனைத்தும் உன்னைச் சுற்றி மகிழ்ச்சியாக அலைகின்றன, விளையாடுகின்றன என்று கேள்விப்பட்டேன். அவைகளில் சிலவற்றை, நானும் விளையாட எடுத்துவா" என்றார்.

அவர், அந்த பறவைகளுடன் அறிவுப்பூர்வமாக அணுகுகிறார். அதாவது, இவைகள் ஏன் தன் மகனோடு மட்டும் மகிழ்ச்சியாக இருக்கின்றன என்ற ஆராய்ச்சியில் ஈடுபட, அவைகளைக் கொண்டு வர விரும்பினார். உண்மையில், அவற்றோடு அன்புடன் விளையாடுவதற்கு அல்ல. அப்படி இருந்தால், இவர் அந்தப் பறவையை நோக்கிச் சென்றிருப்பார். அவருடைய மூளை வேலை செய்யும் அளவுக்கு, அவரது உள்ளம் இயங்கவில்லை. அந்த ஆராய்ச்சியில், அவர் அவைகளில் சிலவற்றை கொல்லக்கூடக் கூடும்.

"அடுத்தநாள், அவன் அவைகளை நோக்கிச் செல்லும்பொழுது, அவைகள் அவன் பிடிக்கு அகப்படாமல், எல்லாமே அவன் தலைக்குமேல் பறந்து நாட்டியமாடின. ஒன்றுகூட கீழே வரவில்லை".

அந்த பறவைகளுக்கு, அவன் மனத்தில் உள்ளது என்ன என்று தெரியாது. ஆனால், அவன் எண்ணங்கள் ஏற்படுத்தும் வித்தியாசமான அலைகளை, உணர்வு மூலமாக அவைகள் புரிந்துகொண்டுவிட்டன. ஏனெனில், நீங்கள் எப்பொழுதும் உங்கள் எண்ணங்களுக்கு ஏற்ப, பல அதிர்வுகளை உங்களைச் சுற்றி ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறீர்கள். ஒரு ஏரியில் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டால், அது எப்படி பல அலைகளை உண்டுபண்ணி, அந்த அலைகள் மெல்ல மெல்ல, அந்த ஏரி முழுவதும் பரவி, கரையை அடைகிறதோ, அதைப்போல, உங்கள்

உள்ளம் என்ற ஏரியில், எண்ணம் என்ற கல்லைத் தூக்கிப் போட்டால், அதில் உணர்வு அலைகள் ஏற்பட்டு, அது உங்களைச் சுற்றி பரவுகிறது.

தன் மகனிடம், அவர் என்ன சொல்லி இருப்பார் என்று அந்த பறவைகளுக்குத் தெரியாது. ஏனெனில், மனிதன் உண்டாக்கிய மொழி அவைகளுக்குப் புரியாது. மனிதன் எவ்வளவு மொழிகளை உண்டாக்கியிருக்கிறான் ஒரு சீனாக்காரன் அல்லது ஜப்பான்காரன், ஓர் ஆப்பிரிக்கன் பேசினால் உங்களால் புரிந்துகொள்ள முடியுமா? அப்பொழுது நீங்கள் எவ்வளவு அந்நியனாக உணருகிறீர்கள்? மனிதன் தன் அன்பை முழுமையாக வெளிப்படுத்துவதற்கு, நம் மொழிகளே ஒரு தடங்கலாக இருக்கின்றன. இந்த உலகத்தில் உள்ள மக்கள் அனைவரும் புரிந்துகொள்ளக்கூடிய ஒரு மொழியை, மனிதன் உண்டாக் கவேண்டும். ஆனால் மொழிவெறி பிடித்து அலையும் இந்த காலத்தில், அது நடக்கவே நடக்காது. அதற்கு பரந்த மனப்பாங்கு இந்த உலக மக்களிடம் ஏற்படவேண்டும்.

அந்தப் பறவைகளுக்கு, இப்பொழுது வரும் மனிதன் வித்தியாசமாகத் தெரிகிறது. அவன், பழைய மனிதனாக, முழு அன்போடு வரவில்லை என்று அவைகள் உணர்ந்து கொண்டன. அவைகளில் ஏதோ வித்தியாசமான எண்ணங் கள் கலந்திருப்பதை உணர்ந்து கொண்டுவிட்டன.

இந்த பிரபஞ்ச வாழ்க்கையின் ரகசியமே இதுதான். நீங்கள் எந்த எண்ணமும் இல்லாமல் அன்போடு எதையும் அநுமதிக்கும் நிலையில், ஓர் ஒய்வுத்தன்மையில், தியான நிலையில் இருந்தால், மகிழ்ச்சி, அன்பு, கருணை எல்லாம் உங்களைத் தேடி ஓடிவரும். சுருக்கமாக, நீங்கள் உள்ளத்தில் முழுமையாக இயங்கினால், (அறிவால் அல்ல) அவைகள்

அனைத்தும் அன்புடன் ஓடிவரும். ஆனால், மனத்தைக் கொண்டு அல்லது எண்ணத்தைக்கொண்டு, அவைகளைத் துரத்த நினைத்தால், பிடிக்க நினைத்தால், அவைகள் உங்களைவிட்டு ஓடும். அவைகள் உங்கள் கைக்கு அகப் படாமல், உங்கள் தலைக்குமேல் நின்று கொண்டு நாட்டியமாடும்!

உங்கள் மகிழ்ச்சிதான், அந்தக் கடல்பறவைகள். உங்கள் தியானநிலை தான், அந்த கடல்பறவைகள். ஆகவே, நீங்கள் எதையும் அனுமதிக்கும் தன்மையில் (LET-GO) இருந்தால், அவைகள் உங்களை நோக்கி அன்புடன் ஓடிவரும். அப்பொழுது இந்த பிரபஞ்ச உயிர்த்தன்மை, தானாகவே பல பரிசுகளை உங்களுக்கு அளிக்கும். நீங்கள் அவைகளைத் தேடிப் போகவே வேண்டாம். அப்படிப் போனால், அவைகள் உங்களுக்குக் கிடைக்காது. அந்த பரிசுகள்தான் எல்லையில்லா பேரானந்தம், முழு திருப்தி, அமைதி எல்லாம். அப்பொழுது, நீங்களும் ஒரு புத்தரா கிறீர்கள்.

இவைகள் அனைத்தையும், அது உங்களுக்கு அளிக்கத் தயாராக இருக்கிறது. ஆனால், அதை வாங்கிக் கொள்ள, நீங்கள் தயாராக இல்லை. ஏனெனில், நீங்கள் எப்பொழுதும் எப்படி அவைகளை அடைவது என்ற எண்ணத்திலேயே இருக்கிறீர்கள். எப்படி அவைகளை பிடுங்குவது என்று தீவிரமாக இருக்கிறீர்கள். பரிசுகளை பிடுங்கி அடைய முடியாது. அது தானே உங்களை வந்து அடையவேண்டும். அதில் அன்பும், கருணையும் கலந்து இருக்கும். அதை ஜெயித்து அடையமுடியாது. நீங்கள் உங்கள் எண்ணங்களை பூர்ண சரணாகதியாக்கி, அவைகளை முழு உள்ளத்தோடு அனுமதிக்கவேண்டும்.

இந்த இயற்கையில் எவைகள் எல்லாம் அழகாக இருக்கின்றனவோ, அவைகள் அனைத்தும் அந்த கடற் பறவைகளுக்கு சமம். ஒன்றை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் எதுவும் செய்யாமல் இருந்தால், எல்லாம் தானே நடக்கும். விருந்து தயாராக இருக்கிறது. நீங்களும் அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், முன் கதவு வழியாக உள்ளே செல்லுவதற்குப் பதிலாக, பின் கதவு வழியாக உள்ளே நுழைய ஆசைப்படுகிறீர்கள். ஆனால், இந்த பிரபஞ்ச உயிர் இயக்கத்தில், பின் கதவு என்று ஒன்றும் கிடையாது. ஒரே ஒரு கதவுதான் உண்டு. அது முன் கதவு ஒன்றுதான். ஆனால், ஒரு திருடனைப் போல, நீங்கள் பின் கதவைத் தேடி அலைகிறீர்கள்.

வாழ்வு, உங்களுக்கு எவ்வளவோ அளிக்கத் தயாராக இருக்கிறது. எந்தக் கட்டுப்பாடும் இல்லாமல், உங்களுக்கு வாரிவழங்கத் தயாராக இருக்கிறது. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், அது தானே நிகழுவதற்கு அனுமதிக்கவேண்டும். அவ்வளவுதான். உங்களுடைய எந்த முயற்சியும் தேவை இல்லை. நீங்கள், நீங்களாக உள்ளத்தின் இயக்கத்தில், முழு ஓய்வாக இருந்தால் போதும். முயற்சிகள் எல்லாம் இந்த உலகப் பொருட்களை அடைவதற்குத் தான் தேவை. ஆத்மீக பேரானந்தத்தை அடைய, உங்களுடைய முயற்சி எதுவும் தேவை இல்லை. இந்த வித்தியாசத்தை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

ஆகவே, ஜெபர்சன் சொன்னதை கேட்கவேண்டாம். மகிழ்ச்சி என்பது உங்களுடைய உரிமை இல்லை. அதை அபகரிக்க, அல்லது அடைய, நீங்கள் முயற்சி செய்ய வேண்டாம். அது வீண்வேலை. அதைத் துரத்துவதற்குப்

பதிலாக, அதுதானே உங்களை வந்து அடைய அனுமதியுங்கள்.

அது ஒரு வெட்கப்படும் பெண்போல உங்களை சுற்றி வளைத்துதான் அடைய விரும்பும். நீங்கள் ஒரு பெண்ணிடம் நேராகச் சென்று, நான் உன்னோடு படுக்கையில் காதல் புரிய ஆசைப்படுகிறேன் என்று சொன்னால், நீங்கள் ஒருக்காலும் அவளை அடையமாட்டீர்கள். அது மிகவும் அருவருப்பான செயல். நீங்கள் அவளுடன் உடலுறவுப் பற்றி எந்த எண்ணமும் இல்லாமல், திறந்த மனத்துடன், அன்புடன் பழகுங்கள். பொறுமையாக ஒரு கவிதை உள்ளத்தோடு அநுகுங்கள். நீங்கள் அவளோடு வெறுமனே மட்டும் இருக்க விரும்புங்கள். அதை மட்டும் அநுபவிங்கள். ஒருநாள், அவளே உங்களைக் கட்டித்தழுவ விருப்பம் கொள்ளுவாள்.

"புனிதம் அற்றவைகள் எல்லாம் உங்கள் முயற்சியால் கிடைத்தவை. புனிதமுடையவைகளெல்லாம் உங்கள் செயலற்ற நிலையில் தானே வருபவைகள்."

# 3. தாயின் அரவணைப்புக்கு அப்பால்
## (BEYOND MOTHER'S KNEES)

"ஓர் சுபியின் கூடாரத்துக்கு, மூன்று மனிதர்கள் சென்று, அவருடைய போதனையைக் கேட்க அநுமதி கேட்டனர். அப்பொழுது அந்த சுபி மாஷ்டர் முரட்டுத்தனமாக நடந்ததைப் பார்த்து, அந்த மூன்று பேரில் ஒருவன், மிகவும் கோபம் கொண்டு, வெளியேறி விட்டான்.

அந்த சுபி மாஷ்டரின் ரகசிய கட்டளையின் பேரில், அவருடைய சீடர்களில் ஒருவன், இரண்டாவது மனிதனிடம், தன் மாஷ்டர் ஒரு போலி, உண்மையான மாஷ்டர் அல்ல என்று சொன்னான். அவனும் விலகி விட்டான்.

இப்பொழுது மூன்றாவது மனிதனுக்கு மாத்திரம் அநுமதி அளிக்கப்பட்டது. ஆனால் நீண்ட நாட்களுக்கு, அவனுக்கு எந்த போதனையும் அளிக்காத காரணத்தால், அவனும் ஆர்வம் இழந்து, வெளியேறி விட்டான்."

இப்படி மூன்று பேர்களும் வெளியேறிய பிறகு, அந்த மாஷ்டர், தன் சீடர்களுக்கு கீழ்க்கண்டவாறு போதித்தார். அதாவது, "முதல் மனிதன், பார்வையின் மூலம், எதிலும் ஒரு முடிவுக்கு வரவேண்டாம் என்ற கருத்துக்கு விளக்கமாக இருந்தான். இரண்டாவது மனிதன், கேட்பதன் மூலம், எதற்கும் ஆழமான முக்யத்வம் கொடுக்க வேண்டாம் என்பதற்கு இலக்கணமாக இருந்தான். மூன்றாவது ஆள், எதையும் பேசுவதன் மூலமோ அல்லது வெறுமனே இருப்பதன் மூலமோ, ஒருவனை எடை போட வேண்டாம் என்பதற்கு உதாரணமாக இருந்தான்" என்றார்.

அப்பொழுது, அவரது சீடர்களில் ஒருவன், "இதை நீங்கள் அவர்களிடமே தெளிவாகத் தெரிவித்திருக்கலாமே" என்று கேட்டான். அதற்கு அந்த ஞானி, "நான் உங்களுக்கு மேலான போதனைகளை அளிக்கவே இங்கு இருக்கிறேன்.

ஒரு தாயின் அரவணைப்பின் கீழ், தனக்கு எல்லாம் தெரியும் என்ற மேலோட்டமான அகங்காரத்தில் இருப்பவர்களுக்கு, நான் எந்த போதனையும் செய்யத் தயாராக இல்லை'' என்றார்.

நான் உங்களிடம் எதையோ பற்றிப் பேசவில்லை. ஆனால், அந்த குறிப்பிட்ட ஒன்றைப் பற்றித்தான் எப்பொழுதும் பேசுகிறேன். நான் அதைப்பற்றி உங்களிடம் பேசினாலும் அல்லது பேசாவிட்டாலும், நான் எப்பொழுதும் அதுவாகவே இருக்கிறேன். அதை நீங்கள் கடவுள் என்றோ அல்லது யாரோ ஒருவர் என்றே எண்ணிக் கொள்ளலாம். அந்தத் தெரியாத ஒன்றைப் பற்றி, யாரும் கற்பிக்க முடியாது. அதை ஒருவர் தானேதான் கற்றுக் கொள்ள வேண்டும். அப்படி நீங்கள் அதைத் தெரிந்து கொண்டாலும், அது எப்பொழுதும் கற்றுக்கொள்ளக் கூடிய தன்மையில்தான் இருக்கும். அதாவது அதற்கு முடிவே கிடையாது. இந்த புரியாத தன்மைதான் அதன் அழகே. அது ஒரு போதும், தன்னை முழுமையாக, யாருக்கும் வெளிப்படுத்தியதே இல்லை. அப்படி வெளிப் படுத்தியிருந்தால், அது முற்றுப் பெற்றுவிடும். ஆனால், அதற்கு ஆரம்பமும், முடிவும் இல்லை. இதை மீண்டும் ஒருமுறை சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள்.

கடவுள் என்பது ஓர் விஷய ஞானம் (KNOWLEDGE) இல்லை. விஷய ஞானத்தை தெளிவாக்கி 'இப்படித்தான்' என்று அடித்துச் சொல்லலாம். ஆனால், கடவுள் தன்மையைப் பற்றி, நீங்கள் அறிய, அறிய அது மேலும் புதிராகவே தன்னைக் காட்டிக்கொள்ளும்! நீங்கள் அதில் ஆழ்ந்து செல்லச் செல்ல, அது உங்கள் கைக்கு அகப்படாமலே நழுவிச் செல்லும். அப்படி, அதன் மையநிலைக்கு அருகில் வந்தால், நீங்கள் உங்களையே இழந்திருப்பதை உணருவீர்கள். அதாவது உங்கள் மனம் முற்றிலும் மறையும் தன்மையில் இருக்கும். பிறகு அடுத்தத்

தாவலில், எல்லா விஷய ஞானங்களும் மறைந்துவிடும். சுருக்கமாகச் சொன்னால், நீங்கள் மறைந்து விடுகிறீர்கள்.

இப்படி நீங்கள் அந்த பூர்ண விழிப்பின் மைய நிலையைத் தொட்டால், கடவுள்தன்மை அங்கு முழுமை யாக இருக்கும். ஆனால், நீங்கள் அங்கு, கண்டிப்பாக இருக்கமாட்டீர்கள். அங்கு தேடுபவன் மறைந்துவிடுகிறான். அறிந்தவனும் மறைந்துவிடுகிறான். அப்படி அறிந்தவன் மறையும்பொழுது, அந்த இதுவரை அறியாததை, வார்த்தை வடிவில் விஷய ஞானமாக்கிச் சொல்லுவதற்கு, வேறு யார் உங்கள் உள்ளே இருக்கிறார்கள். உங்கள் மனம்தான் மறைந்துவிட்டதே? ஆகவேதான் அது இன்னும் புரியாத புதிராகவே இருக்கிறது. ஏனெனில், அந்த புதிரை அவிழ்ப் பதற்கு வேறுயாரும் இப்பொழுது உங்களிடம் கிடையாது.

ஆனால், அது மிகவும் அழகாக உங்களிடம் ஓர் உணர்வை ஏற்படுத்தும். அதை நீங்கள் மட்டும்தான் அறிந்து கொள்ளமுடியும், உணர்ந்து கொள்ளமுடியும். ஏனெனில், அதுதான் உண்மையான 'நீங்கள்'. ஆனால், அந்த பிரம்மத்தை வார்த்தையால் எச்சில்படுத்த முடியாது. அதை விஷயஞானமாக்க எந்த மாஷ்டராலும் முடியாது. ஆனால், அவர் தன்னைத்தானே அதுவாகக் காட்டிக் கொள்ளுவார். அவரே பிரம்மவடிவமாக இருப்பார்.

கடவுளைப் பற்றி அறிவது என்பது மிகவும் கீழான நிலை. இந்த 'பற்றி' என்ற வார்த்தை மிகவும் மேலோட்டமானது. யாராவது என்னிடம் கடவுளைப் பற்றி அறிய வந்தால், நான் எந்த ஈடுபாடும் அவர்களிடம் காட்டுவதில்லை. ஆனால், என்னிடம் கடவுளை உணர யாராவது வந்தால், அவர்களிடம் மாத்திரம் அக்கரைக் கொள்ளுகிறேன். ஏனெனில், அப்படிப்பட்டவர்கள் தான், தன் மனம் இறக்க தைரியமாக முன் வருவார்கள். அது அவரே முன்வந்து இறப்பதற்கு சமம்தான். இந்த அபாயத்தை எதிர்கொள்ளுபவர்கள்தான் அந்த சொர்க்கத்தை அடையமுடியும்.

நீங்கள் ஒன்றை இழந்தால்தான், இன்னொன்றை பெறமுடியும். நீங்கள் எதையும் இழக்க விரும்பவில்லையென்றால், உங்கள் நேரத்தை ஆத்மீகத்தில் வீணடிக்க வேண்டாம். அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை. அப்படிப்பட்டவர்களை, அவர்களே உணராதவண்ணம், ஓர் உண்மையான மாஷ்டர் தன்னிடமிருந்து மெல்ல விலக்கிவிடுவார். அதற்கு பதில், நீங்களே, அந்த மாஷ்டரை விலக்கிவிட்டது போல் ஓர் பிரமையை உங்களிடம் ஏற்படுத்திவிடுவார். இது அவருடைய கருணையையே காண்பிக்கிறது. ஏனெனில், ஓர் மாஷ்டர் தானே, அவனை விலக்கினால், அந்த மனிதனின் மனம் புண்படும். அப்படி, அவர் நடந்துகொள்ள விரும்புவதே இல்லை.

சூபிக்களுடைய மதத்தின் கருத்துகள் மிகவும் அழகானவை. இந்த கதையும் மிகவும் அடிப்படையான கருத்தைக் கொண்டது. இந்த கதையை நன்றாக அலசுவதற்கு முன், சில முக்கிய விஷயங்களை, நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

முதலில், நீங்கள் ஒரு மாஷ்டரை அணுகும்பொழுது, அவரை எடை போடவேண்டும் என்ற எண்ணத்துடன் நெருங்காதீர்கள். அப்படி செய்தால், நீங்கள் அவரை முற்றிலும் நம்பவில்லை என்று அர்த்தம். ஓர் சீடன், இதில் தீர்மானமாக இருக்கவேண்டும். ஓர் மாஷ்டரிடம் கலப்பதற்கு ஒரு சீடனுக்கு பூர்ண நம்பிக்கை அவசியம்.

ஒரு மாஷ்டரை அறிவுப்பூர்வமாக எடைபோடுவதற்கும் (JUDGEMENT), உணர்வுப்பூர்வமாக நம்பிக்கை வைப்பதற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. அறிவுப்பூர்வமாக எடைபோடுவதில், நீங்கள் உங்கள் மையத்தில் இருக்கிறீர்கள். அதாவது உங்கள் மனத்தின் மையத்தில் இருந்து, எடைபோடுகிறீர்கள். ஆனால், நம்பிக்கை வைப்பதில், எந்த மையமும் உங்களிடம் கிடையாது. ஏனெனில், உங்களுடைய விஷயஞானங்கள் அனைத்தையும் அவர் காலடியில் வைத்து, பூர்ண சரணாகதி அடைகிறீர்கள்.

அப்பொழுது மாஷ்டரிடம், "நீங்கள் எது செய்தாலும், அதை நான் ஆராய்ச்சி செய்யமாட்டேன். நான் உங்களுடைய நிழல் மட்டும்தான். என் உடலும், உள்ளமும் உங்களை பரிபூர்ணமாக நம்புகின்றன" என்று மனதார சொல்லி, அமைதி அடைகிறீர்கள்.

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

பிஸ்தானில் இருந்த பயாசித் (BAYAZID OF BISTAN) என்பவர் சுபி ஞானிகளிலேயே, மிகவும் பிரசித்திப் பெற்றவர். ஒருநாள், அந்த நாட்டு அரசன், அவருடைய சீடனாக விரும்பினான். ஒரு அரசன் விரும்பும்பொழுது, அதற்கு முடியாது என்று அந்த ஞானியால் சொல்ல முடியவில்லை. ஒரு சீடனாவதற்கு எந்தத் தகுதியும் அந்த அரசனுக்குக் கிடையாது.

பயாசித், அந்த அரசனிடம், "எவ்வளவோ பேர்கள் இருக்கும்பொழுது, ஏன் என்னை தேர்ந்தெடுத்தாய்? நான் ஒன்றுமே இல்லாதவன். நான் ஒரு மிகக் சாதாரண மாஷ்டர்" என்றார்.

அதற்கு அந்த அரசன், "நீங்கள் ஒரு நல்ல மனிதன். உங்களுடைய தன்மைகள், நடத்தைகள், ஒழுக்கம் எல்லாம் எனக்குப் பிடித்திருக்கின்றன. பிறரைப் பற்றி, அவ்வளவு உறுதியாக என்னால் நம்பமுடியவில்லை. அவர்களைப் பற்றி, எந்த முடிவுக்கும் என்னால் வரமுடியவில்லை" என்றான்.

அதற்கு அந்த ஞானி, "அப்படியாயின் கொஞ்சம் பொறுங்கள். என்னையும் கொஞ்சம் சரியாக கவனியுங்கள். அப்புறம் ஒரு முடிவுக்கு வாருங்கள்" என்றார்.

பிறகு ஒருநாள், அந்த அரசன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அப்பொழுது, பயாசித் ஒரு சிறிய ஏரியின் அக்கரையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். ஆனால், அவர் மாத்திரம் தனியாக இல்லை. ஒரு பெண்ணோடு இருந்தார்! இவ்வளவு சிறந்த ஞானி, இந்த காட்டில் ஒரு பெண்ணோடு தனியாக

இருக்கவேண்டிய காரணம் என்ன? அவருக்கருகில், அவருடைய எந்த சீடனும் கிடையாது. இவர் என்ன செய்துகொண்டு இருக்கிறார் என்று சந்தேகப்பட்டு குழம்பினான். அதுமாத்திரம் அல்ல; தன்னை அரசன் கவனிக்கிறான் என்பதை அறிந்து, அந்த மாஷ்டர் ஒரு மரத்தின் பின்னே மறைவதுபோல் நடந்துகொண்டார். அந்த பெண், ஒரு தம்பளரில் ஏதோ ஒன்றை ஊற்றி அவரிடம் கொடுத்தாள். அநேகமாக அது, பிராந்தியாக இருக்கலாம்.

இப்படிப் பலவாறாக எண்ணி, முடிவில் அந்த அரசன், அவருடைய சீடனாகக்கூடாது என்று தீர்மானித்து விட்டான். பிறகு திரும்பி செல்ல முனையும்பொழுது, பயாசித் அந்த அரசனைக் கூப்பிட்டு, "என் அருகில் வரவும். எதையும் தூரத்தில் இருந்து பார்த்து ஒரு முடிவுக்கு வரவேண்டாம். அது எப்பொழுதும் தவறாகவே இருக்கும்" என்று சப்தம் போட்டுச் சொன்னார்.

எந்தத் தவறான முடிவும், அல்லது தீர்மானமும் தூரத்தில் இருந்து பார்ப்பதால் ஏற்படுவது. நீங்கள் ஒரு நீதிபதியாக இருப்பதற்கு, கொஞ்சமாவது இடைவெளி தேவை. நீங்கள் அந்த இடைவெளியை குறைத்துக் கொண்டே வந்தால், உங்கள் முடிவும் வலுவற்றதாகி விடும். உங்களால் எந்த முடிவுக்கும் வரமுடியாது. ஒரு நிலையில், நீங்கள் அதோடு கலந்தும் விடுவீர்கள்.

இப்பொழுது கதையில், பயாசித் அப்படிக் கூப்பிட்டதும், அந்த அரசனுக்கு தர்ம சங்கடமாகிவிட்டது. அவரை அலட்சியம் செய்து திரும்பிச் செல்லவும் முடிய வில்லை. மேலும், அங்கு என்னதான் நடக்கிறது என்று தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலும் அவனுக்கு ஏற்பட்டது. ஆகவே, அந்த அரசன், அவர் அருகில் வந்தான். அப்பொழுது பயாசித், "அரசனே, நீ சரியான சமயத்தில்தான் வந்தாய். நான் இப்பொழுது உன்னை சீடனாக ஏற்றுக்கொள்ளுகிறேன். என்ன சொல்லுகிறாய்?"

என்றார். அதற்கு அந்த அரசன், சிரித்துக்கொண்டே, “நீங்கள் என்னுடைய வேலையாளாக இருக்கக்கூடத் தகுதி இல்லை. நீங்கள் எப்படி என் மாஷ்டராக இருக்கமுடியும்?” என்றான்.

பயாசித், “அப்பொழுது, நீங்கள் என் சீடனாக இருக்க விரும்பவில்லை. சரி. நீங்கள் அந்த முடிவுக்கு வந்துவிட்டதால், நானும் உங்களுக்கு உண்மையை காண்பிக்க வேண்டும்” என்று சொல்லி, அந்த பெண்ணின் முகச்சீலையை எடுத்துவிட்டார். அது வேறுயாரும் இல்லை. அவருடைய தாயார் தான்! அதுமாத்திரம் அல்ல. அந்த அரசன் பிராந்தி என்று நினைத்தது, வெறும் சாயம் கலந்தத் தண்ணீர்!

அந்த அரசன் உடனே தன் தவற்றை உணர்ந்து, அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான். தன்னை அவருடைய சீடனாக ஏற்றுக்கொள்ளும்படி மன்றாடினான். ஆனால் பயாசித், “நீங்கள் ஒரு நல்ல சந்தர்ப்பத்தை நழுவவிட்டீர்கள். நீங்கள் என்னை ஆராய்ந்ததின் மூலம், உங்கள் நம்பிக்கையை இழந்தீர்கள். இனிமேல் நீங்கள் என் சீடனாவதற்கு, எந்தத் தகுதியும் இல்லை” என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

ஓர் சூழ்நிலையை வேண்டும் என்றே, அந்த ஞானி, அந்த் அரசனுக்காக உண்டாக்கி, “ஆராய்வது, நம்பிக்கைக்கு எதிரானது” என்பதை உணர்த்தினார். நம்பிக்கையின் மூலம்தான், நீங்கள் ஒரு மாஷ்டரை நெருங்கி வரமுடியும். அந்த நெருக்கம் ஒரு காதலர்களுடைய நெருக்கத்தைவிட, மிகவும் நெருக்கமானது. ஆகவேதான், பூர்ண நம்பிக்கைக்குக் கண் இல்லை என்பார்கள். உங்களுடைய வெளிக்கண்கள் மூடினால், உங்களுடைய உள்கண் தானாகவே திறக்கும். அந்த நிலையில், நீங்கள் வெளியிலிருந்து உங்கள் உள்ளே செல்ல ஆரம்பிக்கிறீர்கள். அது ஒரு புதுமையான புனித மான யாத்திரை.

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் அறிவுப்பூர்வமான தீர்ப்பு, உண்மையான நம்பிக்கைக்கு வழிவகுக்காது. அந்த நம்பிக்கை மிகவும் பொய்யானது. அதில், நீங்கள் எழுப்பும் ஆத்மீகக் கட்டிடம் எந்த கணத்திலும் கீழே விழுந்துவிடும். அதுமாத்திரம் அல்ல. உங்களையும் அழித்துவிடும்.

அடுத்ததாக, நீங்கள் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டியது, சிலபேர்கள் எப்பொழுதும் விசாரித்துக் கொண்டே தான் இருப்பார்கள். ஆனால், எதையும் வாங்கிக்கொள்ளும் தன்மையிலேயோ அல்லது எந்த அபாயத்தையும் எதிர்நோக்கும் தைரியத்திலேயோ இருக்க மாட்டார்கள். அவர்களிடம் ஆர்வம் இருக்கும் அளவுக்கு, தைரியம் இருக்காது. அவர்களுடைய ஆர்வம், ஒரு குழந்தையின் ஆர்வத்துக்கு சமம்தான். அதனால் மட்டும், நீங்கள் உண்மையை அடையமுடியாது.

பொதுவாக, சுபி மாஷ்டர்கள் ஒருவனை சீடனாக ஏற்றுக்கொள்ள முடிவு செய்தால், அது அவனுடைய வாங்கும் தன்மையைப் பொருத்தும், தைரியத்தைப் பொருத்தும்தான் இருக்குமே தவிர, வெறும் அவனுடைய ஆர்வத்தை வைத்து மட்டும் அல்ல.

சில நாட்களுக்கு முன், ஒருவன் என்னிடம் வந்து, தான் என்னுடைய சீடனாக விரும்புவதாகச் சொன்னான். நான் அதற்கு அவனிடம், நீ உண்மையிலேயே அதற்குத் தயார்தானா? என்று கேட்டேன். அவன், "ஒரு ஐம்பது ஐம்பது சதவீதம் தயார்தான்" என்றான். நான், "நீ இன்னும் மூன்றுநாள் கழித்து, நன்றாக யோசித்துவிட்டு வா" என்று அனுப்பினேன். ஒரு முடிவு எடுத்தால், அது முழு முடிவாக, நூற்றுக்கு நூறு என்று இருக்கவேண்டும். நான் சந்தேகித்தது போல, அவன் பிறகு வரவே இல்லை! அவனுடைய முற்பிறவியில், எந்த ஆத்மீக விதையும் அவனிடம் விதைக்கப்படவில்லை. விதை விதைத்து பயிரிடாமலேயே,

அறுவடை செய்ய விரும்பும் பிரக்ஞையற்ற கோடானகோடி மக்களில் இவனும் ஒருவன்.

ஒரு மாஷ்டர், யாரையாவது சீடனாக ஏற்க விரும்பினால், அவர், அவன் உள்ளத்தை ஊடுருவிப் பார்க்க வேண்டும். இல்லாவிட்டால், அவர் செய்யும் முயற்சிகள் அத்தனையும் வீணாகிவிடும். ஆனால், அந்த மனிதனுக்கு, தான் ஆத்மீக விழிப்புக்குத் தயாராக இருக்கிறோமா என்று தானே தெரிந்துகொள்ளுவதற்கு வாய்ப்பு இல்லை. அதற்கு ஒரு குரு அவசியம். ஏனெனில், நீங்கள் பல பிறவிகளாக, பல உருவங்களை பலதடவை எடுத்து, அநேக ஆசா பாசங் களுடன் வந்திருக்கிறீர்கள். உங்கள் மன ஆழத்தில் எவ்வளவோ எதிர்ப்பார்ப்புகள், அடக்கிவைக்கப்பட்ட உணர்வுகள் எல்லாம் ஓர் எரிமலை போல கொதித்துக் கொண்டிருப்பதை, ஓர் உண்மையான மாஷ்டரால்தான் ஊடுருவிப் பார்க்கமுடியும்.

ஒருவன், இந்த பிறவியில், விழிப்புணர்வை அடைய முடியுமா என்பதை அவரால் மட்டும்தான் தீர்மானிக்க முடியும். அவனுக்கு மட்டும்தான் சந்நியாசம் வழங்க மனதார ஒப்புக்கொள்ளுவார். அப்படிப்பட்ட மனநிலை இல்லாதவர்களிடம், ஒரு மாஷ்டர் தன் சக்தியை செலவிட்டால், அது அந்த மனிதனுக்கு சிரமத்தைத்தான் கொடுக்கும். ஆகவேதான், அவர் மிகுந்த கருணை கொண்டு, அவன் போக்கில் விட்டுவிடுவார். ஏனெனில், அவன் இன்னும் 'அதற்கு'த் தயாராக இல்லை. வீணாக ஏன் அவனை சிரமப்படுத்த வேண்டும்?

நான் இங்கு நீண்ட நாட்களுக்கு இருக்கமாட்டேன் என்று எனக்கு நன்றாகத் தெரியும். என்னுடைய படகு இப்பொழுதும் தயாராகவே இருக்கிறது. நான் எந்த நிமிடமும் என் யாத்திரையைத்துடங்கத் தயாராகவே இருக்கிறேன். இன்னும் சிறிது காலம் மட்டும்தான் இங்கு இருப்பேன். ஏதோ, என்னால் முடிந்த அளவு உங்களை

முன்னேற்ற என் சக்தியை செலவழிக்க ஆசைப்படுகிறேன். ஆனால், அதற்கு நீங்கள் தயார் நிலையில் இருக்கவேண்டும்.

என்னால், என் மனம் போனபோக்கில், வருபவர்களையெல்லாம், சீடனாக ஏற்றுக்கொள்ள முடியாது. அப்படி எல்லோரையும் சீடனாக ஏற்றுக்கொள்ளுவது போல், நான் சந்நியாசம் வழங்குவதுபோல் உங்களுக்குத் தெரிந்தாலும், நான் உண்மையில் சீடனாக பலபேர்களை அங்கீகரிப்பதே இல்லை. ஆனால் அது அவர்களுக்குத் தெரியாது. அந்த அளவுக்கு பிரக்ஞை அவர்களிடம் கிடையாது.

தகப்பனார் சொத்து, பிள்ளைக்குத் தானே வருவதுபோல, ஒருவன், தன் ஆத்மீக விழிப்புணர்வை, பிறரிடமிருந்து, சுலபமாக அடையவே முடியாது.

அதைப்போல, ஒரு சீடன், தன் மாஷ்டரிடமிருந்து, அவருடைய மேலான ஆத்மீகத்தன்மையை சுலபமாக அடையமுடியாது. அதற்கு நீங்கள் முதலில் உங்களைத் தயார்படுத்திக் கொள்ளவேண்டும். அதற்குத்தான் முதலில், ஒரு மாஷ்டர் ஓர் சீடனுக்கு உதவி செய்யமுடியும். அவனுக்கு ஊக்கமும், தைரியமும் கொடுக்க முயலுவார். அதன்பிறகு நடப்பவைகள், தானே செயல்படுபவை. திரி, நெருப்பை நெருங்க மட்டும்தான். ஓர் மாஷ்டர் உதவி செய்வார். திரியில் நெருப்பு பற்றுவது தானே செயல்படுவது. இதை ஆழ்ந்து புரிந்துகொள்ளுங்கள்.

ஓர் உண்மையான மாஷ்டர், தன் சீடனைப் பக்குவப்படுத்த, அவனே அதைப் பற்றி சுயமாக சிந்திக்க பல புரியாத நிகழ்ச்சிகளை சுற்றிவளைத்து தான் சொல்லுவார். அதுவும் சுபி மாஷ்டர்கள், ஜென் மாஷ்டர்கள் இப்படிச் சொல்லுவதில் திறமைசாலிகள். அவர்கள் பல நிகழ்ச்சிகள் மூலமாக, சில குறிப்புகளைச் சொல்லுவார்கள். அதை நீங்கள் புத்தி கூர்மையுடன் சிந்தித்துப் புரிந்துகொள்ளவேண்டும். ஒரு சீடனுக்கு மதிநுட்பம்

அவசியம். அவனால் மட்டுமே, அந்த மதியைக் கடந்து மேலே செல்லமுடியும்.

உங்களுக்கு எல்லாம் தெரியும் என்ற அகங்காரத்தோடு, ஒரு மாஸ்டரை அணுகி, எந்த போதனையையும் பெறமுடியாது. என்னிடம் எத்தனையோ படித்த அறிவாளிகள், பண்டிதர்கள், மேதைகள் எல்லாம் வந்திருக்கிறார்கள். சுமார் 10 வருடகாலமாக, ஒரு வயதான மனிதன் என்னை சந்தித்துக் கொண்டே இருக்கிறான். சுமார் 23 மாதம் இடைவெளி விட்டு வந்து, என்னிடம் வேதத்தைப் பற்றியும், உபநிஷத்தைப் பற்றியும், யோகா போன்றவற்றைப் பற்றியும், அதில் ஏற்பட்ட அநுபவங்களைப் பற்றியும் பேசி வருவான்.

சரியாகச் சொல்ல வேண்டுமென்றால், அவன் என்னைத் தேடி வரவே வேண்டியதில்லை. ஏனெனில், அவன் சொல்லியதில் 90 சதம், அவனுடைய சொந்த கற்பனைகள், எதிர்ப்பார்ப்புகள் தான். அவன், தான் விழிப்புணர்வு பெற்றதாக எண்ணிக்கொண்டிருக்கிறான். அவன் பல ஆத்மீக நூல்களைப் படித்து, என்னிடம் சொல்லுவதற்காகவே வருகிறான்.

அப்படித் தன்னை, "எல்லாம் தெரிந்தவன்" என்று நான் போற்றவேண்டும் என்று ஆசைப்படுகிறான்! என்ன அறியாமை! இவன் இவைகளையெல்லாம் வெறுமனே படித்துத் தெரிந்து யாருக்கு என்ன லாபம்? இந்த நிலையில், அவன் மேலே செல்ல, என்னுடைய உதவியை நாடுகிறான்! அது எப்படி சாத்தியம்? அவனுடைய கடன் வாங்கிய கருத்துகளே, அவன் தன் உள்ளே செல்ல மறுக்கிறதே? நான் எப்படி அவனுள் நுழையமுடியும்? முதலில், அவன் இதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டும். இந்த விஷய ஞானங்களெல்லாம், வெறும் குப்பை என்று உணரவேண்டும். இப்படித் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளுவதை முதலில் அவன் புரிந்து கொள்ளவேண்டும். "எனக்கு உண்மையான ஆத்மீக

அநுபவம் எதுவும் ஏற்படவில்லை'' என்பதை அவன் மனமாற ஒப்புக் கொள்ளவேண்டும். ஆனால், இப்படிப் பட்டவர்களால், அவ்வளவு லேசில் ஒப்புக்கொள்ள முடியாது! அதுதான் தொல்லை. உங்கள் ''அறியாமையை'' நீங்கள் பூர்ணமாக அறிந்துகொண்டால், உங்களுக்கு ஆத்மீகக் கதவு திறக்கக் காத்திருக்கிறது. அந்த நிலையில்தான், ஓர் மாஷ்டர் உங்களுக்கு உதவமுடியும். இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

எப்பொழுதுமே, சுபி மாஷ்டர்கள் மிகவும் சோதித்துதான், ஒருவனை சீடனாக ஏற்றுக்கொள்ளு வார்கள். இல்லாவிட்டால், தவறான மனிதர்களால் சூழப்பட்டு, தனக்குத் தொல்லையை உண்டு பண்ணிக் கொள்ளுவார்கள். நானும், இப்படிப்பட்டவர்களை, தானாகவே விலகிச் செல்ல ஊக்குவித்து விடுவேன். ஆரம்பத்தில், நான் ஜைன மதத்தவர்களால் சூழப்பட்டு இருந்தேன். ஏனெனில், முக்கியமாக நான் ஒரு ஜைனன். அவர்கள் அனைவரும், நான் ஜைன மதத்தில் பிறந்ததற் காகவே, என்னை சூழ்ந்து கொண்டார்கள். ஆனால் நான் ஜைனன் அல்ல. பிறப்பில் வேண்டுமானால், அந்த மதத்தில் பிறந்தவனாக இருக்கலாம். உள்ளத்தளவில், நான் ஒரு ஜைனனோ, கிருத்துவனோ, ஹிந்துவோ அல்லது முகமதி யனோ அல்ல. ஆனால், நான் எல்லாமாக இருக்கிறேன்! இதை சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள்.

ஜைனர்கள் என்னை முதலில ஆதரித்தது எதற்காகவென்றால், அவர்களுடைய ஜைன மதத்தை நான் வலுவூட்டுவேன் என்ற நம்பிக்கைதான். வேறு எதுவும் இல்லை. அவர்கள் எந்த உண்மையையும் தேடி என்னிடம் வரவில்லை. ஜைன மதம்தான் இந்த உலகத்திலேயே சிறந்த மதம் என்று நான் கூறவேண்டும் என்று ஆசைப்பட்டார் கள். மஹாவீரர் சொன்னது அனைத்தும் உண்மை என்று நான் உறுதி செய்யவேண்டும் என்று எதிர்ப்பார்த்தார்கள்.

இவர்களை எப்படி விரட்டுவது? வேறுவழி இல்லை. பால் உணர்வு பற்றி பேச ஆரம்பித்தேன். அவர்கள் விரைவிலேயே அகன்றுவிட்டார்கள்! ஏனெனில், ஜைன மதத்தின் அடிப்படைக் கருத்து, பிரம்மச்சரியம் தான். நான், "பால் உணர்வு மூலமாக, கடவுள்தன்மையை அடையலாம் என்றும், பால் உணர்வு மூலமாக சமாதி நிலையை அடையலாம்" என்று சொன்னதே போதும்! அவர்கள் ஓடிவிட்டார்கள். பிறகு எஞ்சியவர்கள், ஒரு ஆயிரம் பேர்கள் இருக்கலாம். இவர்களே சுயசிந்தனை யாளர்கள், தைரியமிக்கவர்கள், மற்றும் உண்மையை தேடும் ஆர்வம் உள்ளவர்கள்.

அடுத்து ஒரு பகுதியினர், காந்தியக்கொள்கையைப் பின்பற்றுபவர்கள். காந்தி இறந்தபிறகு, வேறு ஒரு 'மகாத்மாவை' தேடி வந்தவர்கள்! அவர்கள், நான் கதர் உடுத்துவதை விரும்பினார்கள். நானும் அதை விரும்பினேன். அது இந்திய சீதோஸ்ணத்திற்கு சிறந்தது. ஆனால், மேற்கொண்டு அதை உடுத்த விரும்பவில்லை. காரணம், வெறும் கதர் துணியாலேயே, என்னை மகாத்மாவாக்கி விடுவார்களோ என்ற பயம்தான்! ஆகவே, நான் கதர் அணிவதை மட்டும் விடவில்லை, காந்தியைப் பற்றியும் விமர்சித்தேன். பிறகு, அவர்களில் பெரும்பாலோர் அகன்று விட்டனர். இப்படி சுமார் ஆயிரத்தில் ஒருவர்தான் தேறினார்கள். அவர்கள்தான் உண்மையில் 'உண்மையை' தேடுபவர்களாக இருந்தார்கள். அவர்கள் என்னை அறிவு கொண்டு எடைபோட விரும்பவில்லை. என்- உள்ளத்தில் கலக்க விரும்பினார்கள். என்னை முழுமையாக நம்பினார் கள். ஆகவே, ஒரு மாஷ்டர், தன் சீடனைத் தேர்ந்தெடுப் பதில் மிகவும் கவனமாக இருக்கவேண்டும்.

ஒரு மாஷ்டர், ஓர் கூட்டத்தில் பல விஷயங்களைப் பற்றி பேசலாம். ஆனால், அவ்வளவு பேர்களையும் ஆத்மீகத்தில் ஒருக்காலும் உயர்த்தமுடியாது. யார் ஒருவன் இந்த உலகத்தை அனுபவித்து அதன் ஒன்றுமில்லாத

தன்மையை உணர்ந்து சலிப்பு கொள்ளுகிறானோ மற்றும் இந்த உலகம் ஒரு கனவுபோல என்று நினைத்து தற்கொலைச் செய்துக்கொள்ளும் அளவிற்கு செல்லுகிறானோ அவனைத்தான் ஒரு மாஷ்டர் தன் உண்மையான சீடனாக ஏற்றுக்கொள்ளுவார். அவனால்தான் ஆத்மீக மாற்றத்தைத் தைரியமாக எதிர்கொள்ள முடியும். அவனுடைய மனம்தான் ஒரு மாஷ்டரின் முன்பு இறக்கத் துணியும். அப்படி மனம் இறந்தால்தான் அவன் புதிய பிறவியை தன்னிடம் உண்டாக்கிக் கொள்ளமுடியும்.

ஒரு உண்மையான சீடன் தன் மாஷ்டரின் முன்பு இருக்கும்போது அவருடைய பேச்சை மாத்திரம் கேட்காமல் அவரையே முழுமையாக கேட்க விரும்புவான். அதாவது அவரோடு எல்லாவிதத்திலும் இயைந்து செல்ல முனைவான். அப்பொழுது அவருடைய அமைதி கூட, பல செய்திகளை அவனுக்குப் புலப்படுத்தும். அதுமாத்திரம் அல்ல. அவர் எதைச் செய்தாலும், உதாரணமாக, பேசுவது, அமைதியாக இருப்பது, நடப்பது, உட்காருவது போன்ற பல செயல்கள் பல செய்திகளை ஒரு சீடனுக்கு உணர்த்தும். ஆனால் அந்த சீடன் அவைகளை மிகவும் உன்னிப்பாகக் கவனித்துப் புரிந்துகொள்ளவேண்டும்.

ஒரு மாஷ்டரின் முன்னால், சீடன் என்பவன் எதையும் வாங்கும் தன்மையில், பெண்மை குணத்தோடு மென்மையாக இருக்கவேண்டும். ஒரு மாஷ்டரின் முன்னால் ஆணின் ஆதிக்கதன்மை எதுவும் எடுபடாது. ஒருசில நாட்களுக்கு முன்பு ஒரு பெண் சந்நியாசி என்னிடம் "ஏன் அநேக ஆண் சந்நியாசிகள் பெண் இயல்பு உடையவர்களாக மாறிவருகிறார்கள்?" என்று என்னிடம் கேட்டாள். இது ஒரு அருமையான கேள்வி, கேள்வியும் மிகவும் சரியானதுதான். ஏனெனில், நீங்கள் ஒரு மாஷ்டரிடம் இருந்து உங்களுடைய பலத்தை உபயோகித்து எதையும் பெறமுடியாது. அவர் கொடுக்கக்கூடிய நிலையில் நீங்கள் நடந்துகொண்டால், அவர் அன்பு கூர்ந்து

கொடுப்பதை நீங்கள் வாங்கிக்கொள்ளலாம். அதற்கு ஒரு சீடனுக்கு பெண்மையின் இயல்பு அல்லது பெண்மையின் மென்மை மிகவும் அவசியம்.

சென்ற இரவு ஒரு சந்நியாசி என்னிடம் ஓடிவந்து, ''என்னிடம் என்ன நிகழ்கிறது என்றே புரியவில்லை, ஏனெனில் நான் தியானம் செய்யும்பொழுது என்னை ஒரு நாய் போல் உணர்கிறேன். அப்பொழுது என்னை அறியாம லேயே நாய் போல குரைக்கிறேன், அதுமட்டுமல்ல உங்களுடைய காலை கடிப்பதுபோல உணருகிறேன்'' என்றான்.

ஆமாம். ஒரு உண்மையான சீடன் தன் மாஷ்டரை கடித்து மென்று விழுங்கவேண்டும். அவர் அவனுடைய இரத்தமாகவும், சதையாகவும், மஞ்சையாகவும் மாற வேண்டும். இதை நான் அவனிடம் நேரடியான அர்த்தத்தில் சொல்லாமல் ஆத்மீக உணர்வாக விளங்க வைத்தேன்.

ஒரு அமெரிக்க சந்நியாசி (இப்பொழுது இறந்துவிட்டார்) ஒரு அழகான புத்தகத்தை எழுதினார். அவர் பெயர், ரூடி (RUDI). அந்த புத்தகத்தின் தலைப்பு, ''ஆத்மீக நரஅசைவம்'' (SPIRITUAL CANNIBALISM). ஆனால் அந்த புத்தகத்தில் எந்த பெரிய விஷயமும் இல்லை, அந்த தலைப்பை தவிர. ஒரு சீடன் தன் மாஷ்டரை முழுமையாக சுவைத்து ஜீரணிக்கவேண்டும், இதைத்தான் அந்தத் தலைப்பு குறிப்பிடுகிறது. ஆனால், நீங்கள் இதை அகராதிப்படி நேரடியாக அர்த்தம் செய்துகொள்ளாதீர்கள்! இது முழுக்க முழுக்க உள்மாற்றம் சம்மந்தப்பட்டது. இப்படி ஒரு சீடன் முழுமையாக இருந்தால் அவன் அந்த மாஷ்டரால் ஆக்கிரமிக்கப்படுகிறான். அப்பொழுது அவன் அங்கில்லை. அந்த மாஷ்டர்தான் அவனுள் இயங்குகிறார்.

செயின்ட் பால் (SAINT PAUL) ''நான் நானாக இயங்கவில்லை. என்னுள் இருக்கும் ஜீசஸ் தான் என்னை இயங்க வைக்கிறார்'' என்றார். இது மிகவும் சரியான அறிவிப்பே. இது மிகவும் ஆழமான அனுபவத்தால்

வெளியிடப்பட்டது. இந்த அனுபவம் ஏற்பட ஒரு சீடனும் மாஷ்டரும் ஒரே உள்ளத்து அலைவரிசையில் இயங்க வேண்டும். அப்பொழுது அந்த மாஷ்டரும், அந்த சீடனும் மறைந்து விடுகிறார்கள். இது மிகவும் ஆழமான தன்மை யுடையது. மேம்போக்கான, குழந்தைத்தனமான விசாரிப்பி னால், எந்த பலனும் ஏற்படாது. கோடிக்கணக்கான மக்கள் இந்த நிலையில்தான் இருக்கிறார்கள். இதற்குமேல் செல்ல விருப்பம் கொள்ளுவதில்லை. இவர்களை இங்கு அநுமதித்தால், அவர்கள் ஒருக்காலும் மாஷ்டரை நெருங்கி வரமாட்டார்கள்.

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

முல்லா நசுரூதீனின் தகப்பனார், தன் மரணப் படுக்கையில் இருக்கும்பொழுது, தன் ஊதாரி மகனுக்கு, சில அறிவுரைகளைச் சொல்ல விரும்பினார். அவனை தன் அருகில் அழைத்து, "நசுரூதின், எப்பொழுதும் ஒன்றை மட்டும் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள். அழகு என்பது தோல்அளவோடு சரி. அதற்கு முக்யத்வம் எதுவும் கொடுக்காதே. எந்த அழகான பெண்ணைக் கண்டும் பைத்தியமாக அலையாதே. இது என்னுடைய முழு வாழ்க்கையின் அநுபவம். ஏனெனில், என் சிறுவயதில், நானும் உன்னைப்போலத்தான் அலைந்தேன். ஆனால், உண்மையை இப்பொழுதுதான் உணர்ந்தேன். நீயும், நான் செய்த தவற்றைச் செய்யாதே" என்றார்.

அதற்கு, அவரது மகன், "அப்பா, நான் வெறுமனே பெண்ணின் பின்னால்தான் சுற்றுகிறேன். அவர்களை கடித்துத் தின்பதற்காக அல்ல. தோல்அளவு சமாச்சாரம் எனக்குப் போதுமானது. அதற்குமேல், ஒரு பெண்ணிடம் என்னதான் இருக்கிறது?" என்றான்.

இதைப்போல, நீங்கள் ஒரு மாஷ்டரோடு, தோல் அளவு ஆழத்தோடு மட்டும் நெருங்கினால், நீங்கள் அவரோடு ஒருக்காலும் கலக்கமுடியாது. இயைந்து செல்ல முடியாது. ஒரு மாஷ்டரோடு, நீங்கள், "நர மாமிசம்"

உண்ணுபவராக மாறவேண்டும். அவரை முழுமையாக உங்களோடு ஐக்கியப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இது எப்பொழுது ஏற்படும் என்றால், நீங்கள் உங்களை முழுமையாக இழக்கவேண்டும். உங்களிடத்தில், ஒரு சூன்யத்தை (VACCUM) ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அப்பொழுது அந்த சூன்யம், அந்த மாஷ்டரை, தன்பால் இழுத்துக்கொள்ளும். இது ஒரு முழுமையான ஆத்மீக மாற்றம். அதாவது ஓர் உயிர், இன்னொரு உயிரோடு இரண்டறக் கலத்தல் ஆகும். இந்த மாற்றத்தில் எந்த விஷயஞானமும் அடங்காது. ஒரு எரியும் விளக்கு, எரியாமல் தயாராக இருக்கும் விளக்குக்கு அருகில் சென்றால், அது எப்படி உடனே பற்றிக்கொள்ளுமோ, அதைப்போல, ஓர் மாஷ்டரின் விழிப்புணர்வுப் பெற்ற உயிர்த்தன்மை, ஓர் சீடனின் உயிர்த்தன்மையோடு இரண்டறக் கலக்கும். இது ஒரு அரிய ஆத்மீகத் தாவல்.

இதனால், ஒரு மாஷ்டர் எதையும் இழப்பது இல்லை. ஆனால், சீடன் எல்லாவற்றையும், அவரது கருணையினால் அடைகிறான். ஒரு எரியும் விளக்கு, ஒரு எரியாத விளக்கை ஏற்றும்பொழுது, அது எதையும் இழப்பதில்லை. இதைப்போல, அந்த விழிப்புணர்வு பெற்ற ஒரு விளக்கு, பல ஆயிரக்கணக்கான விளக்குகளை ஒளிவிடச் செய்யமுடியும். அதனால், அந்த ஒரு விளக்கு எதையும் இழக்கப்போவது இல்லை. ஒரு மாஷ்டர்தான் அந்த விழிப்புணர்வு பெற்ற முழுமையான ஆத்மீக ஒளிவிளக்கு. அவரிடம் தைரியமாக நெருங்கி வாருங்கள். அவரை அறிவுகொண்டு எடை போடவேண்டாம். அது ஒருக்காலும் உங்கள் இருவருடையே எந்த நெருக்கத்தையும் உண்டாக்காது. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இப்பொழுது கதையில்,

"ஒரு சுபிக்களின் ஆத்மீகக் கூட்டத்தில் கலந்துகொள்ள, மூன்று மனிதர்கள் வந்தார்கள். அந்த மாஷ்டரின் போதனையைக் கேட்க ஆவல் கொண்டார்கள்.

ஆனால், உள்ளே நுழைந்த உடனேயே, ஒருவன் வெளியேறி விட்டான். அவனுக்கு அந்த மாஷ்டரின் கிறுக்குத்தனமான நடவடிக்கை பிடிக்காமல், கோபம் கொண்டு வெளியேறிவிட்டான்''.

பெரும்பாலான மாஷ்டர்களை புரிந்துகொள்ளுவது கஷ்டம். அவர்களுடைய உருவத்தைப் பார்த்து எந்த முடிவுக்கும் வரவேண்டாம்.

யாராவது, சீடனாவதற்கு தன்னை நெருங்கி வந்தால், குருட்ஜீவி (GURDJIEFF) மிகவும் கிறுக்குத்தன மாகவும், முரட்டுத்தனமாகவும் நடந்துகொள்ளுவார் என்று சொல்லுவார்கள். அவர் செய்வதைப் பார்த்து பலபேர்கள் வெளியே ஓடிவிடுவார்கள். கிட்டத்தட்ட பைத்தியம் பிடித்தவர் போல் நடந்துகொள்ளுவார்.

ஒருசமயம், அவரைப் பேட்டிக்காண, ஒரு பத்திரிகை நிருபர் வந்தார். குருட்ஜீவி, சுற்றி முற்றிலும் பார்த்தார். அங்கு ஒரு பழைய சீடன் நின்றிருந்தான். அவனிடம், குருட்ஜீவி, ''இன்றைக்கு என்ன நாள்?'' என்று கேட்டார். அந்த சீடன், ''இன்று சனிக்கிழமை'' என்றான். அதற்கு அந்த மாஷ்டர், ''அது எப்படி இன்று சனிக்கிழமையாகும்? நேற்றுதானே வெள்ளிக்கிழமை?'' என்றார். இது ஒரு பைத்தியம் பேசுவது போல் இல்லையா?

இதைக் கேட்டதும், அந்த நிருபர், எழுந்து நின்று, ''நான் பைத்தியத்தைத் தேடி இங்கு வரவில்லை. இங்கு என்ன நடக்கிறது என்றே புரியவில்லை'' என்றார். இதைக் கேட்டதும், குருட்ஜீவி, அவனை மிகவும் கோபத்துடன் பார்த்தார். அந்தப் பார்வையின் ஆழத்தைப் பொறுக்க முடியாமல், அந்த நிருபருக்கு வியர்த்துக் கொட்டியது. அவன் உண்மையிலேயே பயந்துவிட்டான். மேலும், குருட்ஜீவி, மிகவும் பலசாலி. அந்த நிருபர், விட்டால் போதும் என்று மெல்ல நழுவி வெளியேறிவிட்டான். அவன் ஒருக்காலும் திரும்பி வரவேமாட்டான்! இதை நினைத்து, குருட்ஜீவி, வயிறு வெடிக்கச் சிரித்தார்.

அப்பொழுது, சில சீடர்கள் அவரிடம், ஏன் இப்படி அவனிடம் நடந்துகொண்டீர்கள் என்று கேட்டார் கள். மேலும், அந்த நிருபர் மிகவும் சிறந்த எழுத்தாளர். நம்மைப் பற்றி மிகவும் நன்றாகவே எழுதுவார். ஏன் இப்படி விரட்டிவிட்டீர்கள் என்று கேட்டார்கள்.

அதற்கு குருட்ஜீவி, "பிடிக்காத விஷயங்களை ஆரம்பத்திலேயே முடித்துவிடவேண்டும். இப்பொழுது இவனை அநுமதித்தால், இவன் திரும்பத் திரும்ப வந்து கொண்டே இருப்பான். இவன் மிகவும் மேலோட்டமான எண்ணங்களை உடையவன். இவனால் எதையும் ஆழமாகப் புரிந்துகொள்ள முடியாது'' என்றார்.

"மாஷ்டரின் கட்டளைப்படி, அவரது சீடன் இரண்டாவது மனிதனிடம், தன் மாஷ்டர் ஒரு போலி என்று சொன்னான்.''

இதனால், இந்த இரண்டாவது ஆளும் சென்று விட்டான். அவன் அதைப் பற்றி கொஞ்சமும் சிந்திக்கவில்லை. சொன்னதே போதும் என்று கிளம்பி விட்டான். இவனும் ஆழமாகச் சிந்திக்க விரும்பவில்லை. ஆத்மீகத்தில், ஒருவன் எதையும் ஆழமாகச் சிந்திக்க வேண்டும். இவர்களால் மட்டுமே, ஒரு மாஷ்டரை எளிதில் அணுகமுடியும். ஏனெனில், ஓர் உண்மையான மாஷ்டர் ஒரு புரியாத புதிராகவே இருப்பார்.

பொதுவாக, யாராவது, எதைப் பற்றியாவது தவறாகச் சொன்னால், அதை உடனே நம்பும் மனிதர்கள் தான், இந்த உலகத்தில் அதிகம்.

அதைப்போல, யாராவது உண்மையைப் பற்றிச் சொன்னால், அதைப் பொதுவாக எல்லோருமே அலட்சியம் செய்வார்கள். சைத்தானைப் பற்றியும், பிசாசு களைப் பற்றியும் சொன்னால், எல்லோரும் ஆர்வமுடன் கேட்பார்கள். ஆனால், கடவுளைப் பற்றிச் சொன்னால், யாருமே ஆர்வமாகக் கேட்பது இல்லை.

யாராவது, உங்களிடம் வந்து, "இந்த மனிதர் ஞானம் அடைந்துவிட்டார்" என்று சொன்னால், அதைக் கேட்டு சிரிப்பீர்கள். இது வெறும் கட்டுக்கதை என்று நம்பமாட்டீர்கள். அது அவ்வளவு சுலபமான வேலை இல்லை என்று உங்கள் மனம் நம்ப மறுக்கும். ஏனெனில், அதற்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது.

நீட்சே (NIETZSCHE) எங்கேயோ ஓரிடத்தில், "எனக்கு கடவுள் என்பதில் நம்பிக்கை இல்லை. அப்படி ஒருவர் கடவுளாக இருந்தால், அந்தத் தன்மையை அடைய, எனக்கு ஏது சந்தர்ப்பம்? அப்படி ஒன்று இருந்திருந்தால், அதை நான் அடையவேண்டும்?" என்று கேட்டிருக்கிறார்.

ஆகவே, மக்களில் பெரும்பாலோர், தவறான கருத்துகளை நம்புவதிலேயே ஆர்வம் காட்டுகின்றனர். சரியான கருத்துகளை எளிதில் எடுத்துக்கொள்ளமாட்டார்கள். உங்கள் சந்தேகத்தை வெளியே காட்டிக்கொள்ளா விட்டாலும், அது உங்கள் ஆழ்மனத்தில் இருந்துகொண்டே இருக்கும். ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. அதாவது, "உண்மையாக இருப்பது அவ்வளவு எளிதல்ல" ஆகவே, புத்தரே நேரில் உங்களிடம் வந்து, "நான் ஞானம் அடைந்துவிட்டேன்" என்று சொன்னாலும்கூட, நீங்கள் சுலபத்தில் நம்பமாட்டீர்கள்!

நான் கடவுளை நம்பாதவர்களைப் பார்த்திருக் கிறேன். ஆனால், சைத்தானை நம்பாதவர்களைப் பார்த்ததே இல்லை! என்ன விசித்திரம்! இப்படிப்பட்டவர்களால், ஆத்மீகத்தில் முன்னேறவே முடியாது. முதலில், தவறாகப் புரிந்துகொள்ளுதலை விட்டு ஒழியுங்கள். அப்பொழுது தான், நீங்கள் ஆத்மீகப் பாதையில், முதல் அடியை எடுத்துவைக்கிறீர்கள் என்று அர்த்தம். நீங்கள் சாதாரண மக்களைப் போல தவறான நம்பிக்கையில் இருந்தால், உங்களால் எப்படி ஒரு உண்மையான மாஷ்டரைப் புரிந்து கொள்ளமுடியும்?

ஆயிரக்கணக்கான மக்கள் என்னிடம் நெருங்கி வரவேமாட்டார்கள். ஏனெனில், சாதாரண ஆட்டோ ஓட்டுபவன், ரிக்ஷா தொழிலாளி, பான் விற்பவன், ரயில்வேயில் கூலி சுமப்பவன், "அந்த ஆள் சுத்தமோசம். அங்கு ஏதோ தகாத செயலெல்லாம் நடக்கிறது. நம்பாதீர்கள்" என்று சொன்னால், நீங்கள் அவைகளை எவ்வளவு எளிதில் நம்பிவிடுகிறீர்கள்? ஆனால், அவர்களெல்லாம் என்னுடைய கட்டளைப்படித்தான் நடப்பவர்கள்! நான் தான் அப்படிச் சொல்லும்படி அவர்கள் மனதில் புகுந்து கட்டளையிட்டேன்! ஏனெனில், இப்படி எதையும் மேலோட்டமாக நம்புவர்கள், என்னை ஒருக்காலும் நெருங்க முடியாது. ஆகவே, அவர்களை அப்படியே திருப்பி அனுப்புகிறேன்!

கதையில், "மூன்றாவது மனிதனை பேசும்படி அநுமதித்தேன். ஆனால், அவனுக்கு, நீண்டகாலமாக எந்த போதனையையும் அளிக்கவில்லை. ஆகவே, அவன் ஆர்வம் இழந்து, தானாகவேச் சென்றுவிட்டான்".

உங்களுக்கு எந்த மாதிரியான போதனை, எப்பொழுது கொடுக்கவேண்டும் என்று ஓர் மாஷ்டருக்குத் தான் தெரியும். சீடன் என்பவன், மாஷ்டரை முழுவதுமாக நம்பி, பொறுமையுடன் காத்திருக்கவேண்டும்.

வந்த மூன்று மனிதர்களில், முதல் மனிதன் சாதாரண வகையைச் சார்ந்தவன். அவனுக்கும், மிகச் சாதாரண மக்களுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. ஆகவேதான், அந்த மாஷ்டர், அவனை உடனே வெளியேற்றி விட்டார். இரண்டாவது மனிதனிடம் ஓரளவுக்கு ஆர்வம் இருந்தது. அதற்கு அந்த மாஷ்டர், ஒரு சந்தர்ப்பம் கொடுத்துப் பார்த்தார். ஆனால், அவன் அதைத் தவற விட்டுவிட்டான். மூன்றாவது மனிதனிடம், மேற் சொல்லிய இருவரைக் காட்டிலும், ஆத்மீகத்தன்மை கொஞ்சம் அதிகமாவே இருந்தது. அவனை சிறிது காலம் இருக்கும்படி அநுமதித்தார். ஆனால், அவனுக்கு எந்த

போதனையும் அளிக்கவில்லை. அதாவது வார்த்தைகளால் எதுவும் சொல்லவில்லை. ஆனால், பல அறிவுரைகளை, தன் மூலம் வெளிப்படுத்திக் கொண்டே தான் இருந்தார்.

நான் சிலபேர்களிடம் பேசிக் கொண்டிருந்தால், அது உங்களிடமும் பேசுவதாகத்தான் அர்த்தம். என்னைப் பொருத்தவரை, இது சரியான அணுகுமுறை என்றே கருதுகிறேன். ஏனெனில், உங்களிடம் நேரடியாகப் பேசினால், நீங்கள் அதைத் தவறவிட பல சந்தர்ப்பங்கள் உண்டு. உங்களுடைய அகங்காரம் அதை நேரடியாக உங்கள் உள்ளே அநுமதிக்காது. அது மேலே வந்து, ஒரு சுவர் போல், நான் சொல்லுவதைத் தடுத்து நிறுத்த முயலும். ஆனால், வேறு ஒருவரிடம் பேசும்பொழுது, நீங்கள் அருகில் அமர்ந்து, அவைகளை உன்னிப்பாகக் கவனித்தால், அது உங்கள் உள்ளத்தில் சுற்றி வளைத்து சென்றுவிடும். உங்கள் அகங்காரம் அதை ஒன்றும் செய்ய முடியாது. அதைப்போல, நான் உங்களிடம் நேரடியாகப் பேசினால், அது உங்களைவிட, உங்கள் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவரிடம் தான் வேகமாக நெருங்கும். ஆனால், அதை அவர் உன்னிப்பாகக் கவனிக்கவேண்டும். உண்மையில், நான் உங்களிடம்தான் பேசுகிறேன்! இதை ஒரு மாஷ்டர்தான் தீர்மானிக்கவேண்டும். ஆகவேதான், நான் தனிப்பட்ட உரையாடலைத் தவிர்க்கிறேன். ஏனெனில், அவைகள் உங்களை எளிதில் அடையாது.

நீங்கள் தனிப்பட்டு, என்னோடு இருந்தால், உங்கள் நரம்பு மண்டலம் அமைதியாக இருப்பதில்லை. ஏனெனில், உங்களுடைய பிரச்சினைகள் மேலே வந்துவிடுகிறது. அதுமட்டுமல்ல, உங்களுடைய 'எல்லாம் தெரியும்' என்ற அகங்காரமும் மேலே வந்துவிடுகிறது. அப்பொழுது உங்களிடம் ஒரு 'பற்றின்மை' (DETACHED) ஏற்பட வழியில்லை. நீங்கள் உங்கள் கருத்துகளோடு என்னை நேரடியாக அணுக முடியாது. என் அறிவுரை, உங்கள்

உள்ளே செல்லாது. வேறு யாருக்கோ சொல்லும் பொழுது, உங்கள் மனம் ஓரளவு பற்றற்று இருக்கிறது. அப்பொழுது உங்களது கருத்துக் குவியலில், சிறிது இடைவெளி ஏற்படுகிறது. அதன் மூலம், நான் உங்கள் உள்ளே செல்ல முடியும். ஆகவேதான், நான் குறைந்தது 10, 12 பேர்களை யாவது வைத்துப் பேசுகிறேன். நான் A என்பவனிடம் பேசினால், அது C என்பவனிடம் சுலபமாக அணுகும். இது ஒரு கலை தான். இது, நீங்கள் அறியாமலேயே உங்கள் உள்ளத்தை அடையும். தேவை, நீங்கள் மிகவும் ஓய்வாக கொஞ்சம் பற்றற்று இருக்க வேண்டும். ஆனால், உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். அவ்வளவுதான்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? வேறு யாருக்காவது ஒரு பிரச்சினை ஏற்பட்டால், நீங்கள் எவ்வளவு புத்தி சாலித்தனமாக அவர்களுக்குப் புத்திசொல்லுகிறீர்கள்? எவ்வளவு அற்புதமான யோசனைகளைக் கூறுகிறீர்கள்? ஆனால், அதே பிரச்சினை உங்களுக்கு ஏற்பட்டால், எப்படி தடுமாறுகிறீர்கள்? நன்றாக யோசனைப் பண்ணிப் பார்க்கவும். ஏனெனில், நீங்கள் உங்கள் பிரச்சினையோடு சம்மந்தப்பட்டிருக்கிறீர்கள். அதனால் உங்கள் மனம் தெளிவாக இல்லை. ஆனால், பிறருடைய பிரச்சினையில், நீங்கள் பற்றற்று இருக்கிறீர்கள். அதனால், உங்கள் மனம் தெளிவாக இருக்கிறது. உங்கள் யோசனைகளும் தெளிவாக இருக்கின்றன. இதைத் தெளிவாகப் புரிந்து கொண்டால், நான் பிறருக்குக் கொடுக்கும் அறிவுரைகள், உங்களை எப்படித் தெளிவாக அடையும் என்பதையும் புரிந்து கொள்ளுவீர்கள்.

கதையில் மூன்றாவது மனிதனை அந்த சுபி மாஸ்டர், அனுமதித்தாலும் அவனுக்கென்று தனியாக எந்த போதனையையும் கொடுக்கவில்லை. ஆகவே, அவன்

ஆர்வம் இழந்து விட்டான். ஆனால், அந்த மாஸ்டர் அவனிடம் இன்னும் கொஞ்சம் பொறுமையை எதிர்பார்த்தார். அவன் இன்னும் கொஞ்சம் அமைதியில் இருக்க வேண்டும் என்று எண்ணினார். ஆனால் அவன் அதைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.

ஒரு மாஸ்டர் எப்பொழுதும் ஆழமாகவும் தன்னடக்கமாகவும் பிறருக்கு புரியாதவாறே மென்மையாக செயல்படுவார். சிலசமயம் அவர்கள் எந்த செய்தியையும் அறிவிக்க மாட்டார்கள். ஆனால் அதுவே ஒரு அறிவிப்பு தான். இதை ஒரு சீடன் தன் புத்தி கூர்மையோடு விளங்கிக் கொள்ளவேண்டும், துரதிர்ஷ்டவசமாக இந்த மனிதனுக்கு அதைப் புரிந்து கொள்ளுவதற்கு சக்தி இல்லை. ஆகவே அவன் பொறுமையிழந்து அங்கிருந்து சென்றுவிட்டான். அவனிடம் ஆர்வம் இருந்த அளவுக்கு, தாகம் அல்லது தீவிரம் இல்லை. ஒன்றை அடைவதற்கு, வெறும் ஆர்வம் மட்டும் போதாது.

நீங்கள் என்னை அறிவுப்பூர்வமான ஆர்வத் தோடயோ அல்லது சிறிது ஆத்மீக ஆர்வத்தினாலேயோ என்னை அணுகினால், சிறிது காலத்தில் என்னைவிட்டு நீங்களே விலகிவிடுவீர்கள். ஏனெனில் வெறும் ஆர்வம் நீண்டநாள் நீடிக்காது. ஆனால், நீங்கள் என்னை முழுவதும் அறியவேண்டும் என்ற தீராத தாகத்தோடு அல்லது பசியோடு அணுகி காத்திருந்தால் உங்களுடைய பசியோ அல்லது தாகமோ அதிகரிக்குமே தவிர, வெறும் ஆர்வம் போல் குறையாது.

ஆரம்பத்தில் இந்த தாகமும் பசியும் மென்மையாகத் தான் இருக்கும். போகப் போகத்தான் அது அதிகரிக்கும். அந்த தாகம் முழுமையை அடையும் வரை, ஒரு மாஸ்டர் காத்திருப்பார். அந்த முழுமையான நிலையில்தான் அவருடைய போதனை அவனுள்ளே எளிதாகச் செல்லும். உதாரணமாக ஒருவன் மிகுந்த தாகத்தோடு இருந்தால் அவன் எதைவேண்டுமானாலும் குடிக்கத் தயாராகி

விடுவான். அது விஷமானாலும் கவலைப் படமாட்டான். அப்படி ஒரு ஆத்மீக தாகத்தைத்தான் ஒரு சீடனிடம் ஒரு உண்மையான மாஸ்டர் எதிர்பார்க்கிறார். இப்படிப்பட்டவர்களிடமே ஒரு மாஸ்டர் நேரடியாகவே தன் போதனையை செய்வார். இல்லாவிட்டால் மேற்சொல்லியபடிதான் பிறருக்கு சொல்லுவதுபோல் தன் போதனைய்யை சுற்றிவளைத்து சொல்லுவார்.

இதைப் போலத்தான் பயாசித் (BAYAZID) அவர்களும், சுமார் பன்னிரெண்டு வருட காலம் காத்திருந்து அந்த முழுமையான தாகத்தை அடைந்தார். அதன் பிறகுதான் அவருடைய மாஸ்டர் அவருக்கு போதனையை செய்தார். அப்பொழுது ஒரு நாள், அந்த மாஸ்டர் பயாசித் அவர்களிடம், "அந்த கூடத்தில் இருக்கும் ஒரு புத்தகத்தை எடுத்துவா" என்றரர். அப்பொழுது பயாசித், "மாஸ்டர் அவர்களே, நான் அங்கு இதுவரை எந்த புத்தகத்தையும் பார்த்ததில்லை, ஏன் அந்த கூடத்தையே கூட சரியாகக் கவனித்ததில்லை. நான் உங்களைத் தவிர வேறு எதையுமே முழுமையாக கவனித்ததில்லை. ஆனால் நீங்கள் சொல்லுவதால் நான் இபபொழுது செல்லுகிறேன்" என்றார். அதற்கு அந்த மாஸ்டர் "அது தேவையில்லை, ஏனென்றால் நீ என்னைத்தவிர வேறு எதனிடமாவது ஆர்வம் கொண்டிருக்கிறாயா என்று சோதிக்கவே, அப்படிக் கூறினேன்" என்றார். இப்படிப்பட்ட முழுமையான தாகத்தைத்தான், பசியைத்தான் ஒரு மாஸ்டர் தன் சீடனிடம் எதிர்பார்க்கிறார்.

பிறகு, அந்த மாஸ்டர் பயாசித்திடம், "இன்று இரவு நீ என்னுடன் உறங்கு" என்று கட்டளையிட்டார். அப்படியே அவரும், இந்த மாஸ்டரின் பக்கத்தில் படுத்தார். ஆனால் தூங்க முடியவில்லை. அது அவருக்கு மிகவும் ஒரு புதுமையான இரவு. அவரால் எதையும் நினைக்க முடியவில்லை. எந்த கனவையும் காண முடியவில்லை. அவர் மனம் முழுமையாக நின்றுவிட்டது. அப்பொழுது

தான் அந்த அற்புதம் நேர்ந்தது. அதாவது மாஸ்டரிட மிருந்து, அவருடைய பூர்ண விழிப்புணர்வு, அந்த சீடனிடம் தாவியது!

அடுத்த நாள் காலை, அவர் பழைய பயாசித்தாக இல்லை. அவர் இறந்துவிட்டார். இப்பொழுது இருக்கும் பயாசித் ஒரு மறுபிறவி எடுத்தவர். புதிதாகப் பிறந்தவர். அவருக்கு சுமார் 12 வருடகாலமாக, எந்த போதனையையும் அளிக்கவில்லை. ஆனால், அதுதான் போதனையாகி விட்டது! அவருடைய பொறுமையின் எல்லைதான், அவருக்கு அளித்த போதனை. பயாசித் பொறுமை இழந்து, ஒரு நாள் முன்பு சென்றிருந்தால், அவர் ஞானம் அடைந்திருக்க முடியாது. இதுவரை சுமார் 12 வருடகாலம் இருந்தது வீணாகி இருக்கும். ஆனால், சாதாரணமாக ஒருவரால் இவ்வளவு காலம் பொறுமையாக இருக்க முடியாது. அதற்கு அசாத்திய பொறுமையும், ஊக்கமும், சலிப்பற்ற தன்மையும் தேவை. ஆனால் ஒருவன் சுமார் 12 வருடத்திலேயாவது விழிப்புணர்வைப் பெற்றால், அதைப் பெற்றபிறகு ஏற்படும் பேரானந்த நிலையை அனுபவிக்கும் போது அதற்கு விலையாக 12 ஆயிரம் வருடம்கூட கொடுக்கலாம் எனத் தோன்றும்.

இப்பொழுது கதையில்,

"இப்படி மூன்று பேரும் சென்றபிறகு அந்த மாஸ்டர் சீடர்களிடம் கீழ்கண்டவாறு சொன்னார், அதாவது பார்வையால் மாத்திரம் ஒருவனின் உட்கருத்தை எடைப் போடக் கூடாது என்பதற்கு முதல் மனிதன் எடுத்துக் காட்டாக இருந்தான்."

ஒருவனுடைய உருவத் தோற்றத்தை வைத்து அவனுடைய உண்மை நிலையை புரிந்துகொள்ள முடியாது. அவனுடைய உண்மையான குணம் மிக ஆழத்தில் அவனுள்ளே மறைந்திருக்கும். அவனுடைய வெளி நடத்தை கள் என்பது கடலில் ஏற்படும் அலைகளுக்கு ஒப்பானது. கடலின் அலையை வைத்து அதன் ஆழத்தை நம்மால்

எடைப் போட முடியாது. அதற்கு நாம் அதன் உள்ளே தைரியமாகச் செல்ல வேண்டும். இப்படியாக அந்த முதல் மனிதன் மாஸ்டரின் ஒழுங்கற்ற நடவடிக்கையால் அவரை அடைய தவறவிட்டு விட்டான். ஏனெனில் பொதுவாக கண்களால் பார்ப்பதும் பொய், காதால் கேட்பதும் பொய் என்ற பழமொழிக்கு இணங்க, ஒருவனது உள்ளத்தை கண்களினாலேயோ அல்லது காதுகளினாலேயோ எடை போட முடியாது. எல்லாப் புலன்களும் மிகவும் மேலோட்டமாக இயங்கக் கூடியவை. ஆகவே, யாரையும் வெறும் உருவத்தைப் பார்த்து, ஒரு முடிவிற்கு வராதீர்கள்.

சாதாரணமாக, உயிர்த்தன்மை எவ்வளவு ஆழமாக இயங்குகிறதோ அதைப் போலவே ஒரு உண்மையான மாஸ்டர், மிக ஆழத்தில் இயங்குகிறார்.

நீங்கள் உங்கள் வாழ்க்கையில் முற்பிறவிகளில் புத்தர்களின் அருகில் வந்திருக்கிறீர்கள். ஆனால் அவர்களை உங்களால் அடையாளம் காண முடியவில்லை. அது உங்கள் பார்வையின் குற்றம். புத்தர், ஞானநிலை அடைந்த பிறகு சுமார் 40 வருட காலம் உயிரோட இருந்தார். அவருக்கு முன்பும் பல புத்தர்கள் இருந்திருக்கிறார்கள். அவருக்கு பின்பும் பல பேர்கள் இந்த உலகத்தில் தோன்றியிருக்கிறார்கள். அதைப் போல ஜீசஸ் இஸ்ரேலில் நடமாடிய பொழுது நீங்களும் அங்கே இருந்திருப்பீர்கள். மகாவீரரும், கிருஷ்ணாவும், இந்த உலகத்தில் வாழ்ந்த பொழுது உங்களில் பலர் அப்பொழுது இருந்திருப்பீர்கள். ஆனால் அவர்களைப் புரிந்தவர்கள் ஒரு சிலர் மட்டுமே.

இப்பொழுது நீங்கள் என் முன்னே அமர்ந்திருக்கிறீர்கள். நீங்கள் என்னை அறிவுப் பூர்வமாக எடை போட்டால், நீங்கள் என்னை கண்டிப்பாகத் தவற விடுவீர்கள். ஏனெனில் உங்கள் அறிவைக் கொண்டு என் உள்ளே உங்களால் நுழைய முடியாது.

"கேட்பதன் மூலம் எதற்கும் முக்கியத்துவம் கொடுக்கவேண்டாம்" என்பதற்கு இரண்டாவது மனிதன் சீடன் சொன்னதைக் கேட்டு, (இந்த மாஷ்டர் போலி ஆனவர் என்று) அதை அப்படியே நம்பி அங்கிருந்து அகன்றுவிட்டான்.

மக்கள் ஆயிரம் செய்திகளை வெளியிட்டுக் கொண்டே இருப்பார்கள். அவைகளை எல்லாம் ஒருவன் நம்பிக்கொண்டு இருந்தால் அவனால் எதையும் அடைய முடியாது. ஆகவே, உங்கள் காதுகளையும் நம்பாதீர்கள். ஒரு உண்மையான மாஷ்டரை இதயப் பூர்வமாகத் தான் அணுகமுடியும். இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

"ஒருவன் பேசுவதை வைத்தோ அல்லது சும்மா வெறுமனே இருத்தலைக் கொண்டோ எந்த முடிவுக்கும் வரவேண்டாம் என்பதற்க்கு மூன்றாவது மனிதன் விளக்கமாக இருந்தான்"

ஒன்றை நீங்கள் எப்பொழுதும் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். அதாவது உண்மையை வார்த்தை யால் வெளியிடமுடியாது. வெளியிட்டவை அனைத்தும் உண்மையாகாது. இதுவரையிலும் யாரும் உண்மையை வார்த்தைகளால் எச்சில் படுத்தவில்லை. ஆகவே ஒருவன் பேசுவதைக் கொண்டோ அல்லது பேசாமல் இருப்பதை வைத்தோ எந்த முடிவிற்கும் வரவேண்டாம்.

இந்த மூன்றாவது மனிதன் அந்த மாஷ்டரின் அறிவுரைக்காகக் காத்திருந்தான். அவர் "இதைச் செய், அதைச் செய்யாதே" என்று கட்டளையிடுவார் என்று நம்பிக்கொண்டு காத்திருந்தான். ஆகவே அவனும் அவரை தவறவிட்டுவிட்டான். அவன் அந்த மாஷ்டரை முழுமையாக ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. அவருடைய புரியாத உயிர்மையத் தன்மையை அறிந்துகொள்ள ஆர்வமில்லை. ஒரு மாஷ்டர் தன்னுடைய செய்தியை பல ஆயிரக் கணக்கான வழிகளில் வெளிப்படுத்திக் கொண்டே

இருக்கிறார் என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன. ஆனால், அந்த மூன்றாவது மனிதன் அவைகளை கவனிக்காமல் அந்த மாஷ்டர் தன்னிடம் மட்டும் கவனம்

செலுத்தவேண்டும் என்று ஆசைப்பட்டான். சாதாரணமாக ஒரு மாஷ்டர் தனிப்பட்ட முறையில் ஒருவனிடம் தன் கவனத்தை வைக்கமாட்டார். அப்படி செய்தால் அவனுடைய அகங்காரம்தான் வலுவடையும். அது அவனுடைய தனிப்பட்ட ஆத்மீக முன்னேற்றத்திற்கு தடையாகவே இருக்கும். ஒரு சீடன் எப்பொழுது தன் மாஷ்டரின் கவனத்தைக் கவர ஆசைப்படவில்லையோ, அந்த கணத்தில் மட்டும் ஒரு மாஷ்டர் அவனிடம் தன் கவனத்தை வைப்பார். இதை ஆழ்ந்து சிந்தித்து புரிந்துகொள்ளுங்கள்.

உங்களிடம் பலபேர்கள் ஒருசில காரணங்களுக்காக கவனத்தை வைத்தால், உங்களுடைய அகங்காரம்தான் திருப்தி அடையுமே தவிர, நீங்கள் அடையப்போவது வேறு எதுவும் இல்லை. அதைப்போல, உங்களை யாரும் கவனிக்காவிட்டால் நீங்கள் இறந்ததுபோல் உணருவீர்கள். நம்மால் இந்த உலகத்துக்கு எந்த பிரயோஜனமும் இல்லை என்று மிகவும் வருத்தப்படுவீர்கள்.

சாதாரணமாக ஒருவன் ஒரு மாஷ்டரை அணுகும்போது, அவர் தன்மேல் தனிப்பட்ட முறையில் கவனம் வைக்கவேண்டும் என்றே ஆசைப்படுவான். இது இயற்கைதான். ஆனால், அந்த மாஷ்டர் உங்களை பொறுமையாக காக்க வைப்பதிலேயே குறியாக இருப்பார். நீங்கள் எப்பொழுது அந்த மாஷ்டரின் கவனத்திற்காக ஏங்கவில்லையோ அப்பொழுதுதான் அந்த மாஷ்டர் தன் கவனத்தை உங்கள்மேல் திருப்புவார். ஏனெனில் அப்பொழுது உங்களுடைய அகங்காரம் முற்றிலும் மறைந்து இருக்கும். பிறர் கவனித்தல் என்பது உங்கள் அகங்காரத் திற்குத் தீனி (உணவு) போன்றது. அந்த அகங்காரம்

இல்லாதபோது பிறருடைய கவனம் என்பது உங்களுடைய உயிர்த்தன்மைக்கு ஆகாரம் போன்றது. இந்த வித்யாசத்தை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இப்பொழுது கதையில்,

"இதை ஏன் நீங்கள் அவர்களிடமே சொல்லியிருக்கக் கூடாது'' என்று ஒரு சீடன் கேட்டபொழுது, அந்த மாஷ்டர், "நான் உங்களுக்கு மேலான வழியைக் காண்பிக்கவே உட்கார்ந்திருக்கிறேன். ஆனால், "எனக்கு எல்லாம் தெரியும்'' என்ற எண்ணத்தோடு, ஒருவன் என்னை அணுகினால், அவன் மூடிய நிலையில் இருக்கிறான். அவன் தன் தாயின் அரவணைப்பில் இருக்கிறான். அவனிடம் எந்த போதனையும் எடுபடாது'' என்றார்.

வாழ்வின் மேன்மையான நிலையை விளக்குவதற்காகவே, ஒரு மாஷ்டர் இந்த உலகத்தில் உயிரோடு இருக்கிறார். அவரை ஒருவன் திறந்தமனத்துடன் வெகுளியாக எதையும் வாங்கும் தன்மையுடன் பொறுமையாக அணுகவேண்டும். எல்லாம் தெரியும் என்ற எண்ணத்தோடு அவசரமுடன் அணுகினால், அவனால் எதையுமே அடையமுடியாது.

முதல் மனிதன் அந்த மாஷ்டரின் ஒழுங்கற்ற தன்மையைக் கண்டு ஓடிவிட்டான். இதைப்போலத் தான் குருட்சீப்பை (GURDJIEFF) சந்தித்த அந்த நிருபரும் அவரை, பைத்தியம் என எண்ணினான். ஏனெனில் அவர், "நேற்று வெள்ளிக்கிழமையாக இருக்கும்பொழுது இன்று எப்படி சனிக்கிழமையாக இருக்க முடியும்'' என்று கேட்டார். இது சாதாரணமாக ஒரு பைத்தியகாரன் கேட்கும் கேள்விதான். ஆனால், இது அந்த நிருபரை திசைத் திருப்ப குருட்சீப் செய்த தந்திரமான செயல்தான். ஏனெனில், அவருடைய கவனத்தை தன்னிடம் திருப்ப, குருட்ஜூப் விரும்பவில்லை. ஏனெனில், அந்த நிருபர், ஒரு முடிவோடு அவரை அணுகினார். நீங்கள் ஒரு முடிவோடு அணுகினால், உங்கள்

மனம் மூடியநிலையில்தான் இருக்கும். அப்பொழுது அவரிடம் ஒரு மாஷ்டர் என்ன அறிவுரை கூறினாலும் அது எடுபடாது. ஆகவேதான், தன்னை ஒரு பைத்தியக்காரனாக, அவர் அந்த நிருபரிடம் காட்டிக்கொண்டார்.

ஆகவே, ஒரு சீடன் எந்த ஒரு முடிவோடும் ஓர் மாஷ்டரை அணுகக்கூடாது. அந்த முடிவே, அவனைச் சுற்றி எழுப்பும் மதிலாகி விடுகிறது. ஒரு மாஷ்டரை நெருங்கும்பொழுது, உங்களுடைய சகல விஷயஞானங்களையும், முடிவுகளையும் விட்டுவிடுங்கள்.

அடுத்ததாக, இரண்டாவது மனிதனைப்போல, யார் எதைச் சொன்னாலும் நம்பிவிடாதீர்கள். அதனால், நீங்கள் அவர்களுடைய கைபொம்மையாகி விடுகிறீர்கள். உங்கள் சுயசிந்தனையை இழந்து விடுகிறீர்கள். உங்களுடைய உணர்வுகள் மழுங்கிவிடுகின்றன. இதன்மூலம், நீங்கள் புத்தராவதற்கான, பல சந்தர்ப்பங்களை இழந்து விடுகிறீர்கள்.

அடுத்ததாக, மூன்றாவது மனிதன்போல் பொறுமையற்று இருக்காதீர்கள். அத்துடன் மாஷ்டர் தன் கவனத்தை, தன்மேல் மட்டும் வைக்கவேண்டும் என்றும் ஆசைப்படாதீர்கள். வெறுமையாக, பொறுமையாக, வெகுளியாக காத்திருங்கள், காத்திருங்கள். கடவுள்தன்மை எப்பொழுதுமே மெதுவாகத்தான் வேலை செய்யும். உங்களுடைய அவசர மனம் அதற்கு ஒத்துவராது. பிறருடைய கருத்தைக்கொண்டு (தாயின் அரவணைப்பு) வாழ முற்படாதீர்கள். அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை. எதையும் சுயமாக, தைரியமாக சிந்திக்கப் பழகிக்கொள்ளுங்கள். அந்தத் தாயின் அரவணைப்புக்கு அப்பால் செல்லுங்கள்.

## 4. சிப்ளி இல்லாதபொழுது
### (WHEN SHIBLI IS ABSENT)

"ஜீனாயிடு (JUNAID) என்ற ஒரு சிறந்த ஞானியை, சிப்ளி (SHIBLI) என்ற ஞானி தேடிச் சென்றபொழுது, ஜீனாயிடுடைய மனைவி, முஸ்லீம் வழக்கப்படி, தன்னை ஒரு படுதாவின் பின்னே மறைத்துக் கொள்ள முயன்றாள். அப்பொழுது ஜீனாயிடு தன் மனைவியைப் பார்த்து, "நீ எப்படியிருந்தாயோ, அப்படியே இரு. சிப்ளி இப்பொழுது இல்லை" என்றார்.

இதைக் கேட்டதும், சிப்ளி மிகவும் துக்கம் அடைந்து அழ ஆரம்பித்துவிட்டார். பிறகு ஜீனாயிடு, தன் மனைவியிடம், "இப்பொழுது சிப்ளி மறுபடியும் வந்து விட்டார். ஆகவே, உன்னை நீ மறைத்துக்கொள்" என்றார்.

எப்பொழுது 'அது' எங்கேயும் நிறைந் திருக்கும்பொழுது, எங்கே அது எல்லாவற்றிலும் உள்ளும், புறமுமாக இருந்ததோ, இருக்கிறதோ, இருக்குமோ, அதை ஏன் மனிதன் தவற விட்டுக்கொண்டே இருக்கிறான்? அதை அவன் மிகச் சுலபமாக அல்லவோ அடைந்திருக்க வேண்டும்? அதை ஏன், அவனால் பார்க்கமுடியவில்லை? ஏதோ ஒன்று அவனுக்கும், அதற்கும் இடையில் ஒரு திரைபோல் இருக்கிறது. அது வேறு ஒன்றும் இல்லை. உங்கள் உள்ளே பல அடசல்கள்தான். அவைகள் உங்கள் கண்களை மறைக்கின்றன. அந்த அடைசல்கள் வேறு எதுவும் இல்லை. அவைகள் உங்களது 'நான்' என்ற அகங்காரம் தான்.

சில நாட்களுக்கு முன், ஒருவன் என்னைப் பார்க்க வந்தான். அவன், "நான் மிகவும் எளிமையானவன். உங்கள் கால் தூசுக்கு சமம். சுமார் 20 வருடகாலம், அந்த உயர்ந்த பிரக்ஞை நிலையை, தன் விழிப்பு நிலையை அடைய முயற்சி செய்து வருகிறேன். ஆனால், அது இன்னும்

கைகூடவில்லை. நான் எப்பொழுது அடைவேன்?'' என்று ஒவ்வொரு வாக்கியத்திலும், 'நான்', 'நான்' என்று அவன் சொல்லத் தவறியதே இல்லை! இலக்கணம் அனுமதித்தால், இந்த, 'நான்' என்ற வார்த்தை, ஒரு வாக்கியத்திற்கு முன்னே வருவதற்குப் பதிலாக, பின்னே வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

நீங்கள், உங்களையே உள்ளே நிரப்பி வைத்திருக்கிறீர்கள். கடவுள் வந்து தங்குவதற்கு அங்கு ஏது இடம்? ஆயிரக்கணக்கான 'நானுடன்' வசித்து வருகிறீர்களோ? உங்களுக்குப் புரிகிறதா? ஆகவேதான் 'அது' அங்கு இங்கு என்று எண்ணாதபடி, நீக்கமற நிறைந்து இருந்தாலும், அதை உங்களால் அடையாளம் காண முடியவில்லை. இந்த ஆத்மீகக் கணக்கை ஆழ்ந்து புரிந்துகொள்ளுங்கள்.

நீங்களே உங்கள் உள்ளே இருந்தால், நீங்கள் 'அந்தக் கடவுளைக் கண்டிப்பாகத் தவறவிட்டுக் கொண்டேதான் இருப்பீர்கள். நீங்கள் அங்கு இல்லாதபொழுது, அவர் அங்கு இருப்பதை உணருவீர்கள். இது ஒரு மிகச் சிறிய கணக்குத்தான். சுலபமாகப் புரிந்துகொள்ளலாம். ஆனால், நடைமுறைப்படுத்துவது அவ்வளவு எளிதல்ல.

ஆகவே, கடவுளை அடையவேண்டும் என்று தேடுபவர்கள், தாங்கள் எப்படி மறைந்துகொள்ளுவது என்பதை முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். அதற்குத் தான் தியானம் தேவைப்படுகிறது. உங்கள் உள்ளே நீங்கள் இருக்கலாம். ஆனால், அதில் 'நான்' என்ற தன்மை இருக்கக் கூடாது. அது உங்கள் அகங்காரத்தின், மறுவார்த்தை. நான் அகங்காரம் என்று கூறுவது, உங்களது பக்தி, பணிவு, கடவுள் எண்ணம் எல்லாவற்றையும்தான். உங்களுடைய மையம் எதுவும் உங்கள் உள்ளே இருக்கக்கூடாது. அது ஒரு வெறும் வெற்றிடமாக, எண்ணங்களற்ற ஆலயமாக, ஏன் அங்கு கடவுளை வணங்குபவன் என்பவன் கூட இல்லாத

நிலையில்தான், திடீரென்று கடவுள் அங்கு வந்து அமர்வார். ஆனால், கடவுள் எங்கிருந்தோ வரவில்லை. அவரும் உங்களுடனேயேதான் இருக்கிறார். ஆனால், அவர் உங்கள் எண்ணங்களினால் மறைக்கப்பட்டிருக்கிறார். அவர் உள்ளே வந்து அமர்வதற்கு, உங்கள் எண்ணங்கள்தான் தடைகளாக குறுக்கே நிற்கின்றன. இதை ஆழ்ந்து புரிந்துகொள்ளுங்கள்.

உங்களுடைய நான் என்ற சுய பிரக்ஞைநிலையே, அவருக்குத் தடையாக இருக்கிறது. உங்களை நீங்கள் மறப்பதுதான், அவருக்குத் திறந்துவிடும் வாயில். உங்களை நீங்கள் மறப்பது என்பது, சுயநலமற்ற பிரக்ஞைநிலை (UNSELF-CONSCIOUSNESS) என்பதாகும். இதைப் புரிந்துகொள்ளுங்கள்.

இந்த சுயநலமற்ற பிரக்ஞைநிலை அல்லது விழிப்புநிலை என்பது மிகவும் மேலான, உன்னதமான உங்கள் உள்ளத்து அரியநிலை. அங்கு வெறும் உணர்வு மட்டும்தான் இருக்கும். வேறுயாரும் இருக்கமாட்டார்கள். உங்களுடைய 'நான்' எப்பொழுதோ மறைந்துவிட்டிருக்கும், அல்லது உங்கள் உள்ளேயே கரைந்து சென்றிருக்கும். அப்பொழுது "நீங்கள் இருக்கிறீர்கள், ஆனால் நீங்களாக இல்லை."

இந்த மேற்கண்ட அறிவிப்பு, முன்னுக்குப் பின் முரணாகத்தான் தோன்றும். வித்தியாசமாகத்தான் தெரியும். ஆனால், அதுதான் உண்மை. ஏனெனில், இயற்கையே அப்படித்தான் செயல்படுகிறது 'நீங்கள்' என்பது ஒரு தனிப்பட்ட பொருள் அல்ல. அது உயிர்த்தன்மையின் கூட்டுக்கலவை. அது ஒரு முழுமை. அதந் முழுமையில்தான், அது முழுமையாகச் செயல்படும். ஒரு இயந்திரத்தின் பாகத்தைக் கழட்டுவதுபோல், அதை அக்குவேறு, ஆணிவேறாகக் கழட்ட முடியாது. அப்படிச் செய்தால், அந்த உயிர்த்தன்மை, தானாகவே மறைந்துவிடும்.

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

ஹுசைன் (HUSSAIN) என்ற சுபி ஞானி, ஓர் நாள் ஒரு கனவு கண்டார். அவர் பலகாலமாகக் கடவுளைத் தேடிக் கொண்டே இருகிறார். அன்றைய கனவில், கடவுள் தன் முன்னே, ஒரு வெங்காயத்தைக் கையில் வைத்துக்கொண்டு நின்றிருந்தார். ஹுசைனுக்கு ஆச்சரியம். எதற்காகக் கடவுள் கையில் வெங்காயத்தை வைத்துக்கொண்டு இருக்கிறார்? அப்பொழுது கடவுள், அவனிடம், "இதோ என்கையில் ஒரு வெங்காயம் இருக்கிறது. அதை நீ முழுவதுமாகப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அதில் ஒரு பகுதியைப் பெற்றுக் கொள்ளலாம். நீ எதை விரும்புகிறாய்?" என்று கேட்டார்.

ஹுசைன், உடனே தியானத்தில் ஆழ்ந்தார். அவரால் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை. ஏனெனில், அவருடைய நான் என்ற அகங்காரம், அதை முழுமையாகப் பெற விரும்பாது. அப்படிச் செய்தால், அது மறைய வேண்டியிருக்கும். பொதுவாக உங்கள் அகங்காரம், மிகவும் பேராசை உடையது. அந்த பேராசையில், பிறகு தனக்கு என்ன நேரிடும் என்று புரியாமலே, அதைப் பெற ஆசைப்படலாம். என்ன செய்யலாம்?

முடிவில், அவர் தன் கண்களைத் திறந்து, கடவுளிடம், "என்னால் ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை. ஏனென்றால், நான் ஒரு பகுதியை மட்டும் விரும்பினால், அது என்னிடம் தொல்லைதைத்தான் உண்டுபண்ணும். அது எப்பொழுதும் என்னை இறப்பு என்ற பயத்தில் ஆழ்த்தியவாறே இருக்கும். ஏனெனில், ஒரு பகுதி என்பது எப்பொழுதும் இறக்கக்கூடியது. அந்த இறப்பு என்னையும் தொற்றிக்கொண்டு, எனக்குத் துன்பத்தைத்தான் கொடுக்கும். அந்த பகுதி என்பது எல்லை கட்டியது. எல்லை கட்டிய எந்தப் பொருளும், முழுமையான இன்பத்தைக் கொடுக்காது. ஏனெனில், ஒவ்வொரு எல்லை கட்டிய

பொருளுக்கும், ஓரளவு தகுதிதான் இருக்கும். அப்படித்தான் இந்த உலகப்பொருள்கள் அனைத்தும் இருக்கின்றன'' என்றார்.

பிறகு, கடவுள் சிரித்தவாறே, "சரி, அப்படி என்றால், முழுமையாகவே வாங்கிக்கொள்'' என்றார். அதற்கு ஹுசைன், "அதுவும் என்னால் முடியாது. ஏனெனில், முழுமை என்பதே பல பகுதிகள் அடங்கியதுதான். பகுதிகளற்ற முழுமை உயிர்த் தன்மையுடையதாகாது'' என்றார். இதைக் கேட்டதும் கடவுள் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, அவரை, ஆசீர்வதித்து, "நீ சொல்லியவைகள் அனைத்தும் சரியே. நீ, பகுதியை மட்டும் தேர்ந்து எடுத்தால், அதனால் உன்னுள் போராட்டம்தான் ஏற்படும். நீ எப்பொழுதும் துன்பத்தில்தான் இருப்பாய். ஏனெனில், பகுதி என்பதே உயிரற்றதுதான். அதைப்போல, முழுமையாக ஏற்றுக் கொண்டாலும், அது பல உயிரற்ற பகுதிகளைக் கொண்டதுதான். அங்கு எந்த உயிர்த்துடிப்பும் இருக்காது. உயிர்த்தன்மை இயங்குவதற்கு, ஓர் ஈர்ப்பு நிலை இருக்கவேண்டும். மின்சாரத்தில் எப்படி இரண்டு மாறுபட்ட தன்மை இருக்கிறதோ, அதைப் போல. அப்பொழுது அங்கு ஒரு இறுக்கம் ஏற்படுகிறது. இந்த இறுக்கநிலைதான், இந்த உலகம் உயிர் வாழ்வதற்கு ஆதாரமாக உள்ளது. அதைப்போல, ஒரு முழுமை என்பது பல இறந்த பகுதிகளைக் கொண்டிருந்தாலும், அந்த பல பகுதிகளுக்கும், அந்த முழுமைக்கும், ஓர் ஈர்ப்பு சக்தி ஏற்பட்டு, ஒரு இறுக்கநிலை உண்டாகிறது. இந்த இரு மாறுபட்ட நிலையில்தான், ஆறுபோல், வாழ்வு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. சதா மாறிக்கொண்டிருக்கிறது. ஆகவே, பகுதியாகப் பிரித்துப் பார்க்கும்பொழுது, அது இறந்ததாகி விடுகிறது. அந்த இறந்த பகுதிகளே, சேர்ந்து இருக்கும்பொழுது, முழுமையாகிறது. அப்பொழுது அதில்

ஒரு உயிரோட்டம் ஏற்படுகிறது. இதை மீண்டும் படித்துப் புரிந்துகொள்ளுங்கள்.

இந்தப் பகுதிகளுக்கும், அந்த முழுமைக்கும் இடையில்தான், கடவுள் இருக்கிறார். இந்த இருவேறுபட்ட நிலையில், அந்த "ஒருமை" தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறது. அது ஒரு மிகவும் மென்மையான இறுக்க நிலை. இந்த இரண்டு மாறுபட்ட நிலை என்பது ஒரு ஆற்றின் இரு கரைகளைப்போல. இந்த இரு கரைகளுக்கு இடையில்தான், உயிர்த்தன்மை அல்லது கடவுள்தன்மை என்ற ஆறு ஓடிக்கொண்டிருக்கிறது. ஆனால், அது எந்தக் கரையையும் சார்ந்த அல்ல. அதேசமயம், அது இரண்டிற்கும் உரியதுதான். இந்த மாறுபட்ட, வித்தியாசமான கருத்தை ஆழ்ந்து சிந்தித்துப் புரிந்து கொள்ளுங்கள்.

ஆகவே, பகுதி என்பது எப்பொழுதும் விலகிக் கொண்டும், சேர்ந்துகொண்டும், ஓர் இயக்கத்தை உண்டு பண்ணுகிறது. அது, அந்த முழுமையிலிருந்து விலகிச் சென்றாலும், அதன் ஆதாரம், அந்த முழுமையில்தான் இருக்கிறது. ஒரு செடி ஆகாயத்தை நோக்கிச் சென்றாலும், அதன் ஆதாரம் (வேர்), பூமியில்தான் இருக்கிறது. அது இப்பொழுது ஆகாயத்திலும் இருக்கிறது, பூமியிலும் இருக்கிறது. இந்த மாறுபட்ட நிலையில்தான், அதன் உயிரோட்டம் நிகழுகிறது.

பகுதி என்பது தொடர்ந்து, அந்த முழுமையை திருமணம் செய்துகொண்டும், விவாகரத்து செய்து கொண்டும் இருக்கிறது! அந்த இறுக்கநிலைதான், அதன் அழகே! அது அந்த முழுமையை ஒருசமயம் காதலிக்கிறது. மறுசமயம் அதைவிட்டு விலகி ஓடுகிறது. இந்த நிலையில் நிகழும் அந்த 'ஒருமை' (கடவுள்தன்மை), அந்த இருமை நிலைக்கு மாறுபட்டது அல்ல. எதிர்ப்புடன் கூடியது அல்ல. உண்மையில், அந்த ஒருமையே, அந்த இருமையால்

உண்டாக்கப்பட்டது. அந்த ஒருமை என்ற குழந்தைக்கு, அந்த இருமைதான் தாயும், தகப்பனும்.

'கடவுள்' என்பது ஓர் உயிரற்ற பொருள் அல்ல. கடவுள் என்பது முழுமையானால், அது உயிரற்றதாகிவிடும். அதில் எந்த இயக்கமும் இருக்காது. ஆகவேதான், "ஹெக்லீயனின் பூர்ணதத்துவம்" (HEGELIAN ABSOLUTE CONCEPT), இறந்த கொள்கையாகி விட்டது. அது ஆன்மீக தத்துவவாதிகளுக்கு வேண்டுமானால், உபயோகப்படலாம். ஆனால், ஆன்மீகத்தன்மையை அடைய வேண்டுபவர்களுக்கு (SEEKERS), அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை.

ஒரு அபூர்வமான அறிவிப்பை, சோரன் கிர்க்கார்டு (SOREN KIERKEGAARD) என்ற டேனிஷ் (DANISH) தத்துவவாதி வெளியிட்டு இருக்கிறார். அதாவது, "என் அன்புள்ள கடவுளே, நான் உங்களிடம் பிரார்த்தனைப் பண்ணுகிறேன். ஆனால், தத்துவவாதிகளின் கடவுளிடம் நான் பிரார்த்தனை செய்யத் தயாராக இல்லை. நான், ஆப்ரஹாம், ஜாகோப் மற்றும் ஜீசஸ் வணங்கிய கடவுளிடமே பிரார்த்தனை செய்கிறேன். தத்துவவாதிகளின் கடவுள் எப்பொழுதே இறந்துவிட்டார்."

அன்புள்ளம் கொண்டவர்கள் மற்றும் கவிஞர்களது கடவுள்கள், மிகவும் வித்யாசமானது, அவைகள் மிகவும் உயிரோட்டமுள்ளவை. அவைகளில் பல வேற்றுமைகள் இருந்தாலும், அவைகளில் பொதுவான லயம் (Hormony) ஒன்று இருக்கும். அது, இறுக்கத்தில் ஒய்வுள்ளதுபோல அமையும். அது, பல உருவங்களில் உருவமற்றதாகவும், பல பெயர்களில், பெயரற்றதாகவும், விளங்குகிறது.

இந்துக்களிடையே ,விஷ்ணு சகஸ்ரநாமம் என்ற அழகிய பழமையான மதநூல் ஒன்று உண்டு. அதில் கடவுளை ஒராயிரம் பெயரில் அழைக்கப்பட்டிருக்கிறது. அதேசமயம் கடவுளுக்கு பெயரில்லை என்று அவர்களே

தொடர்ந்தும் சொல்லி வருகிறார்கள். அதாவது, அவர் ஓராயிரம் பெயர்களில் பெயரற்றும் இருக்கிறார்!

என்னைப் பொறுத்தவரையில் கடவுளுக்கு எந்த பெயரும் கிடையாது. ஆனால் இந்த உலகத்திலுள்ள எல்லா பெயர்களும் அவரையே சாரும். அதில் உங்கள் பெயரும் அடக்கம்தான். அது மாத்திரம் இல்லை. அதில் பாவிகளின் பெயர்களும் ஞானிகளின் பெயர்களும் அடக்கம். ஒன்றை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். பாவிகள் இல்லாமல் ஞானிகள் இல்லை. பாவிகளுக்கும் ஞானிகளுக்கும் இடையில் ஒரு இறுக்கமான நிலையில் ஒரு லயம் உண்டாகிறது. இந்த உலகத்தில் ஞானிகள் மாத்திரம் இருந்தால் அது எவ்வளவு அலுப்பு தரக்கூடியதாக இருக்கும் என்று கற்பனை பண்ணிப் பாருங்கள்! அதைப்போல இந்த உலகம் பாவிகளால் மட்டும் நிரப்பப்பட்டு இருந்தால் அது எவ்வளவு கொடூரமாக இருக்கும்? ஆகவே, இந்த இருவரும் கலந்து ஒரு உயிர்த்தன்மையை இந்த உலகத்தில் நிகழவிடுகிறார்கள்.

இதைப்போன்று இந்த உலகத்தில் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஒரு மாறுபட்டதன்மை அவசியமாகிறது. இந்த மாறுபட்ட தன்மைகள் ஒரு சமயம் ஒன்றை ஒன்று நெருங்கிவரும். அடுத்த சமயம் விலகிச் செல்லும். இதில்தான் ஆடல், பாடல், கூடல், ஊடல், காவியம், ஓவியம் போன்ற பல கலைகள் பல நிகழ்ச்சிகள் இந்த உலகத்தில் பிறக்கின்றன. இவைகளை நீங்கள் ஆழ்ந்து புரிந்துகொண்டால் ஹுசைனின் (HUSSAN) கனவு எவ்வளவு அர்த்தமுடையது என்பது விளங்கும்.

கடவுள், ஹூசைனிடம், "நீ செய்தது சரியான காரியம். நீ ஏதாவது ஒன்றை தேர்ந்து எடுத்திருந்தால், மற்றொன்றை இழக்கவேண்டி வரும். நான் இப்பொழுது உனக்கு இரண்டையும் அளிக்கிறேன். அதாவது முழுமையில், பாகங்களையும் சேர்த்தேக் கொடுக்கிறேன்.

அதைப்போல அந்த பாகங்களில், முழுமையையும் கொடுக்கிறேன். இரண்டும் மாறுபட்டு இயங்கினாலும், அதில் ஒரு உயிர்த்துடிப்புள்ள லயம் ஏற்படும்'' என்றார்.

ஆனால், மக்களில் பெரும்பாலோர் பாகங்களை மட்டும் உடையவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு முழுமையில் நம்பிக்கை இல்லை. ஆகவேதான், மக்களில் பெரும்பாலோர் சுயநலமுள்ளவர்களாகவே இருக்கிறார்கள். தங்களை எப்பொழுதும் ஞாபகப்படுத்தியவாறே இருக்கிறார்கள். தங்களை மறந்திருக்க வழி தெரியவில்லை. உங்களை நீங்கள் மறந்த நிலையில்தான், அந்தத் தெய்வீக இசையைக் கேட்கமுடியும். அதன் ஆனந்தத்தை அநுபவிக்க முடியும். ஆகவே, உங்களுடைய இயல்பை திருத்திக் கொள்ளுங்கள். உங்களிடம் எல்லாமே இருக்கின்றன. ஆனால், அதை முறையாக, புரிந்து உபயோகிக்கத் தெரியவில்லை.

என்னுடைய ஆயிரக்கணக்கான பிறவிகளில், நான் யாரையும் தகுதியற்றவனாகப் பார்த்ததே இல்லை. எல்லோரிடமும் எல்லா தகுதிகளும் இருக்கின்றன. ஆனால், அதை உபயோகிப்பதில்தான் எத்தனை வேறுபாடுகள்? மேலும், அவைகளை, முறைப்படுத்துவதிலும் பல குழப்பங்கள்.

ஆனால், இதன் தீர்வு, உங்களிடமே உள்ளது. அது என்னவென்றால், நீங்கள் உங்களால் எவ்வளவு முடியுமோ, அவ்வளவு நேரம், உங்களையே மறந்திருங்கள். அதாவது எண்ணங்களற்று இருங்கள். நீங்கள் உங்கள் ஆழத்தில், அதாவது உங்களது பாகங்களும், முழுமையும் எதிரும் புதிருமாக மிக மென்மையாக செயல்படுவதை ஆழ்ந்து கவனியுங்கள். இப்படி ஒரு நிகழ்ச்சி உங்கள் உள்ளே நடைபெறும் என்று நீங்கள் நினைத்தேப் பார்த்திருக்க மாட்டீர்கள். ஆனால், அதுதான் உங்கள் உயிர் ஓட்டத்திற்கேக் காரணம். ஆனால் அந்த பாகங்களோடு உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். அப்படி அவைகளில் உங்களை சம்மந்தப்படுத்திக் கொண்டால்,

அது உங்கள் அகங்காரத்திற்குத்தான் வழிவகுக்கும். இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

உங்களுடைய உயிர்த்தன்மை எல்லையில்லாதது. ஆனால், அது உங்கள் உடலில் எல்லைக்கட்டிக் கொண்டு இயங்குகிறது. அந்த உயிர்த்தன்மையை, இந்தப் பேரியக்க பிரபஞ்ச உயிர்த்தன்மையோடு கலக்கவேண்டும். அதற்குக் குறுக்கே நிற்பது உங்களது எண்ணமாகிய மனம்தான். ஆகவே, நீங்கள் இப்பொழுது எவ்வளவுக்கெவ்வளவு, 'நான்' என்ற உணர்வோடு இருக்கிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு, அந்த உணர்வை மறந்து இருப்பீர்கள். இதுதான் அதை அடையக்கூடிய ஓர் ரகசியக் குறிப்பு.

ஒரு குழந்தை எப்படி ஒரு குறுகிய வழியாக இந்த உலகத்திற்கு வருகிறதோ, அதைப் போல, அதன் எண்ணங்களும் குறுகியதாகவே ஆரம்பத்தில் இருக்கும். எதைக் கண்டாலும், தன்னுடையதாக்கிக் கொள்ளும் மனமும் (POSSESSIVENESS), எதற்கெடுத்தாலும், சண்டை போடுவதும், எரிச்சல் அடைவதும், வெறுப்பு கொள்ளுவதும், மிகவும் சகஜம். இது காலம் முழுவதும் தொடர்கிறது. ஆனால் வேறு வேறு ரூபத்தில் இயங்குகிறது. இது, அது இறந்தபிறகும் தொடர்கிறது. இதனால், அதனுடைய அடுத்த பிறவியும், அந்த குறுகலாக ஓட்டையிலேயே நிகழுகிறது.

ஒருசமயம், நான் ஒரு மாட்டுவண்டியில், ஒரு உள் அடங்கிய கிராமத்திற்குச் செல்ல நேர்ந்தது. அப்பொழுது ஓர் ஆற்றைக் கடக்க, ஒரு குறுகலான வழியின் மூலமாகச் செல்லவேண்டும். ஆனால், அந்த வண்டி ஓட்டும் கிராமத்தான் அந்த குறுகலான வழியில் செல்ல மறுத்துவிட்டான். ஏனெனில், அந்த குறுகலான பாதையை இங்கிருந்து பார்க்கும்பொழுது, அதன் தொலைதூரம், மிக, மிக குறுகலாகவேத் தெரிந்தது. அங்கு எப்படி தன் மாட்டுவண்டி நுழையும் என்று கேட்டான்.

அவனை எவ்வளவோ சமாதானப்படுத்தினேன். ஆனால், முடியவில்லை. அதைப்போல, நீங்கள் ஆரம்பத்தில் மிகவும் குறுகலான வழியில் உண்டாகுகிறீர்கள். பிறகு அங்கிருந்து தொலைவில் உள்ள இறப்பைக் காணும்பொழுது, அது இன்னும் குறுகலாகத் தெரிகிறது. அதைக்கண்டு இப்பொழுதே பயந்து வாழுகிறீர்கள். அதனால், உங்கள் வாழ்க்கையின் முழுமையை இழந்துவிடுகிறீர்கள். நீங்கள் மேலும், மேலும் குறுகியத்தன்மையில் செயல்படுகிறீர்கள். இந்த விரிந்து பரந்த பிரபஞ்ச உயிர்த்தன்மையோடு கலக்க மிகவும் பயப்படுகிறீர்கள். இந்த உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளையும் பிடித்துக்கொள்ள ஆசைப்படு கிறீர்கள். அதுவே உங்களது குறுகிய மனப்பான்மைக்கும், 'தான்' என்ற அகங்காரத்திற்கும் வழிவகுத்து விடுகிறது. கடைசியில், உங்களிடம், எஞ்சி இருப்பது, இந்தக் குறுகிய எண்ணக்குவியலால் உண்டாகிய வெறும் அகங்காரம் மட்டும்தான். இது பல பிறவிகளாக உங்களைத் துரத்திக்கொண்டுதான் வரும். ஆகவே, எதன் மேலும் பற்றுவைக்காதீர்கள். எதையும் 'என்னுடையது' என்று எண்ணாதீர்கள். இந்தக் கோடிக்கணக்கான அழியும் பொருள்களில், உங்கள் உடலும் ஒன்றுதான். இதை மறந்துவிடாதீர்கள்.

இதையும் நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். அதாவது, நீங்கள் பாகங்களோடு சம்மந்தப்படுத்தாமல் இருந்தாலும், பிறகு மெல்ல, மெல்ல, அந்த முழுமையோடு சம்மந்தப்படுத்திக் கொண்டுவிடுவீர்கள். அதாவது பாகங்கள் என்பது ஒரு முனை என்றால், முழுமை என்பது அடுத்த முனை. ஒன்று, இந்த முனையைத் தேர்ந்து எடுப்பீர்கள், அல்லது அடுத்த முனையைத் தேர்ந்து எடுத்துவிடுவீர்கள். இந்த முழுமையான அடுத்த முனையைத்தான், இந்திய சந்நியாசிகள் தேர்ந்து எடுக்கிறார்கள். ஒன்றை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். நீங்கள் இந்த பாகங்களை ஒதுக்கினால், அந்த முழுமையும் அழிந்துவிடும். இதுமிகவும்

நுண்மையான கருத்து. இந்த நுண்ணிய, மிக ஆழமான தன்மையில்தான், வாழ்க்கை புரிந்துகொள்ள முடியாதவாறு செயல்படுகிறது. ஆகவே, நீங்கள் பாகங்களை அழிக்கக் கூடாது, அதே சமயம் அத்துடன் பற்றும் வைக்கக்கூடாது. இதுதான் ரகசியம். அவைகள் இருக்கட்டும். ஆனால், அதனோடு சம்மந்தப்படாமல், சாட்சியாக இருந்து வாழுங்கள். இது புரியாத காரணத்தால், பெரும்பாலான சந்நியாசிகள், துறவிகள், மிகவும் அலுப்பான, இறப்புக்குச் சமமான வாழ்க்கையை வாழுகிறார்கள். அவர்களது வாழ்க்கையில் எந்த உயிரோட்டமும் கிடையாது. ஏனெனில், உயிரோட்டம் என்பது பாகங்களுக்கும், முழுமைக்கும் இடையில் மிக மென்மையாக செயல்படுவது. இந்த சந்நியாசிகளின் வாழ்வில், எந்த ஆடலோ, பாடலோ இருக்காது. அவர்கள் அந்த தொலைதூர இறப்பையேப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள்.

ஆனால், இதையும் புரிந்துகொள்ளுங்கள். அவர்களால் அந்த பாகங்களை அழிக்க முடியாது. அழித்ததுபோல் நினைத்துக்கொள்ளலாம். அப்படி அவைகளை அழிப்பது என்பது, அந்த முழுமையையும் அழிப்பதற்குச் சமம்தான். ஆனால், அவைகளை ஒருக்காலும் அழிக்க முடியாது, வேண்டுமானால், அதை ஆழத்தில் புதைத்து வைக்கலாம். அவ்வளவுதான்.

ஒன்றை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். இந்த உலகத்தில் எதையுமே, உங்களால் ஆக்கவோ, அல்லது அழிக்கவோ முடியாது. ஏதோ ஒன்று ஏற்கனவே இருந்தாலொழிய, அதை அழிக்க முடியாது. அப்படி அழித்தால், அது ஒன்றுமில்லாததாகி விடும். அதைப்போல, ஒன்றுமில்லாததிலிருந்து, நீங்கள் எதையும் உண்டாக்க முடியாது. உங்களால் செய்யக்கூடியது எதுவென்றால், ஒன்றை, வேறொன்றாக மாற்றமுடியும். ஆகவே, பாகங்கள் என்பது அந்த முழுமையில் அடக்கம். அது அந்த

முழுமைக்குச் சொந்தமானது. அதை அழிப்பதற்கு நீங்கள் யார்? அந்த பாகத்தோடு பற்றுவைக்கும்பொழுது, உங்களிடம் அகங்காரம் ஏற்படுகிறது. அந்தப் பற்றை அழிக்காமல், உங்களால் அகங்காரத்தை அழிக்கமுடியுமா? இது மிகவும் முட்டாள்தனமான வேலை.

ஜெர்மன் மொழியில் ஒரு வார்த்தை இருக்கிறது. அதற்கு நேரடியாக ஆங்கிலத்திலேயோ அல்லது வேறு எந்த மொழியிலேயோ அர்த்தம் பண்ண முடியாது. அந்த வார்த்தை 'கெஸ்ஸால்ட்' (GESTALT) என்பது. இது 'உருவத்திற்கும், சூழ்நிலைக்கும் உறவை ஏற்படுத்துதல்' என்ற அர்த்தத்தைக் கொடுக்கும். இந்த வார்த்தை மிகவும் அர்த்தமுடையது. இதைக் கொஞ்சம் விளக்கிச் சொன்னால்தான் புரியும்.

உதாரணமாக, நான் இப்பொழுது உங்களோடு பேசிக்கொண்டு இருக்கிறேன். ஆனால், உங்களைச் சுற்றி பல ஒலிகள் (ஏரோப்ளேனின் சப்தம், பறவைகளின் ஒலிகள், மரங்களின் அசைவுகளால் ஏற்படும் சப்தங்கள், கார், பஸ் போன்றவற்றால் ஏற்படும் பலவித ஒலிகள்) உங்களை வந்து அடைந்தவாறே இருக்கின்றன. ஆனால், நீங்கள் என்னுடைய வார்த்தைக்கு மட்டும்தான் கவனத்தைச் செலுத்துகிறீர்கள். அப்பொழுது இந்த பலதரப்பட்ட ஒலிகளிடையே, என்னுடைய வார்த்தை மட்டும்தான், உங்களிடம் வடிவமாகிறது (FIGURE). சூழ்நிலையில் ஏற்படும் பலவித ஒலிகள் அனைத்தும், உங்களைச் சுற்றி வந்து மோதினாலும், அதற்கும், உங்களுக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. ஆனால், நான் என் பேச்சை நிறுத்தினால், உங்கள் கவனம் உடனே, அந்த ஒலிகளில் மேல் தாவுகிறது. இப்பொழுது அவைகள்தான் உங்களது உருவமாகிறது. எவைகளெல்லாம், ஒரு சமயம் உங்களின் பின்ணனியாக இருந்ததோ, அது இப்பொழுது உங்கள் கவனத்திற்கு வந்துவிட்டது. ஆனால், அந்த பின்ணனி ஒலிகள்

அப்பொழுதும் இருந்தது, இப்பொழுதும் இருக்கிறது. அது அழிக்கப்படவில்லை. ஆனால், இப்பொழுது உங்கள் கவனம்தான் மாறி இருக்கிறது. இந்த கவனம் மாறி மாறித்தான் இயங்கும். ஒரு சமயம், என் பேச்சில் முழுமையாக கவனம் வைக்கும்பொழுது, அந்த ஒலிகள் மறைகின்றது. நன்றாகக் கவனியுங்கள். மறைகின்றனவே தவிர, அழியவில்லை. பிறகு உங்கள் கவனம் அவைகளில் பதியும்பொழுது, என் பேச்சு மறைகிறது. ஒரு குழந்தையிடம், ஒரு அழகிய மலரையும், ஒரு 100 ரூபாய் தாளையும் கொடுங்கள். அது, அந்த மலரைத்தான் எடுக்கும். அதன் கவனம், அந்த மலரில்தான் பதிகிறது. ஆனால் அந்த நோட்டும், அங்கேதான் இருக்கிறது. இப்பொழுது அதைப் பொறுத்தவரையில், அந்த நோட்டு அதன் கவனத்திலிருந்து மறைந்துவிட்டது. அவ்வளவுதான். அது அழிக்கப்படவில்லை. நான் இருந்த ஊரில், ஒரு பிச்சைக்காரன், ஒரு ஆற்றின் பக்கத்தில் உள்ள ஓர் மரத்தின் கீழ் எப்பொழுதும் உட்கார்ந்திருப்பான். அவனுக்கு சிலபேர்கள் ஒரு அணா அல்லது ஒரு ரூபாய் என்று பிச்சைப் போடுவார்கள். ஆனால், அவன் அந்த ஒரு அணாவை மட்டும்தான் எடுத்துக் கொள்ளுவான்! நீங்கள் 100 ரூபாய் தாளைக் கொடுத்தாலும், அதை ஏறெடுத்தும் பார்க்கமாட்டான். இதன் காரணத்தை ஒரு சமயம் அவனிடம் நான் கேட்டேன். அதற்கு அவன், “அப்படிச் செய்தால் நான் செய்யும் வேடிக்கை முடிந்துவிடும். ஒருவனும், பிறகு ஒரு அணா கூடக் கொடுக்கமாட்டான்! இப்பொழுது அவர்கள் என்னுடைய முட்டாள்தனத்தைக் கண்டு ரசிக்கிறார்கள். ஆனால், நான் முட்டாள் அல்ல. இதைத் தெரிந்தே செய்கிறேன்! இப்படி சுமார் 20 வருடமாக, மக்கள் என் முட்டாள்தனத்தைக் கண்டு ரசிப்பதை, நான் பார்த்து ரசிக்கிறேன். ஆனால், இது அவர்களுக்குப் புரியாது” என்றான்.

ஒரு குழந்தையிடம், ஒரு 100 ரூபாய் அளவு உள்ள வெற்றுத்தாளையும், அசல் 100 ரூபாயையும் கொடுத்துப் பாருங்கள். அது, அந்த அசல் 100 ரூபாயை மட்டும்தான் விருப்பமாகப் பிடிக்கும். ஏனென்றால், அது பல கலர்களில் அச்சிடப்பட்டிருப்பதால்தான். உண்மையில் அந்த குழந்தைக்கு அதன் மதிப்புத் தெரியாது.

ஆகவே, ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு வயதினருக்கும் ஏதோ ஒன்றின்மேல் பற்று, ஆவல் ஏற்படுவது சகஜம்தான். வாலிபனுடைய ஆசை வேறு. வயோதிகனின் ஆசை வேறு. குழந்தைகளின் ஆசை வேறு. இவைகளில் மாற்றங்கள் வருடக்கணக்கில் ஏற்படுவ தோடல்லாமல், நாளுக்கு நாள் கூட ஏற்படும். காலையில் உள்ள உங்கள் ஆவல், மாலையில் இருக்காது. காலையில் இருக்கும் உங்கள் மனநிலை, மாலையில் இருக்காது. காலையில் கோபமாக இருப்பீர்கள். மாலையில் அன்பாக இருப்பீர்கள். ஆனால், கோபமாக இருக்கும்பொழுது, உங்கள் அன்பு, பின்னால் தள்ளப்பட்டிருக்கும். அதைப் போல, அன்புடன் இருக்கும்பொழுது, உங்கள் கோபம் பின்னால் பதுங்கி இருக்கும். ஆனால், ஒருக்காலும் மறையாது. இரண்டுமே இருந்துகொண்டுதான் இருக்கும். இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இதைத்தான், ஹிந்துக்கள், "நாமரூப" (NAMA-RUPA) என்று அழைக்கின்றனர். அதாவது பெயர்களும், குணங்களும் மாறிக்கொண்டே இருக்கும் தன்மையுடையது. ஆனால், உண்மை என்றும் மாறாதது.

ஆகவே, உங்கள் அகங்காரத்தைக் கொல்ல நினைக்காதீர்கள். அது நடக்காத காரியம். அதை நீங்கள் கொல்ல ஆரம்பித்தால், நீங்கள் மிக, மிக அடங்கிப் போய்விடுவீர்கள். இந்த 'மிக, மிக' என்ற வார்த்தை மிகவும் முக்கியமானது. ஏனெனில், இந்த மிக ஆழமான அடக்கத்தில், உங்கள் அகங்காரம், தன்னை எளிதில்

வெளிக்காட்டிக் கொள்ளாமல் பதுங்க வசதியாகிவிடும்! நீங்கள் வெளித்தோற்றத்தில், இந்த உலகத்துக்கு மிக அடக்கமானவராகத் தெரியலாம். ஆனால், உங்களுக்குள்ளே பதுங்கி இருக்கும், உங்கள் அகங்காரத்தை உங்களாலேயே அடையாளம் காணமுடியாது! அது ஒரு சந்தர்ப்பத்தில் தான் வெளிப்படும். அப்பொழுதுதான் அது இருப்பது உங்களுக்கேத் தெரியும்.

ஒரு சிறு கதையைக் கேளுங்கள்.

ஒரு மூன்று கிருஸ்துவமடாலயத்தைச் சேர்ந்த மூன்று சந்நியாசிகள் ஒரு வீதிகளின் சந்திப்பில் சந்தித்துக்கொண்டார்கள். அப்பொழுது ஒரு பாதிரியார், "எங்களுடைய மடம் சிறந்த சந்நியாசிகளை உருவாக்கி இருக்கிறது. ஆனால், உங்களுடைய மடம் அப்படி ஒன்றும் சிறந்த சந்நியாசிகளை, உண்டாக்கவில்லை. எங்களுடைய பழைய பட்டியலைப் பாருங்கள். இது தெளிவாகப் புரியும்" என்றார். அதற்கு அடுத்த பாதிரியார், "நீங்கள் சொல்லுவது சரயாக இருக்கலாம். ஆனால், எங்களுடைய மடம் சிறந்த மதத்தத்துவவாதிகளை உண்டாக்கி இருப்பதை நீங்கள் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். நாங்கள் ஆயிரக் கணக்கான மிகச்சிறந்த தத்துவவாதிகளை உண்டாக்கி இருப்பதை இந்த உலகமே ஒத்துக்கொள்ளும் அப்படிப் பட்ட ஒருவரைக்கூட நீங்கள் உண்டாக்கவில்லை என்பதை நீங்கள் மறுக்கமுடியாது" என்றார்.

பிறகு இரண்டு பேரும் சேர்ந்து, மூன்றாவது பாதிரியாரைப் பார்த்தார்கள். அப்பொழுது அவர், "நீங்கள் கூறியதுபோல், எங்களது மடம் சிறந்த சந்நியாசிகளையோ அல்லது மதத்தத்துவவாதிகளையோ உண்டாக்க வில்லை தான். ஆனால், மிக அடக்கமானவர்களை உண்டாக்கி இருக்கிறது. இதை நீங்கள் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும்" என்றார்.

இந்த மிக அடக்கம் என்பது என்ன? ஒருவனது தன்முனைப்பு அல்லது தான் என்ற அகங்காரம், மனத்தின் அடியில் சென்றுவிட்ட காரணத்தால், அடக்கம் என்ற பொய்மை மேலோட்டமாகத் தெரிகிறது. ஆனால், அந்த ஆழத்தில் உள்ள அகங்காரம், மென்மையாக வேலை செய்துகொண்டுதான் இருக்கிறது. ஏனெனில், தான் மிக அடக்கமாக இருக்கிறோம் என்ற எண்ணமே, அந்த அடக்கப்பட்ட அகங்காரத்தின் விளைவுதான். தான் அடக்கமாக இருப்பதால், மற்றவர்களைக் காட்டிலும் சிறந்தவர் என்ற எண்ணம், அந்த அகங்காரம் கொடுத்தது தான். இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

ஆகவே, அகங்காரம் ஒருபோதும் இறக்காது. அதைக் கொல்ல உங்களால் முடியாது. தான் மிகவும் அடக்கமானவர் என்று சொல்லுபவரது கண்களை உற்றுப்பாருங்கள். அதில் ஒரு கர்வம் தொக்கி நிற்கும். இதில் மதவாதிகள், அதாவது மிக அடக்கமான மதவாதிகள் என்று சொல்லுபவர்கள், மிகவும் ஆபத்தானவர்கள். மக்கள், இவர்களிடம் சுலபத்தில் ஏமாந்துவிடுவார்கள்.

ஆகவே, அகங்காரத்தைக் கொல்லுவதால் எந்த பிரயோஜனமும் இல்லை. அப்படிக் கொல்ல முனைந்தால், இரண்டு வித விளைவுகள் ஏற்படும். ஒன்று, உங்கள் வாழ்க்கை மிகவும் அலுப்பு தரக்கூடியதாக அமைந்துவிடும். வாழ்வில் எந்த உயிரோட்டமும் இருக்காது. அதில் எந்த கொண்டாட்டமோ; ஆடலோ, பாடலோ இருக்காது.

ஆகவேதான், உங்கள் பழைய சந்நியாசிகள், இறந்தவர்கள் போல் காட்சி தருகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கையில், அலுப்பைத் தவிர வேறு எதுவும் இருக்காது. ஒருசமயம், ஒரு பிரபல அமெரிக்க நடிகரிடம், "உங்கள் வாழ்க்கையில், மிகப்பெரிய இழப்பு என்று எதைக் கருதுகிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஆமாம். அப்படிப்பட்ட ஒரு சம்பவம் என் சிறிய வயதில்

ஏற்பட்டது. 'அப்பொழுது எனக்கு மிகச் சிறிய வயதுதான். ஒருசமயம் சாலையில் செல்லும்பொழுது, ஒரு கூடாரத்தைக் காண நேர்ந்தது. அதை ஒரு சர்க்கஸ் என்று நினைத்துக்கொண்டு, பார்க்க ஆவல் கொண்டேன். ஆனால், டிக்கட் எடுத்துச் செல்லுவதற்கு, கையில் காசு கிடையாது.

ஆகவே, பின்பக்கமாக, கீற்றைப் பிரித்துக்கொண்டு, யாருக்கும் தெரியாமல் உள்ளே நுழைந்துவிட்டேன். ஆனால், உள்ளே சென்ற பிறகுதான், அது சர்க்கஸ் இல்லை. ஒரு பாதிரியார் பைபிளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டு, மிகவும் ஏமாற்றமாகிவிட்டது. என் வாழ்க்கையில் நடந்த மிகப் பெரிய ஏமாற்றமாக, இதை இன்றும் நினைக்கிறேன்!'' என்றார்.

பாதிரியார்கள் மற்றும் சந்நியாசிகள் கூட்டம் மிகவும் அலுப்பு தரக்கூடியது. அதில் எந்த உற்சாகமோ, எந்த உயிரோட்டமோ இருக்காது. ஏனெனில், அவர்கள் எல்லோரும், வாழ்க்கையில், ஒரு காலில் நடக்கவும் அல்லது ஒரு சிறகை விரித்து பறக்கவே முயற்சி செய்பவர்கள். இப்படியாக கடவுளை அடையவும் முயற்சி செய்பவர்கள். கடவுளே, இரண்டு கால்களுடனும் அல்லது இரண்டு இறக்கைகளுடனும் இருக்கும்பொழுது, இவர்கள் எப்படி ஒரு காலையோ அல்லது ஒரு இறக்கையோ உபயோகித்து, அவரை அடையமுடியும்? இது எவ்வளவு அசிங்கமான முயற்சி?

ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

ஒருநாள் இரவு, முல்லா நசுரூதினின் மனைவி மிகவும் எரிச்சல் அடைந்து, முல்லாவிடம், "போதும், நிறுத்துங்கள். எதற்காக ஒரே பாட்டை அந்த வீணையில் வாசித்துக்கொண்டு இருக்கிறீர்கள். மிகவும் அலுப்பாக இருக்கிறது. எவ்வளவு பேர்கள், எப்படி மாற்றி மாற்றி

இசைக்கிறார்கள்? உங்களுக்கு இதைத்தவிர வேறு எதுவும் தெரியாதா?'' என்றாள்.

அதற்கு முல்லா, ''போதும், நிறுத்து. நான் இப்படி சுமார் 20 வருடமாக வாசிக்கிறேன். மற்றவர்கள் தன் கைகளை வீணையில் அங்கும், இங்கும் தடவியவாறே இருப்பார்கள். ஆனால், அவர்களால் இன்னும் சரியான இடத்தைக் கண்டு பிடிக்கமுடியவில்லை. ஆனால், நான் அதைக்கண்டு பிடித்து, அந்த இடத்திலேயே விரலை வைத்து வாசித்துக்கொண்டிருக்கிறேன்! இது ஏன் உனக்குப் புரியவில்லை?'' என்றார்.

இப்படித்தான், வாழ்க்கையில், ஒரே வாசிப்பை, உங்களது பழைய சந்நியாசிகள், பாதிரிமார்கள் மற்றும் பழைய மதவாதிகள் செய்துகொண்டு வருகிறார்கள். அந்த வாசிப்பே, அவர்களை மட்டும் அல்ல, அந்த சூழ் நிலையையே துக்ககரமாக, அலுப்பு தரக்கூடியதாக ஆக்கிவிடுகிறது. அவர்கள் கோவில்களையும், மசூதிகளையும் ஆக்கிரமித்துக்கொண்டு, உண்மையான உயிரோட்டமுள்ள மதத்தன்மையை கொன்றுவிட்டார்கள். இந்த இடங்களெல்லாம், கடவுளைப்பற்றி ஆடியும், பாடியும் மகிழவே ஏற்படுத்தப்பட்டன. அவைகள், கடவுளுக்கு நன்றி செலுத்தவே ஏற்படுத்தப்பட்டன. ஒருவன் எப்படி உண்மையாக வாழுவது, எப்படி அன்பு செலுத்துவது, பிரார்த்தனை செய்வது, பேரானந்தத்தில் இருப்பது என்பதை கற்பதற்காகவே அவைகள் அனைத்தும் ஏற்படுத்தப்பட்டன.

ஆனால், இந்த அழுக்குப் பிடித்த சந்நியாசிகளும், மடாதிபதிகளும், அவைகளை சுடுகாடு போல் ஆக்கிவிட்டார்கள். அங்கு இருக்கும் கடவுளும் இறந்து பல காலமாகி விட்டது.

வாழ்வே கடவுள். அதை நீங்கள் இந்த உயிருள்ள மரங்களிலும், இசைக்கும் பறவைகளிலும், மாறும் மேகக்

கூட்டங்களிலும் காணலாம். அது இரு மாறுபட்ட தன்மையில் ஒரு இயக்கமாக நடந்துகொண்டு இருக்கிறது. அது ஒரு லயத்தில் பல கோடிக்கணக்கானப் பொருள்களில் செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது. அது மிக ஆழமானது. அதேசமயம் மிகவும் நுண்ணியமானது. எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும் தன்மையது.

ஆகவே, தன்முனைப்பை கொல்ல முயற்சி செய்யவேண்டாம். அப்படி செய்தால், அது உங்களுக்குள் மிக ஆழமாக பதுங்கிவிடும். அப்பொழுது, வாழ்வும் மிகவும் அலுப்பு தரக்கூடியதாகி விடும். கிட்டத்தட்ட மரண வாழ்க்கையைப் போல் ஆகிவிடும். நீங்கள் வாழ்வின், பல அழகிய நிலைகளைத் தவற விட்டுவிடுவீர்கள்.

பிறகு என்னதான் செய்யவேண்டும்? உங்கள் வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளுங்கள். அதாவது, வாழ்வின், பகுதிகளோடு, உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். ஏனெனில், நீங்களே ஒரு முழுமையின் இயக்கம்தான். அதேசமயம், அந்த முழுமையோடும் உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். ஏனெனில், அந்த முழுமை என்பது பல பாகங்களைக் கொண்டது. சுருக்கமாகச் சொன்னால், நீங்கள் பகுதிகளோடு மட்டுமின்றி, முழுமையோடும் உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளதீர்கள்.

கதையில், "சிப்ளி வந்தபொழுது, தன் மனைவியிடம், ஜுனாயிட், உன்னை மறைத்துக்கொள்ளத் தேவை இல்லை" என்றார். ஏனெனில், அப்பொழுது சிப்ளி, உள்ளத்தளவில் சிப்ளியாக இல்லை. தன்னை எதனோடும் சம்மந்தப்படுத்திக் கொள்ளாமல், ஒரு தென்றலைப் போல வந்திருந்தார். அங்கு என்ன நடந்துகொண்டு இருக்கிறது என்பது பற்றி, அவர் எந்த அக்கரையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில், அவர் உள்ளே யாரும்

இல்லை. ஆகவேதான், ஜூனாயிட், தன் மனைவியிடம், உன்னை மறைத்துக்கொள்ளத் தேவை இல்லை என்றார்.

"ஆனால், பிறகு ஜூனாயிட் சொன்னதைக் கேட்டதும், சிப்பி அழ ஆரம்பித்துவிட்டார்."

இப்பொழுது, சிப்பியின் உள்ளத்தில், தான் யார் என்ற உணர்வு ஏற்பட்டுவிட்டது. தன்னுடைய உள்பகுதியோடு, தன்னை சம்மந்தப்படுத்திக் கொண்டு விட்டார். இதுவரை பதுங்கி இருந்த அகங்காரம் மேலே வந்துவிட்டது.

'சிப்பி இங்கு இல்லை' என்று ஜூனாயிட் போன்ற சிறந்த ஞானிகள் சொன்னது, தன்னை மிகவும் கௌரவித்ததாகக் கருதிய சிப்பி, அன்பு நெகிழ்ச்சியால், ஆனந்தக் கண்ணீர் விட்டார். சாதாரணமாக, ஜூனாயிட் போன்ற சிறந்த ஞானிகளின் ஓர் அன்புப் பார்வையே மிகவும் போற்றத்தகுந்தது. இந்த அளவுக்கு, அவர் தன்னை கௌரவித்ததும், சிப்பியால் தன் உணர்வைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஏனெனில், "சிப்பி இல்லை" என்றால், அங்கு கடவுள் மட்டும்தான் இருக்கிறார் என்று அர்த்தம். இது எவ்வளவு பெரிய வார்த்தை. ஜூனாயிட் சொன்னதின் நேரடியான அர்த்தம், "சிப்பி இப்பொழுது உள்ளே வரவில்லை. கடவுள்தான் வருகிறார். ஆகவே, உன்னை நீ மறைத்துக்கொள்ளத் தேவை இல்லை" என்பதுதான். எங்கும் வியாபித்திருக்கும் கடவுளிடமிருந்து, உங்களை எப்படி மறைத்துக்கொள்ளமுடியும்? அதற்கு அவசியம் என்ன? கடவுள் என்பது உங்களது சுத்தமான உயிர்த்தன்மையைத் தவிர வேறல்ல.

"அப்பொழுது, சிப்பி அழ ஆரம்பித்தார்". ஏன் அழவேண்டும்? ஜூனாயிட், தன்னை போற்றியதும், மறைந்திருந்த அகங்காரம் மேலே வந்துவிட்டது. அதாவது, "ஆமாம், நான் இங்கு இல்லை" என்று, 'நான்' மேலே வந்துவிட்டது. அப்பொழுது அவரது கடவுள்தன்மை

மறைந்துவிட்டது. இது ஏற்படுவதற்கு ஒரு வினாடி போதும். ஒரு பார்வை போதும். அது மேலே வந்துவிடும். ஏனெனில், அது அடக்கப்பட்டிருக்கிறது. அதேசமயம், இந்தத் தான் என்ற உணர்வு எப்படி உடனே மேலே வந்ததோ, அதைப்போல மீண்டும் கீழே சென்றுவிடும். இது மாறி மாறி நிகழும். கடல் அலையைப் போல மேலே எழும்பும், பிறகு கீழே செல்லும். இதை ஒருவன் சாட்சியாக நின்று கவனிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். அதனுடன் தன்னை சம்மந்தப்படுத்திக் கொள்ளக்கூடாது. இதுதான் ரகசியம்.

ஜூனாயிட், சிப்ளியிடம், தன் மனைவியை வைத்து, ஒரு தந்திரம் செய்தார். அதாவது தான் அப்படி சொன்னால், அது சிப்ளியின் உள்ளத்தில் என்ன மாறுதலை ஏற்படுத்தும் என்று கவனிக்க முயன்றார். அவர் எதிர்ப்பார்த்ததுபோலவே, சிப்ளி மலையின் உச்சியிலிருந்து, மடுவுக்குள் வீழ்ந்துவிட்டார். ஒரு வினாடிக்கு முன், கடவுள்தன்மையில் இருந்த சிப்ளி, மனிதத்தன்மையில் வீழ்ந்துவிட்டார். இப்பொழுது, பூமியில் வாழும் சாதாரண கோடிக்கணக்கான மனிதர்களில், அவரும் ஒன்றாகி விட்டார்.

இப்பொழுது சிப்ளி, அந்த ஈடன் தோட்டத் திலிருந்து வெளியே வந்துவிட்டார். இது சாதாரண மக்களிடம் அடிக்கடி ஏற்படுவதுதான். ஆதாம், ஏவாளுக்கு மட்டும் ஏற்பட்டதில்லை. இந்த உலகத்தில் கோடிக்கணக் கான ஆதாமும், ஏவாளும் இப்பொழுதும் இருக்கிறார்கள்! அந்த கதையில் வரும் பாம்பு, தான் என்ற அகங்காரத்தைத் தவிர வேறல்ல. அது ஒரு உவமைதான். எதற்காக பாம்பை உபமானமாகச் சொன்னார்கள்? அது மிகவும் தந்திரமுடையது. அதேசமயம் புத்திசாலித்தனம் நிரம்பியது. அதைப்போலத்தான் உங்கள் அகங்காரமும். அந்த பாம்பு, அந்த ஈடன் தோட்டத்தில் உள்ள கனியை சாப்பிட ஏவாளைத் தூண்டியது. இது என்றைக்கோ நடந்த கதை

அல்ல. இன்றைக்கும் நடந்துகொண்டுதான் இருக்கிறது. ஒவ்வொரு மனிதனிடமும் நடந்துகொண்டுதான் இருக்கிறது. ஒருசமயம், நீங்கள் ஈடன் தோட்டத்தில் இருக்கிறீர்கள். மறுசமயம், நீங்கள் அந்தக் கனியை உண்டு கீழே விழுந்துவிடுகிறீர்கள். இது மாறி மாறி உங்களிடம் இப்பொழுதும் நடந்துகொண்டுதான் இருக்கிறது.

இந்தக் கதையில், ஜுனாயிட், சிப்ளியிடம் நேரடியாக எதுவும் சொல்லவில்லை. அவர் தன் மனைவியிடம்தான் சொன்னார். ஆனால் அது ஒரு மாற்றம் நிகழும் சூழ்நிலையாக அமைந்துவிட்டது.

பெரும்பாலான சுபி ஞானிகள், இப்படித்தான் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவார்கள். ஜுனாயிட், தன்னை கௌரவப்படுத்தியதும், சிப்ளி கண்ணீர் விட்டார். அதில் ஆனந்தமும், துக்கமும் கலந்திருந்தது. தன்னை அவர் கௌரவப்படுத்தியது முதலில் ஆனந்த உணர்வை, சிப்ளியிடம் ஏற்படுத்தினாலும், உடனே சிப்ளி, தான் கீழே விழுந்துவிட்டதை புரிந்து கொண்டுவிட்டார். அப்பொழுது அது துக்கக் கண்ணீராக மாறிவிட்டது. அப்பொழுது அவரது கண்ணீர், ஆதாம் கண்ணீருக்கச் சமமாகிவிட்டது.

ஒருவன் தெய்வீகத்தன்மையிலிருந்து, கீழே விழும் பொழுது ஏற்படும் வலி, மிகவும் துன்பம் தரக்கூடியது. ஒரு வினாடியில், சிப்ளியின் குழந்தைத்தனமான வெகுளித் தன்மை மறைந்து, அகங்காரம் என்ற கிழத்தன்மை ஏற்பட்டுவிட்டது.

"பிறகு ஜுனாயிட், தன் மனைவியிடம், சிப்ளி திரும்பி வந்துவிட்டார். ஆகவே, நீ உன்னை மறைத்துக்கொள்" என்றார்.

அதாவது, இப்பொழுது சிப்ளி சாதாரண மனிதனாகிவிட்டார். அவரிடம் இதுவரை பதுங்கி இருந்த பேராசை, பால் உணர்வு, பொறாமை, கோபம் போன்ற

அனைத்து சாதாரண உணர்வுகளும் மேலே வந்துவிட்டன. ஆகவே, உன்னை மறைத்துக்கொள் என்று அர்த்தம்.

இந்த நிகழ்ச்சியின் மூலம், நீங்கள் என்ன புரிந்துகொண்டீர்கள்? நீங்கள் தெய்வத்தன்மையும், மற்றும் சாதாரண ஆசாபாசங்கள் நிறைந்த மனிதனாகவும் இருக்கிறீர்கள். ஒருசமயம் தெய்வத்தன்மை மேலே வருகிறது. அப்பொழுது சாதாரண மனித இயல்புகள் கீழே சென்றுவிடுகின்றன. அதைப்போல, இவைகள் அனைத்தும் மேலே வரும்பொழுது, தெய்வத்தன்மை கீழே சென்று விடுகிறது. ஆக, நீங்கள் இரண்டாகவே இருக்கிறீர்கள்.

அப்படி இல்லாவிட்டால், இந்த மாற்றம் உங்களிடம் எப்படி ஏற்படும்? அதுவும் வினாடி நேரத்தில். ஆகவே, தெய்வீகத்தன்மையும், சாத்தானின் தன்மையும் ஒருங்கே உங்களிடத்தில் இருக்கின்றன. அதை வெளிப் படுத்துவதில்தான், மனிதர்களில் ஒருவருக்கொருவர் வேறுபடுகிறார்கள். நீங்கள் சாத்தானோடு சம்மந்தப் பட்டால், நீங்கள் துக்கப்படத்தான் வேண்டும். ஏனெனில், நீங்கள் அமைதியையும், ஆனந்தத்தையும், சாத்தானின் தன்மையில் ஒருக்காலும் அடையமுடியாது. ஆனால், இது உங்கள் முழுமையின் ஒரு பாகம்தான். அதே சமயம், நீங்கள் முழுமையோடு சம்மந்தப்படுத்திக் கொண்டால், நீங்கள் அமைதியையும், பேரின்பத்தையும் அடையலாம். ஆனால், அது எப்பொழுதும் நிலைத்து நிற்காது. ஆனால், ஜுனாயிட் போன்ற ஞானிகளோடு இருந்தால், உங்களை அவர்கள் மீண்டும் முழுமையில் சுலபமாகத் தள்ளமுடியும். இருந்தாலும், நீங்கள் அந்த முழுமையிலும் பற்றுடன் இருக்கக்கூடாது. இதைக் கவனத்தில் கொள்ளுங்கள்.

சுருக்கமாகச் சொன்னால், எதிலும், பற்றற்று ஒரு நடுநிலையில் இருக்கப் பழகிக்கொள்ளுங்கள்.

இந்தக் கதையில் உள்ள சிப்பி, எங்கே தன்னை தவறவிட்டார்? விடுதலை, பேரின்பம், கடவுள்தன்மை என்ற எண்ணத்தில், தன்னை சம்மந்தப்படுத்திக்கொண்டு, 'தான்' என்ற அகங்காரத்தை மேலே கொண்டுவந்து, தன்னுடைய வெகுளித்தன்மையை, ஒன்றும் அற்ற தன்மையை தொலைத்துவிட்டார். அந்த அகங்காரம், தன்னுள் மறைந்திருப்பதை மறந்துவிட்டார். ஒரு வினாடி நேரத்தில், அது அவரை அறியாமலேயே மேலே வந்து விட்டது. அப்பொழுது, பின்னால் உள்ளது முன்னால் வந்துவிட்டது; முன்னால் உள்ளது பின்னே சென்று விட்டது.

இந்த வித்தையை நானும் தினசரி, சிலபேர்களிடம் செய்து வருகிறேன். கொஞ்சம் தூண்டினால் போதும். அவர்கள் உடனே மாறிவிடுவார்கள். உடனே ஆகாயத்தில் பறக்க ஆரம்பித்துவிடுவார்கள். ஆனந்தத்தின் உச்சியில் இருப்பதாகக் கருதிக்கொள்ளுவார்கள். ஆனால், அது அப்படி இல்லை என்று கொஞ்சம் சுட்டிக்காட்டினால் போதும்; அவர்கள் பரிதாபமாக அதள பாதாளத்தில் வீழ்ந்துவிடுவார்கள்.

ஆகவே, எதிலும் மிகவும் கவனமாக இருங்கள். எதிலும் உங்களை சம்மந்தப்படுத்திக்கொள்ளாமல், ஒரு சாட்சியாக இருக்கப் பழகிக்கொள்ளுங்கள். எதிலும் நடுநிலையை கடைப்பிடியுங்கள். துன்பங்கள் வரட்டும். இன்பங்கள் வரட்டும். ஆனால், நீங்கள் அந்த இரண்டையும் தாண்டி நில்லுங்கள். அதுதான் அந்த நடுமைய நிலை. இந்த நிலையில், நீங்கள் இருந்தால், அந்தத் துன்பமோ அல்லது இன்பமோ உங்களை சாராது. அல்லது, நீங்கள் அவைகளை அணுகமாட்டீர்கள்

நீங்கள் இந்த உலகத்தில் இருங்கள். ஆனால், உங்களுக்குள், இந்த உலகத்தைத் திணித்துக்கொள்ளாதீர்கள். ஒரு பற்றற்றத் தன்மையை உங்களிடம் ஏற்படுத்திக் கொள்ளுங்கள். ஆனால், இதற்கு பயிற்சியும், முயற்சியும் தேவை. பயிற்சி என்பது தியானத்தைத் தவிர வேறல்ல. முயற்சி என்பது உங்கள் ஆர்வத்தைத் தவிர வேறல்ல. இந்த உலகத்தில் எல்லாம் மாறும் தன்மையுடையது. பகல் இரவு, வசந்தம் குளிர், இன்பம் துன்பம், இப்படி சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால், எதிலும் உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். இன்பத்தில் சம்மந்தப் படுத்திக் கொண்டால், அதனுடைய மறுபக்கமான துன்பத்திலும் சம்மந்தப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டும். இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். ஒன்றை மட்டும் தேர்ந்து எடுக்க முடியாது. பகுதிகளை தேர்ந்து எடுத்தால், முழுமையையும் தேர்ந்து எடுக்கத்தான் வேண்டும். அதைப்போல முழுமையைத் தேர்ந்து எடுத்தால்; அதன் பகுதிகளையும் தேர்ந்து எடுக்கத்தான் வேண்டும். ஆகவே, எப்பொழுதும் இந்த இரண்டுக்கும் அப்பால் இருக்க முயற்சி செய்யவும்.

இது ஒரு அழகான விளையாட்டுதான். அதனால் தான் வாழ்வை, ஹிந்துக்கள், "லீலை" என்று அழைத்தனர். அதை தாண்டிய நிலையில், உங்களிடத்தில் துக்கமும் இருக்காது, இன்பமும் இருக்காது.

கடவுள் தன்னை பல லட்சக்கணக்கான பெயர்களில், உருவங்களில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவருடைய அடையாளம் இல்லாத இடமே, இந்த உலகத்தில் இல்லை. அதனால், நீங்கள் நரகத்தில், துன்பத்தில் இருந்தாலும், அவரை உங்களால் அடையாளம் காணமுடியும். ஆனால், நீங்கள் வாழ்வின் இந்த மாறுபட்ட

தன்மைகளை (இன்பம் துன்பம், இரவு பகல், வசந்தம் குளிர்) கடந்திருக்கவேண்டும். அந்தக் கடந்த நிலையில்தான், கடவுள் தன்னை வெளிப்படுத்திக் காட்டிக்கொள்ளுகிறார். இந்த உலகத்தில் உள்ள மாபெரும் முரண்பாடு, புரியாத புதிர் எல்லாம் கடவுள் என்பதுதான். இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

இந்த உலகத்தில் உங்களை சம்மந்தப்படுத்திக் கொள்ளாமல், வாழும் கலையைக் கற்றுக்கொண்டால், நீங்கள் எல்லாவற்றையும் கற்றவராகி விடுவீர்கள். நீங்கள் மேற்கொண்டு சுபிக்களின் கருத்துக்களைக் கேட்க வேண்டியதில்லை. சுபியின் முக்கிய கோட்பாடுகளை, மேல்நாட்டில் பரப்பியவர்களில், குருட்ஜீப் (GURDJIEFF) மிகவும் முக்கியமானவர். அவர், சுபியின் கருத்துகளை சுருக்கமாக ஒரே வார்த்தையில், அதாவது, 'பற்றற்று இருத்தல்' (NON IDENTIFICATION) என்று சொல்லிவிட்டார்.

குழந்தைப் பருவம் வரும், போகும். அதைப்போல வாலிபம், ஆரோக்யம். வியாதி போன்றவைகள் வரும், போகும். ஆனால் உங்களுடைய உயிர்த்தன்மை மற்றும் உணர்வுநிலையில் எந்த மாற்றமும் இருக்காது. உங்களிடத்தில் எது நிலையாக இருக்கிறதோ, அதுதான் கடவுள் அல்லது கடவுள்தன்மை.

எவைகளெல்லாம் உங்களிடத்தில் வந்து, சென்று கொண்டிருக்கின்றனவோ, அவைகளெல்லாம் உங்களுக்குச் சொந்தமானது அல்ல. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

நீங்கள் என்பது வெறும் சாட்சிதான், அல்லது வெறும் பார்வையாளன் தான். பற்றற்று இருப்பதற்கு மறுபெயர் தான் சாட்சியாக இருத்தல் ஆகும். இதுதான் தியானம் என்பதும்.

கதையில், பிறகு ஜூனாயிடுவின் உதவியால், சிப்ளி சிலநாட்களுக்குப் பிறகு ஞானநிலையை எய்தினார்.

பிறகு சிப்ளியிடம், சில பேர்கள் வந்து, எப்பொழுது ஞானநிலையை அடைந்தீர்கள் என்று கேட்டார்கள். யார் உங்களது குரு என்று வினாவினார்கள். அதற்கு சிப்ளி, "முதலில் ஒரு நாய்தான் என் குருவாக இருந்தது. ஒரு நாய் மிகவும் தாகத்தோடு, ஓர் ஆற்றை நோக்கி ஓடியது. ஆனால், ஆற்றில் பார்க்கும்பொழுது, தன்னைப்போல இன்னொரு நாய் அங்கு இருப்பதைக் கண்டு பயந்து பின்வாங்க முயன்றது. ஆனால், மிகுந்தத் தாகத்தோடு இருந்ததால், பயத்தை உதறிவிட்டு, ஆற்றில் இறங்கி நீரை மிகவும் ஆவலுடன் பருக ஆரம்பித்தது. அப்பொழுது அந்த நாயின் உருவமும் மறைந்துவிட்டது. அப்பொழுதுதான், அது தன்னுடைய உருவத்தின் பிரதிபலிப்பு என்று அதற்குப் புரிந்தது. ஆறு, ஒரு கண்ணாடிபோல் அதன் உருவத்தைப் பிரதிபலித்தது. அதைப்போல, நான் என்னுள் கடவுள்தன்மையில் இருக்கிறேன். அதைத்தவிர வேறுயாரும் உள்ளே கிடையாது. ஆனால், வெளியில், எல்லோரும் என் முகத்தையேப் பிரதிபலிக்கிறார்கள். அதைக் கண்டு நான் பயப்படுகிறேன். அப்படிப் பயப்படாமல், அந்த நாய், ஆற்றில் பாய்ந்ததுபோல், நான் என் உள்ளே பாய்ந்து சென்றால், அந்த பிரதிபலிப்பு மறைந்து, நான் ஆற்றைப் போல உள்ள கடவுள்தன்மையோடு இணைந்துவிடுவேன்.

அதற்கு நான் முதலில் உங்களில், என்னைக் கண்டுப் பயப்படுவதை நிறுத்தி, கடவுளை அடையவேண்டும் என்ற அடங்காத தாகம் கொண்டிருக்கவேண்டும் என்பதை அந்த நாய்தான் உணர்த்தியது. ஆகவே, அதுதான் என் . முதல் குரு.

அடுத்த குரு, ஒரு திருடன்!

ஒருநாள் இரவு, நான் ஒரு நகரத்தில் தனிமையாக இருந்தேன். சரியான பாதை தெரியவில்லை. எல்லா வீட்டுக் கதவுகளும் மூடிஇருந்தன. எங்கு தங்குவது என்று புரியவில்லை. அப்பொழுது, ஒரு திருடனை சந்தித்தேன். அந்த நடுஇரவில், அவன் ஒரு வீட்டினுள் நுழைய முயற்சி செய்தான். அப்பொழுது அவனிடம் நான், "நான் மிகவும் களைப்பாக இருக்கிறேன். பசி, தாகம் வேறு. இந்த குளிரான இரவில், எங்கேயாவது தங்க இடம் கிடைக்குமா?" என்று கேட்டேன். அதற்கு அவன், "நீ என் வீட்டில் தங்கிக்கொள். ஆனால், நான் உன்னிடம் வெளிப்படையாக, உண்மையைச் சொல்ல விரும்புகிறேன். ஏனெனில், உன்னைப் பார்த்தால், ஒரு சந்நியாசி போல் தோன்றுகிறது. ஆகவே, உன்னிடம் பொய் சொல்ல விரும்பவில்லை. அதாவது, நான் ஒரு திருடன். நீ, உண்மையிலேயே ஒரு சந்நியாசியாக இருக்கலாம் அல்லது போலியாக இருக்கலாம். ஆனால், என்னைப் பொறுத் தவரையில், நான் ஒரு உண்மையான திருடன்தான். நீ, என்னுடைய விருந்தினனாக இருக்கப் பிரியப்பட்டால், தாராளமாக என்னுடன் தங்கலாம்" என்றான்.

அப்பொழுது நான் சிறிது தயங்கினேன். ஏனெனில், நான் ஒரு திருடன் வீட்டில் தங்கி இருப்பதை, யாராவது பார்த்தால், என்னை மிகவும் கீழ்த்தரமாக நினைப்பார்கள். அதை உணர்ந்துகொண்ட அந்தத் திருடன், "இதோ பார் நீ என்னுடன் தங்க பயப்படுகிறாய். உண்மையான சந்நியாசி இதற்கெல்லாம் பயப்படமாட்டார். நீ எதற்காகப் பயப்பட வேண்டும். நான் உன்னை, என்னைப் போல ஒரு திருடனாக மாற்றிவிடுவேனோ என்றா பயப்படுகிறாய்? இல்லை, நான் உன்னை நாஸ்திகனாக மாற்றி விடுவேனா

என்ன? இதோ பார், நான் உன்னைக் கண்டுப் பயப்படவில்லை. நீ யார் என்ற கவலையே, எனக்குக் கிடையாது. மேலும், உன்னால், என்னை மாற்றமுடியாது. நான் என்னுடைய தொழிலில் உறுதியாக இருக்கிறேன். அதைப்போல, நீயும் உன் தன்மையில் ஏன் உறுதியாக இருக்கக்கூடாது?'' என்றான்.

இவன் எனது இரண்டாவது குரு. நான் அவனது வீட்டில் சுமார் ஒரு மாத காலம் தங்கி இருந்தேன். அவன் எவ்வளவு அன்பானவன் என்பதை அப்பொழுதுதான் புரிந்துகொண்டேன். அவன் உண்மையானவன். ஒவ்வொரு இரவும், அவன் வெளியில் சென்று, விடிவதற்குள் திரும்பிவிடுவான். நான்தான் கதவைத் திறந்துவிடுவேன். அப்பொழுது நான், "என்ன, இன்று நல்ல வேட்டையா?" என்று கேட்பேன். அதற்கு அவன், "அப்படி ஒன்றும் இல்லை. நாளை பார்ப்போம்'' என்பான். ஆனால், அவன் எப்பொழுதும் மகிழ்ச்சியாகவே இருந்தான். ஒரு மாதம், நான் தங்கி இருந்த அளவில், அவன் எதையும் பெரிதாகத் திருடிக்கொண்டு வரவில்லை. பெரும்பாலும், வெறும் கையோடுதான் திரும்பி வருவான். ஆனால், அவன் ஒருக்காலும் துக்கமாக இருந்ததில்லை. அவனுடைய நம்பிக்கை, அவனுக்கு சந்தோஸத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது.''

சிப்ளி மேலும் சொன்னதாவது, "நான் கடவுளைத் தேடும்பொழுது, பலதடவை நம்பிக்கை இழந்திருக்கிறேன். இந்தத் தேடுதலே முட்டாள்தனம் என்றுகூட பலதடவை நினைத்திருக்கிறேன். எத்தனையோ தடவைகள் இந்த முயற்சியைக் கைவிட எண்ணியிருக்கிறேன். நான் அறிந்த, கேட்ட பல வழிகளையும் கடைப்பிடித்துப் பார்த்து விட்டு விட்டேன். ஆனால், கடவுளை அறியவோ, உணரவோ

முடியவில்லை. அதனுடைய அறிகுறியே எனக்குத் தென்படவில்லை. எல்லாமே கற்பனையோ என்று சந்தேகப்பட்டேன். இப்படி எல்லா முயற்சிகளையும் கைவிடும் நிலையில்தான், இந்தத் திருடனைக் கண்டேன். இவன் சொன்ன, "நம்பிக்கை இன்னும் இருக்கிறது. நாளை பார்ப்போம்" என்ற சொற்கள், எனக்கு மிகுந்த நம்பிக்கையை ஊட்டின. இப்படித்தான், கடவுள்தன்மையை ஒருநாள் அடைந்தேன். அதற்காக, நான் அந்தத் திருடனுக்கு நன்றி சொல்லுகிறேன். அவனை எனது இரண்டாவது குருவாகக் கருதுகிறேன்" என்றார்.

மேலும் அவர், "என்னுடைய கடைசி குருவாக, ஜுனாயிடுவின் மனைவியைத்தான் கருதுகிறேன். ஏனெனில், அவள் தன்னை படுதாவினால் மறைத்துக் கொள்ள முயன்றாள். அப்பொழுது ஜுனாயிட், என்னை மலை உச்சியிலிருந்து, பள்ளத்தாக்கில் கொண்டுவந்தார். அப்பொழுது என் அகங்காரம் அனைத்தும் நொறுங்கியது. அவர் எவ்வளவு அன்பு நிறைந்த கொடூரமானவர்! நான் விம்மி அழும்பொழுது, அவரது மனைவி, என்னைப் பார்த்து இகழ்ச்சியாகச் சிரித்தாள். அது ஒன்றுபோதும். நான் சுத்தமாக அழிக்கப்பட்டு விட்டேன். அதுவே என் பற்றையும் அழிக்கக் காரணமாயிற்று. அதன்பிறகு, நான் பள்ளத்தில் இருந்தாலும், மலைஉச்சியில் இருந்தாலும், நான் தனியாக, என் உயிர்த்தன்மையில் மட்டும் இருப்பதாக உணருகிறேன். நான் மலைஉச்சியில் இருக்கும்பொழுதும், ஜுனாயிடுவின் மனைவியின் சிரிப்பைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் எதனோடும் சம்மந்தப்படுத்திக் கொள்ளுவதில்லை" என்றார்.

அதன்பிறகு சிப்ளி, ஞானநிலையை அடைந்தார். ஞானநிலை என்றால் என்ன? எல்லாவற்றையும் கடந்து, பற்றற்று இருப்பதுதான் ஞானநிலை. வேறொன்றும் இல்லை. முயன்றால், நீங்களும் இதை அடையலாம். ஆனால், தீவிரமான ஆர்வம், நம்பிக்கை, உழைப்பு எல்லாம் ஆரம்பத்தில் அவசியம். மனம் தன் உழைப்பையெல்லாம் செலவழித்து, இனிமேல் முயற்சி செய்ய எதுவும் இல்லை என்று தன் தோல்வியை பரிபூர்ணமாக ஒத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது அது பூர்ண சரணாகதி நிலைக்கு வருகிறது. இந்த நிலையில்தான் கடவுள்தன்மை, தன்னை வெளிக்காட்டும். அப்பொழுதுதான் ஒருவன் ஞான நிலையை அடைவான். அப்பொழுது உங்களது தேடுதல் நிற்க, தேடியது கிடைக்கும். ஆனால், முதலில் நீங்கள் உங்கள் முயற்சியாகத் தேடித்தான் ஆகவேண்டும். இவைகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

## 5. ஒரு சாதாரண சிறிய காசு
### (JUST A SMALL COIN)

“வாயிஸ் அல் குர்னி (UWAIS AL-QARNI) க்கு, ஒருவர் கொஞ்சம் பணம் தர முன்வந்தார். அப்பொழுது அவர், “என்னிடம் ஒரு சிறிய காசு இருக்கிறது. அதுபோதும்” என்றார். அதற்கு பணம் கொடுக்கவந்தவர், “அது எவ்வளவு நாளைக்கு வரும். ஆகவே, இந்தப் பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள்” என்று அன்புடன் வேண்டினார்.

அதற்கு வாயிஸ், “நீங்கள் கொடுக்கும் பணம், என் ஆயுள் முடியும் வரை போதும் என்று நீங்கள் எனக்கு உறுதி அளித்தால், நீங்கள் கொடுப்பதை வாங்கிக் கொள்ளுகிறேன்” என்றார்.

வாழ்வு என்பது “இப்பொழுது,இங்கே” எப்பொழுதும் நிகழ்ந்துகொண்டு இருப்பது. அதற்கு வேறு எந்த காலமும் கிடையாது. அதற்கு ஒரே காலம்தான் உண்டு. அதுதான் நிகழ்காலம். மற்ற காலங்களெல்லாம், உங்களது மனதின் செயல்பாட்டால் உண்டானவைகள்.

இன்று, இப்பொழுது நடப்பதுதான் உண்மை. நாளை என்பது மனதின் கற்பனை. அது வரலாம், அல்லது வராமலே போகலாம். அது நிச்சயமற்றது. இந்தக் கற்பனைக் கனவு உங்களுக்குத் தேவைதான். ஏனெனில், நீங்கள் உண்மையில் இன்னும் நிலைக்கவில்லை. அதில் நீங்கள் வேர் ஊன்றி இருந்தால், நாளை என்ற கனவுக்கு, வேலை ஏது?

ஒரு மனிதன் அடிக்கடி மதத்தின் பெயரில், விரதம் இருக்கிறான். அப்பொழுது அவன் நிச்சயம் பசியோடுதான் இருக்கவேண்டும். அதனால், அவன் உடல் துன்பம் அடைகிறது, களைப்படைகிறது. அவனுடைய மத சம்மந்தமான, கடவுள் சம்மந்தமான அகங்காரம், தன்னை பிறர் மதிக்கவேண்டும் என்ற ஆவலால் தான் ஒரு உண்மையான

சந்நியாசி என்று காட்டிக்கொள்ள, அவன் பட்டினி இருக்கிறான்.

உங்கள் உடல் என்பது உண்மையானது. ஆனால், உங்கள் அகங்காரம் பொய். இப்பொழுது பொய், மெய்யை ஆளுகிறது. இப்படி ஒருவன், பகல் முழுவதும் பட்டினி இருந்தால், இரவில் அவன் உடம்பு, உணவை நாடுகிறது. அவனால் தூங்க முடிவதில்லை. இப்பொழுது அவன் உடலுக்குத் தேவை உணவுதான். வேறில்லை. ஆகவே, மனம் என்ன செய்கிறது? உணவைப் பற்றிய கனவுகளை உண்டாக்குகிறது. அவன் ஒரு அரசனது விருந்தினனாக, அந்த அரண்மனையின் சாப்பாட்டு மேஜையில், பலவித உணவுகளை விரும்பி சாப்பிடுவதாக, கனவுகளை ஏற்படுத்துகிறது. இதனால் உடலுக்கு எந்த பிரயோஜனமும் இல்லை. இருந்தாலும், இந்தக் கனவு மூலம், அவன் மனம் திருப்தி அடைகிறது.

இப்படி பொய்யாக மனம் திருப்தி அடையும்பொழுது, ஒருவனுக்கு இயல்பாக தூக்கம் வருகிறது. ஆனால், காலையில் முழிப்பு வந்ததும், மறுபடியும் பசி எடுக்க ஆரம்பிக்கிறது. ஆக இந்தக் கற்பனைக் கனவு, அவனை சிறிது அமைதிப்படுத்தத் தான் உதவியது.

அதைப்போல நீங்கள் இறுக்கம் உடையவராக இருந்தால், எதிர்பார்ப்பில் இருந்தால், உங்களுக்குக் கனவு தேவையாக இருக்கிறது. அது உங்களை அமைதிப்படுத்த உதவுகிறது. உங்களை ஓய்வில் இருக்கச் செய்கிறது. நீங்கள் இப்பொழுது, இங்கே உண்மையாக இல்லாவிட்டால், வேறு ஏதோ ஒன்றில் கற்பனையாக இருந்தாலும், உங்கள் மனம் அதில் ஈடுபட்டு இருந்தால்தான், நீங்கள் அமைதியாக இருக்கமுடியும். நீங்கள் ஆகாயத்தில் தொங்கிக்கொண்டு இருக்கமுடியாது. ஆகவே, இப்படிப்பட்ட மனநிலை உள்ளவர்களுக்கு கனவுகள் மிகவும் அவசியமாகின்றன.

கனவின் வேர் எதிர்காலம்சான். அது உங்களுக்கு நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. இன்று நிறைவேறாத ஆசைகள், நாளை நிச்சயம் நிறைவேறும் என்று பொய்யான உறுதிமொழியைக் கொடுக்கிறது. அது பொய் என்று உங்களுக்குத் தெரிந்தாலும், அது உங்களை அமைதிப்படுத்த உதவுகிறது. இந்த 'நாளை' என்ற இடைவெளியில், நீங்கள் சிறிது களைப்பாருகிறீர்கள்.

இந்த மரங்களைப் பாருங்கள். அவைகள் எந்தக் கனவையும் காண்பதில்லை. அவைகளுக்கு அது தேவையும் இல்லை. அவைகள், இங்கே இப்பொழுது நிறைவாக, பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றன. அந்தப் பறவைகள் பாடுவதைக் கேட்டு ரசிக்கின்றன. அந்தப் பறவைகளும் தன் பாட்டை இயல்பாகப் பாடுகின்றன. அவைகளுக்கும் 'நாளை' என்பது கிடையாது. மனிதனைத் தவிர, மற்றவை அனைத்தும் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை.

இந்த நாள் மிகவும் அழகாக, ஆனந்தமாக இருக்கும்பொழுது, நாளையைப் பற்றி, யார் கவலைப் படுவார்கள்? உங்களுக்கு எந்த அளவுக்கு ஆசைகள் இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு, நீங்கள் நாளையை எதிர்ப்பார்க்கிறீர்கள்.

ஜீசஸ், தன் சீடர்களிடம், "அந்த லில்லி மலர்களைப் பாருங்கள். அவைகள் எவ்வளவு அழகாக, உயிரோட்டமுள்ளதாக இருக்கின்றன. இதற்கு சாலமனின் அரண்மனையில் உள்ள அலங்காரம் கூட ஈடாகாது. இவ்வளவு அழகாக அவைகள் இருப்பதின் ரகசியம் என்ன? அது வேறு ஒன்றும் இல்லை. அவைகள் அனைத்தும் இப்பொழுது, இங்கு கணத்துக்கு கணம் வாழுகின்றன. அவைகள் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை. சாலமன் சிறந்த, புத்திசாலி, மிக்க புகழ்பெற்ற, பணம் படைத்த செல்வாக்கு உள்ள அரசனாக இருக்கலாம்.

ஆனால், இந்த லில்லி மலர்கள் "இப்பொழுது இங்கே" நிறைவான வாழ்வு வாழ்வது போல் அவனால் நிச்சயம் முடியாது" என்றார்.

நீங்கள் எப்பொழுதும் எதிர்காலத்தில் வாழ்ந்தால், உங்கள் முகத்தின் என்ன உயிரோட்டம் இருக்கப் போகிறது? என்ன களை இருக்க முடியும்? உங்கள் சக்தி அனைத்தும் எதிர்காலத்தில் இருக்கும்பொழுது, இப்பொழுது உங்கள் முகம் இறந்ததுபோல் தான் இருக்கும். ஆகவேதான், ஜீசஸ் தன் சீடர்களுக்கு, "இந்த கணத்தில் கவனம் செலுத்துங்கள். இப்பொழுது முழுமையாக இருங்கள், வாழுங்கள. நாளை என்பது உங்களை நிச்சயம் காப்பாற்றும். அதைப் பற்றி இன்று ஏன் கவலைப்படவேண்டும்? அது வரலாம், அல்லது வராமலே போகலாம். அதற்கு ஏன், இன்று கவலைப்படுகிறீர்கள்?" என்று அறிவுரை கூறினார்.

ஒரு மனிதன், தன் தேவைகளை மட்டும் பூர்த்தி செய்துகொண்டால், இந்த உலகத்தில் வறுமையே இருக்காது. அப்பொழுது இந்த உலகம் சொர்க்கமாகி விடும். இந்த உலகத்தில் எல்லாம் நிரம்பி வழியும். ஆனால், அவனுடைய பேராசையே, அவன் துன்பம் அனைத்திற்கும் காரணம். அதுமாத்திரமல்ல. அது பலபேர்களின் துன்பத்திற்கும் காரணமாகிறது. ஏதாவது பசியோடு இருக்கும் பறவைகளையோ, அல்லது தாகத்தோடு இருக்கும் மரங்களையோ பார்த்திருக்கிறீர்களா? இந்தப் பிரபஞ்ச உயிர்த்தன்மை அல்லது கடவுள்தன்மை, அவைகளின் அத்தியாவசியமான தேவைகளை எப்படியோ பூர்த்தி செய்துகொண்டுதான் இருக்கிறது. இல்லாவிட்டால், இந்த உலகத்தில் இவ்வளவு மரம் செடிகொடிகளும், பறவைகளும் எப்படி இவ்வளவு ஆனந்தமாக வாழமுடியும்?

ஆகவே, வாழ்வு மிகவும் செழிப்புள்ளதுதான். ஆனால், அது உங்கள் அத்யாவசியத் தேவைகளை மட்டும்

பூர்த்தி செய்துகொள்ளுவதாக இருக்கவேண்டும். நீங்கள் ஆசைப்பட்டுக் கொண்டே இருந்தால், நீங்கள் ஏழ்மையில் தான் இருக்கவேண்டும். துன்பத்தில்தான் இருக்கவேண்டும். இதை ஆழ்ந்து சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள். உடல் அமைதிக்கு, பசி எடுக்கும்பொழுது உண்ணுங்கள். மன அமைதிக்கு, இறைவனை எப்பொழுதும் பிரார்த்தனை செய்தோ, தியானம் செய்தோ, வாழுங்கள். போதும். உங்கள் உடல் பசி அடங்கின பிறகு, பிரார்த்தனை தன் இயல்பாக கிளம்பும். அது கடவுளுக்கு நன்றி சொல்லுதலைத் தவிர வேறில்லை.

நீங்கள், உங்களை பட்டினி போட்டு கடவுள் தன்மையை ஒருக்காலும் அடையமுடியாது. இது உங்களையே, நீங்கள் தற்கொலை செய்துகொள்ளுவதற்கு சமம். இதைவிட முட்டாள்தனம் வேறு எதுவும் இல்லை.

சாதாரணமாக, ஒரு எளிய மத நம்பிக்கை உடையவன், கடவுள்தன்மையை அடைய விரும்புபவன், தன் தேவைகளுக்கு மேல், எதற்கும் ஆசைப்படுவது இல்லை. அது அவனால் முடியாத காரியம்.

உதாரணமாக, நீங்கள் இப்பொழுது சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அப்பொழுது ஒரு விலையுயர்ந்த காரை வாங்கவேண்டும் என்று ஆசைப்பட்டால், அது உடனே நடக்கக்கூடிய காரியமா? அப்பொழுது, உங்கள் நினைவு காரின் மேல்தான் இருக்கிறதே தவிர, இப்பொழுது நடக்கும் செயலில் இல்லை. அதாவது உண்பதில் இல்லை. அப்படி இருக்கும்பொழுது, நீங்கள் எப்படி சுவைத்து சாப்பிடமுடியும்? அப்படியே அந்தக் காரை வாங்க வேண்டும் என்றால், அதனால் நீங்கள் எவ்வளவு வேலை செய்யவேண்டும்? எவ்வளவு துன்பப்படவேண்டும்? இது எவ்வளவு முட்டாள்தனமானது? உங்கள் சக்தி அனைத்தும் தேவையற்ற பொருளின்மேல் பதிந்து, உங்கள் பசி, தூக்கம், நிம்மதி அனைத்தையும் அழித்துவிடுகிறது. அப்படி அது

கைகூடி வந்தால், நீங்கள் உங்கள் சக்தியை எல்லாம் இழந்து, ஒரு உயிரற்ற ஜடம்போல் ஆகி இருப்பீர்கள்! இது தேவைதானா? இப்படித்தான் பலகோடி மக்கள், தேவையற்றதற்கெல்லாம் ஆசைப்பட்டு, எப்பொழுதும் நிம்மதி இல்லாமல் இருக்கிறார்கள்.

ஒன்றை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். உண்மையான திருப்தியற்ற நிலையிலிருந்துதான் உண்மையான திருப்தி வரும். நல்ல பசியும், தாகமும் உங்களை திருப்தியற்ற நிலையில் வைத்திருக்கிறது. அப்பொழுது அமைதி இழந்து, துன்பத்தில் இருக்கிறீர்கள். ஆனால், வயிறு நிறைந்தபிறகு, உண்மையான திருப்தி ஏற்படுகிறது. ஆனால், நீங்கள் தேவையற்ற பொருள்களை அடைய திருப்தியற்று இருந்தால், அதை அடைந்தபிறகு, அது உண்மையான திருப்தியைக் கொடுக்காது. இது அநுபவத்தில்தான் புரியும். ஏனெனில், நீங்கள் பெரும்பாலும், உங்கள் சக்திக்கு மீறிய பொருள்களில்தான் ஆசைப்படுகிறீர்கள். ஒரு வீடுகட்டுவது, ஒரு நாட்டின் ஜனாதிபதியாவது என்பது சாதாரண காரியமா? அது நடப்பதற்குள், ஒன்று நீங்கள் இறந்துவிட்டிருப்பீர்கள் அல்லது உயிரோடு இருந்தாலும், இறந்தவனுக்குச் சமமாகவே இருப்பீர்கள்

சகல உண்மையான மதங்களெல்லாம், ஒன்றைத்தான் வலுயுறுத்துகின்றன. அதாவது, "தேவையானதுக்கு மேல் எதற்கும் ஆசைப்படாதீர்கள்." உங்கள் உண்மையான தேவைகள் மிகச் சொற்பம். மிக எளிமையும், அழகும் வாய்ந்தது. உங்களுடைய பசி, தாகம் என்பது எவ்வளவு இயற்கையானது. அதைத் திருப்தி செய்யும் பொழுது, நீங்கள் இயற்கையோடு, அந்த முழுமையோடு கலந்துவிடுகிறீர்கள். அது எவ்வளவு ஆனந்தமானது. அப்பொழுது ஏற்படும் அமைதி, ஓய்வு உண்மையானது. அதை உணர்ந்து அநுபவியுங்கள்.

உங்களுடைய ஆசைகளும், பேராசைகளும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு, உங்களுடைய எதிர்காலத்தில் நீங்கள் வாழுகிறீர்கள். எதிர்காலம் என்பது எவ்வளவு கற்பனையானது? நீங்கள் இந்த உலகத்தில் ஆசைப்பட்டதை அடையலாம். அதற்கு தேவை, அதைப்பற்றிய முழுமையான சிந்தனை. ஒரு பைத்தியம்போல், அதையே 24 மணிநேரமும் சிந்தித்துக் கொண்டிருக்கவேண்டும். அதற்காக, உங்கள் சக்தியை முழுமையாகச் செலவிடவேண்டும். அவ்வளவுதான். நீங்கள் விரும்பிய கார், பங்களா, ஜனாதிபதி பதவி போன்றவைகளை அடையலாம். உங்கள் படம், எல்லா தினசரிகளிலும் வரும். ஆனால், இதனாலெல்லாம் உண்மையான ஆத்ம திருப்தி கிடைக்குமா? அவைகளை அடைந்தவர்களைக் கேட்டுப் பாருங்கள். புரியும்.

நான் ஒருசமயம், முல்ல நசுருதீனை, வீதியில் புகைப் பிடித்துக் கொண்டு செல்லுவதைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன். ஏனெனில், சிலநாட்களுக்கு முன், அவரைக் கேட்டபொழுது, தான் சிகரெட் பிடிப்பதை விட்டுவிட்டதாக என்னிடம் சொன்னார். நான் இப்பொழுது கேட்கும்பொழுது, அவர் சொன்னதாவது, "ஆமாம். நான் சிகரெட் வாங்குவதை நிறுத்திவிட்டேன். ஆனால், யாராவது நண்பர்கள் கொடுத்தால், மறுக்க முடியவில்லை! எல்லாமே படிப்படியாகத்தான் குறைக்கமுடியும். இப்பொழுது சிகரெட் வாங்குவதை நிறுத்திவிட்டேன். இன்னும் சிறிது நாட்கள் கழித்து, பிறர் கொடுப்பதையும் வாங்கமாட்டேன்" என்றார்.

இந்த உலகத்து ஆசைகளை நீங்கள் இந்த பிறவியிலேயே பூர்த்தி செய்துகொள்ள முடியும். அது ஒன்றும் பெரிய காரியமில்லை. தேவை பைத்தியம்போல் ஒரே சிந்தனைதான். ஆனால், மோட்சம், பேரானந்தம், கடவுள்தன்மை, நிர்வாணம், ஞானம் அடைதல் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? பெரும்பாலும், அதற்கு ஒரு பிறவி

போதாது. இவைகளை அடைய, நீங்கள் எவ்வளவுமோ காரியங்களைச் செய்யவேண்டியுள்ளது.

நீங்கள் சுமார் 70 வருடம் வாழ்ந்தால், உங்கள் உள்ளத்தில் ஒரு சமநிலை, ஒரு ஒழுங்கு ஏற்படும். மனநல வைத்தியர்கள், "ஒரு மனிதனின் வாழ்க்கையில், ஒவ்வொரு ஏழு வருடங்களில், உடலிலும், மனதிலும் பல மாற்றங்கள் நிகழுகின்றன" என்கிறார்கள். ஏழு வருடத்திற்குள், உங்கள் உடலில் உள்ள திசுக்கள் முற்றிலும், அழிந்து, புதியவைகள் உண்டாகிவிடுகின்றன. இப்படிப் பார்த்தால், சுமார் 70 வருடங்களில், உங்கள் உடல் 10 தடவை இறக்கிறது. அதற்குள் உங்கள் வாழ்வின் முழு வட்டம் முடிந்து விடுகிறது. அதாவது பிறப்பிலிருந்து, இறப்புவரை உள்ள வட்டம் முழுமை அடைகிறது. அதன் பிறகு வாழ்வதில் எந்த முக்யத்வமும் இல்லை.

ஒருவன், தன் முதல் குழந்தைப் பருவத்து ஏழு வருடங்களை, தன்னையே இந்த உலகத்தின் மையமாக நினைத்து வாழுகிறான். தன்னைச் சுற்றித்தான், இந்த சுற்றமும், சமூகமும் இயங்குகிறது என்று நம்புகிறான். தன்னுடைய தேவைகள் அனைத்தும் உடனே நிறை வேற்றப்பட வேண்டும் என்று ஆசைப்படுகிறான். அதாவது தனக்காகத்தான் இந்த உலகம் இருக்கிறது என்று நம்புகிறான். அந்த 7 வயது குழந்தை, அகங்காரத்தின் முழுமையில் இயங்குகிறது.

ஏழுவயதிற்குப் பிறகு, அவன் தன் அகங்காரத்தன்மையிலிருந்து சற்று வெளியே வருகிறான். பிறரைக் கவனிக்க ஆரம்பிக்கிறான். அவர்களை நோக்கி மெல்லச் செல்லுகிறான். கொஞ்சம், கொஞ்சமாக அடுத்தவர்களிடம் ஆர்வம் காட்டுகிறான். அவர்களைப் பற்றி விசாரிக்க ஆரம்பிக்கிறான். அவர்களைப் போல தானும் ஆகவேண்டும் என்று கருதுகிறான். இப்பொழுது அவன் வெளி உலகத்தை நோக்கிச் செல்ல ஆரம்பிக்கிறான். "ஏன், எதற்கு" என்று கேள்விகள் அவன் மனத்தில்

உண்டாக ஆரம்பிக்கிறது. "இந்த மரம் ஏன் பச்சையாக இருக்கிறது? கடவுள் ஏன் இந்த உலகத்தைப் படைத்தார்?" இப்படி கேள்விமேல் கேட்டு பெற்றோர்களையும், நண்பர்களையும் அலுப்படையச் செய்வான். இந்த உலகத்தை பூர்ணமாக அறியவேண்டும் என்ற தணியாத ஆவலால், அவன் உந்தப்படுகிறான். பலவற்றைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறான். இப்பொழுது அவனுடைய மையம், வெளிஉலகத்தில் செயல்படுகிறது. ஆனால், அவர்கள் தன்னை ஒத்த பையன் / பெண்களைத்தான் அதிகம் நேசிப்பார்கள். அதாவது ஆண், பெண்ணின்மேல் அவ்வளவு விருப்பம் காண்பிப்பது இல்லை. அதைப்போல, பெண், பையன் மேல் ஈடுபாடு கொள்ளுவதில்லை. அப்படி இந்த பருவத்தில், மாற்று பாலின பையன் அல்லது பெண்ணிடம் விருப்பம் கொண்டால், அது இந்தப் பருவத்துக்கு இயல்பானது அல்ல. அவர்களது மனநிலையில் ஏதோ கோளாறு இருக்கவேண்டும்.

14 வயதிற்குப் பிறகு, வாழ்வின் மூன்றாவது கதவு திறக்கிறது. அவன், அல்லது அவள் தன்னைப் போன்ற ஒரே பால் இன பையன் அல்லது பெண்ணிடம் அக்கரைக் காட்டுவது இல்லை. இதை இவர்கள் கொஞ்சம் நாகரீகமாக வெளிப்படுத்துவார்கள். ஆனால், உள் கவர்ச்சி, மாறான பால் இனத்தில் மட்டும்தான் படரும்.

ஆகவேதான், 14 வயதுக்கு கீழ் ஏற்படும் நட்பு, மிக ஆழமானதாக இருக்கும். ஏனெனில், இருவரும் கிட்டத்தட்ட ஒரே மன அலைவரிசையில் செயல்படுவார்கள். ஏனெனில், இருவரும் ஒரே இனம். நட்பு என்பதில், இந்த 7லிருந்து 14 வயதில் ஏற்படுவதுதான் உண்மையானது, மிக ஆழமானது. அதற்கு ஈடாக, வேறு எந்த வயதிலும் ஏற்படாது.

14 வயதுவரை ஒரே பால் இனத்தை (HOMOSEXUAL) விரும்பும் பையனும், பெண்ணும், அதற்குப் பிறகு மெல்ல மாற்றுபால் இனத்தை (HETEROSEXUAL) விரும்ப

ஆரம்பிக்கிறார்கள். இதுதான் இயற்கையுங்கூட. அப்பொழுது, ஒரு பையனோ, பெண்ணோ, தன் முழுமையை நோக்கிச் செல்லுகிறார்கள். ஆகவே, இந்த 14 வயது என்பது மிகவும் முக்கியமானது. ஒரு பெரிய மாற்றத்தின் ஆரம்பம், இந்தக் கட்டத்தில்தான் உண்டாகிறது. ஒரு பையனின் ஆண்மையும், அல்லது ஒரு பெண்ணின் பெண்மையும் விழிப்புற ஆரம்பிக்கின்றன. அப்பொழுது பால் கவர்ச்சி (Sex) தான், அவர்களுக்கு பிரதானமாகிறது. மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம்தான். அவர்களது நனவிலும், கனவிலும், இந்த இனக் கவர்ச்சியைத் தவிர வேறு ஒன்றும் இருக்காது. அவர்கள் ஒரு புதுமையான உலகத்தை நோக்கிச் செல்ல ஆசைப்படுகிறார்கள். அதில் ஏதோ ஒரு பெரிய அபூர்வ இன்பம் இருப்பதாக எண்ணி ஏங்குகிறார்கள். ஒரு சிலர் பைத்திய நிலைக்கேச் சென்றுவிடுவார்கள்.

இப்படி இது 21 வயதுவரை தீவிரமாகிறது. பிறகு காதல், பால் கவர்ச்சி சற்று குறைந்து, இந்த உலகத்துப் பொருள்களின்மேல் பற்று அதிகமாகிறது. தான் ஒரு ராக்பெல்லரைப் (ROCKFELLER) போல பணக்காரனாக வேண்டும், ஒரு மந்திரியாக வேண்டும், ஒரு விஞ்ஞானியாக வேண்டும், பணம், கார், பங்களா, இப்படி எல்லாம் வேண்டும் என்ற பேராசை ஏற்படும். வாழ்க்கையில் போராடி இவைகளை அடையத் துடிக்கிறான். இப்பொழுது, காதல் உலகத்திலிருந்து, பேராசைப் பிடித்த இந்தப் பைத்தியக்கார உலகத்தில் நுழைகிறான்.

எதையும் ஜெயிக்க வேண்டும் என்ற பேராவல் அவனிடம் ஏற்படுகிறது. பல புதுமைகளைச் செய்ய ஆர்வம் காட்டுகிறான். எந்த அபாயத்தையும், சவாலாக ஏற்றுக்கொள்ள சித்தமாகிறான். அப்பொழுது, அவன் தைரியத்தின் உச்சத்தில் இருக்கிறான். இது 28 வயதுவரை நீடிக்கிறது. பிறகு 28 வயது ஆரம்பிக்கும்பொழுது,

(அதாவது 4வது கட்டம்), சிறிது சிந்தனை வயப்படுகிறான். எல்லா ஆசைகளும் நிறைவேறாது, எதிலும் கொஞ்சம் ஜாக்கிரதையாகவே (Alert) ஈடுபடவேண்டும் என்ற நிதானம் ஏற்படுகிறது. இப்பொழுது இந்த உலகத்தை ஆசையோடு பார்ப்பதை விட்டுவிட்டு, இதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற தன்மையில் இயங்க ஆரம்பிக்கிறான்.

கொஞ்சம் புத்திசாலியான, அறிவு கூர்மை நிறைந்தவர்கள், இந்த 28 வயது கட்டத்தில், தங்களைச் சுற்றி பணம், பதவி, வீடு என்று பாதுகாப்பில் இறங்கிவிடுவார்கள். இப்பொழுது அவர்களிடம், பேராவல், துணிச்சல் குறைந்து, பாதுகாப்பு மேலிடுகிறது. இந்த கட்டத்தில், அவர்கள் வாழ்வை அமைதியாக நடத்த வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். ராக்பெல்லரைப் போல பணக்காரனாக முடியாவிட்டாலும், ஏதோ வாழ்வின் வசதிக்காக கொஞ்சம் இருந்தால் போதும் என்ற மனப்பான்மைக்கு வந்துவிடுகிறார்கள். அவர்களிடத்தில் எந்த புரட்சிகரமான எண்ணமும் இருப்பதில்லை.

அவன் மற்ற சாதாரண மக்களைப் போல அநுசரித்து வாழவே ஆசைப்படுகிறான். அவன், எதற்காக வும் அலைய ஆசைப்படுவது இல்லை. ஏதோ ஓரிடத்தில் அமைதியாக வாழ்க்கையை ஓட்டவேண்டும் என்று நினைக்கிறான். இப்படி 35 வயது வரை வந்துவிடுகிறான்.

35 வயதுக்குப் பிறகு, பழமையில் நாட்டம் கொள்ளுகிறான். மதங்களைப் பற்றிச் சிந்திக்கிறான். குரான், பைபிள், வேதம் இவைகளில் ஆர்வம் காட்டுகிறான். ஆனால், தன் வாழ்க்கையில் எந்த மாற்றத்தையும் உண்டாக்கிக் கொள்ள விரும்புவது இல்லை. அவைகளை வெறுமனே தெரிந்துகொள்ள நினைக்கிறான். அவ்வளவு தான். இதுதான் கோடிக்கணக்கானவர்களின் நிலை. அவன் இந்த உலகத்து சட்டத்தையும், நீதிநெறிகளையும் கடைப்பிடித்து வாழ நினைக்கிறான். இப்படி 42 வயதுவரை

நடக்கிறது. இதன் முடிவில், அவனது சக்தி, இறப்பை நோக்கிச் செல்ல ஆரம்பிக்கிறது. பிறகு அவனிடம் உடல் மற்றும் மனவியாதிகள் மெல்ல தலை எடுக்க ஆரம்பிக்கின்றன.

ஆரம்பத்தில், மேல்நோக்கிச் சென்ற சக்தி, இப்பொழுது கீழ் நோக்கி வர ஆரம்பிக்கிறது. 42 வயதுக்குப் பிறகு, உங்கள் சக்தி, மெல்ல மெல்ல குறைய ஆரம்பிக்கின்றன.

ஆனால், உங்கள் பழக்கவழங்களில் எந்த மாற்றமும் இருக்காது. அதன்பிறகு, நீங்கள் அதிகமாகச் சாப்பிட்டு, அதிக எடைபோட ஆரம்பிப்பீர்கள். உங்களுடைய உடல் வேலைகள் குறைய ஆரம்பிக்கும். ஆனால், வயது ஏற ஏற, உங்கள் ஆகாரத்தைக் குறைக்கவேண்டும். இல்லாவிட்டால், அதுவே பல வியாதிகளைக் கொடுக்க ஆரம்பித்துவிடும். ஏனெனில், உங்கள் ஜீர்ண சக்தியும் குறைய ஆரம்பிக்கிறது, உடல் உழைப்பும் குறைய ஆரம்பிக்கிறது. ஆகவே, சுமார் 42 வயது அளவில், இருதயநோய், வயிற்றுப் புண், இரத்த அழுத்தம், சர்க்கரை வியாதி, தூக்கமின்மை எல்லாம் மெல்ல ஆரம்பிக்கும். தலைமுடி நரைக்க ஆரம்பிக்கும். முடிகள் உதிர ஆரம்பிக்கும்.

கார்ல் குஷ்டாவ் ஜங் (GARL GUSTAV JUNG) "என் வாழ்க்கையில் நான் கண்ட அநுபவம் என்னவென்றால், சுமார் 42 வயதை நெருங்கும் மனிதர்களில் பெரும்பாலோர், மதத்தை நோக்கித்தான் செல்லுகிறார்கள். அதில்தான் அவர்களிடம் ஆர்வம் அதிகமாகிறது. சிலபேர்கள் அதில் பைத்தியமாகவே அலைகிறார்கள். ஆனால், சமூகம், சரியான முறையில் இதைத் தெரிந்து வைத்திருக்கவில்லை என்பதுதான் துர்அதிர்ஷ்டம். ஆதலால், அவர்களில் பெரும்பாலோர், தவறான வழியில் செலுத்தப்படுகிறார்கள்" என்று எழுதியிருக்கிறார்.

இந்த சமூகம், உங்களது 14 வயதுவரை, ஏற்றதாக இருக்கலாம். ஏனெனில், பால் கவர்ச்சி எங்கும் பரவலாக

இருக்கிறது. 2 டன் நிலக்கரியை விற்கவேண்டுமானாலும், ஒரு சிறிய பற்பசையை விற்கவேண்டுமானாலும், ஏன் ஒரு சிகரெட்டை விற்பனை செய்யவேண்டுமானாலும், ஒரு பெண்ணின் வசீகரம் தேவைப்படுகிறது! இவைகளெல்லாம் இந்த 14 வயதைத் திருப்தியுறச் செய்யலாம். இந்த வியாபாரத் தந்திரத்தில், அவர்கள் நிலக்கரியையோ, பற்பசையையோ அல்லது சிகரெட்டையோ விற்கவில்லை. அந்தப் பெண்ணின் வசீகரத்தைத்தான் விற்கிறார்கள்! இதை ஆழ்ந்து சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள். அவன், அந்த பற்பசையை எடுக்கும்பொழுது, அந்தப் பெண்ணின் முகம்தான் அவனுக்குத் தெரிகிறது! ஆகவே, இனக்கவர்ச்சி என்பது பெரிய வியாபாரமாகி விட்டது. இது 14 வயது சிறுவர்களை திருப்திப்படுத்தலாம். ஆனால், இந்த சமூகத்தில், ஒருவன் எப்பொழுதும் 14 வயதிலேயே இருக்கமுடியாது. அவர்கள் இந்த 42யை அடைந்துதான் தீரவேண்டும். அப்பொழுது இந்த சமூகம், அவர்களை அனாதையாக விட்டுவிடுகிறது. அவர்களது மனநிலைக்கு ஏற்ப, எதையும் சரியான முறையில் கொடுக்க முடியவில்லை. அதன்பிறகு, என்ன செய்வது என்று அவர்களுக்குப் புரியவில்லை. பெரும்பாலோர் நரம்பு தளர்ச்சிக்கு ஆளாகிறார்கள். ஏனெனில், இறப்பு அவர்களை எப்பொழுதும் பயமுறுத்திக்கொண்டே இருக்கிறது. தான் இறப்பை நோக்கிச் செல்லுவதை, மெல்ல மெல்ல உணர ஆரம்பிக்கிறார்கள்.

இந்த சமூகம், வாழ்வுக்குக் கொடுத்த முக்யத்வம், இறப்புக்குக் கொடுக்கவில்லை. அதை எப்பொழுதும் ஒதுக்கியே வைத்திருக்கிறார்கள். வாழ்வுக்கு, எந்த அளவுக்கு போதனை வேண்டுமோ, அந்த அளவுக்கு இறப்புக்கும் போதனை அவசியம். அப்பொழுதுதான் ஒருவன் வாழ்வையும் சரியாக நடத்துவான், இறப்பையும் தைரியமாக எதிர்க்கொள்ளுவான்.

எனக்கு அதிகாரம் இருந்தால், நான் இந்த பல்கலைக்கழகங்களை இரண்டாகப் பிரிப்பேன். ஒரு பிரிவு வாலிபர்களுக்கும், மற்றொரு பிரிவு வயோதிகர்களுக்காக இருக்கும். வாலிபப் பிரிவினர்களுக்கு, வாழ்க்கையின் பல பரிமாணங்களை, உதாரணமாக, பால் உணர்வு, கலையில் முன்னேற்றம், போராடி ஒன்றை அடைதல், லட்சியம் போன்றவைகளைப் போதிக்கப்படும். இவர்கள் இவை களைப் பற்றி அறிந்து, வாழ்ந்து, 42 வயது அடைந்ததும், மறுபடியும் பல்கலைக்கழகத்தின் அடுத்தப் பிரிவுக்கு வருவார்கள். அப்பொழுது, இறப்பைப் பற்றியும், கடவுள் தன்மை, தியானம் போன்றவைகளை தெரிந்து கொள்ளுவார்கள். பிறகு அதை வாழ்க்கையில் கடைப் பிடித்து, ஓர் அமைதியையும், ஒய்வுதன்மையையும், எண்ணமற்ற நிலையையும் அடைவார்கள். அப்பொழுது இறப்பு என்பது அவர்களுக்கு ஒரு பிரச்சனையாக இருக்காது. அதை மிக இயல்பாக ஏற்றுக்கொள்ளுவார்கள்.

ஆனால், இப்பொழுது, இந்த சமூகம், குறிப்பாக மேலைநாட்டின் சமூகம் இந்த வயது கடந்தவர்களுக்கு எந்த சரியான வழிகாட்டுதலையும் செய்வதில்லை. ஆகவேதான், மேலைநாட்டில், கீழைநாட்டை விட, மனோவியாதிக் காரர்கள் அதிகம். கீழைநாட்டில், மனம், மதத்தன்மை போன்றவைகளைப் பற்றி, சிறிது பயிற்சி கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. இங்கு அது முற்றிலும் அழிந்து விடவில்லை. அதில் பொய் கலப்பு இருக்கலாம். இருந்தாலும், அதை உண்மையாக அடைய ஏற்ற மார்க்கமும் உண்டு. மேலைநாட்டில், அதற்கு வாய்ப்பே இல்லை. ஏனெனில், மதம் என்பதை வாழ்வின் ஒரு அங்கமாக அவர்கள் ஏற்றுக்கொள்ளுவதில்லை. அது தனிப்பட்ட புனிதமானது என்றும் கடவுளுக்கு மட்டும் உரியது என்றும் போதிக்கப் படுகிறார்கள். மனிதன் அதனிடம் பிரார்த்தனை செய்யலாம். அவ்வளவுதான் அவர்கள் அறிந்தவைகள்.

ஆகவேதான், வயோதிகத்தில் அங்கு பெரும் பாலோர் நரம்புவியாதியால், மனோவியாதியால் அவதிப்படுகின்றனர். அவர்களிடம் இன்னும் பேராசைகள் இருக்கின்றன. அதனால் வயிற்று நோயாலும் அவதிப் படுகின்றனர். பேராசையும், பொறாமையும் கொண்டவர்களுக்கு வயிற்றுநோய் (Ulcer) விரைவில் ஏற்படும். உங்களுடைய இறுக்கமான மனமே, உங்கள் வயிற்றை அரித்துவிடும். ஆனால், வுாழ்வில் இந்த உலகத்துப் பொருள்களை சிலவற்றை அடைந்திருக்கலாம். அதனால் என்ன பிரயோஜனம்? உங்கள் ஆரோக்கியம் கெட்டுவிட்டதே. அதைப்போல, உங்களுக்கு மாரடைப்பு (Heart-attack) வந்தால், நீங்கள் ஒரு கேபினட் மந்திரியாக இருக்கலாம் அல்லது, ஒரு பணக்கார வியாபாரியாக இருக்கலாம் அல்லது ஒரு சிறந்த நடிகனாக இருக்கலாம் உங்களுடைய பொருள் வாழ்க்கையின் முடிவான அறிகுறியே, மாரடைப்பு, இதய நோய் எல்லாம்.

நீங்கள் பேராசை, எதிர்காலம் போன்ற நச்சுக் கனவுகளில் வாழ்ந்து, சிலவற்றை அடைந்திருக்கலாம். அவைகளெல்லாம், உங்களிடத்தில், ஒரு இறுக்கத்தையே ஏற்படுத்தும். உங்களுடைய வியாதிகளில், 75% இந்த இறுக்கமான மனநிலையில் (Phychomatic) உண்டாவதுதான். இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

ஆகவேதான், கீழைநாட்டில் பெரும்பாலோர், கடவுள் தன்மை, மோட்சம், நிர்வாணம் பற்றி,, 42 வயதுக்குப் பிறகு, சிந்திக்க ஆரம்பிக்கிறார்கள். அடுத்த பிறவி என்று ஒன்று இருப்பதாக திடமாக நம்புகிறார்கள். அதுவே அவர்களுக்கு ஒரு பெரிய ஆறுதலை ஏற்படுத்துகிறது. பிறவிகள் பல எடுத்து, துன்பப்படுவது என்பது ஒரு பக்கம். ஆனால், இந்த உலகத்தில் மீண்டும் பிறப்போம், இந்த வாழ்க்கை இந்தப் பிறவியோடு முடியவில்லை என்பது ஒரு பெரிய ஆறுதல்தானே?

இந்தக் கருத்தில், இந்தியாவில், மூன்று மதங்கள் அதாவது. ஜைனம், புத்தம், ஹிந்துயிஸம் தோன்றின. அவைகள் மற்ற கருத்துகளில் வேறுபட்டாலும், 'மறுபிறவி' என்ற கருத்தில் அவர்களிடம் எந்த வேறுபாடும் இல்லை. கடவுள் இருக்கிறார் என்பதில் கூட அவைகளுக்குள் ஏகப்பட்ட கருத்து வேறுபாடுகள். உதாரணமாக, ஜைனமதம், கடவுள் என்று ஒன்று இல்லை என்று அடித்துச் சொல்லுகிறது. அது, ஆத்மா என்பதைத்தான் வலியுறுத்துகிறது. புத்தமதம் அதையும் மறுக்கிறது. எல்லையற்ற சக்தி, வெறும் சூன்யமாக நமக்குத் தெரிகிறது. அதுவே இந்த உலக இயக்கத்திற்குக் காரணம். அதுதான் கடவுள்தன்மை, பரவெளி என்று சொல்லுகிறது. ஆனால், இந்த மூன்றும், மறுபிறவியை மறுக்கவில்லை.

ஹிந்துயிஸம், இதை பிரம்ம (Brahma) நிலை என்று அழைக்கிறது. நீங்கள் சுமார் 42 வயதில், இதைப்பற்றி அக்கரை எடுத்தால், பாக்கி சுமார் 28 வருடத்தில், அவ்வளவு சுலபமாக அதை அடையமுடியுமா என்ன? நீங்கள் பல லட்சம் வருடங்களில், பல உருவங்களை எடுத்து, பல பிறவிகளாக வந்து, இப்பொழுது இந்தப் பிறவியை அடைந்திருக்கிறீர்கள். அப்படி இருக்கும்பொழுது, இந்த பிரம்மநிலையை, ஜைனமதப்படி இந்த மோட்ச நிலையை, உங்களது பல கர்மாக்களையெல்லாம் கலைந்து, விடுதலை அடைந்து அவ்வளவு சுலபத்தில், அதாவது சுமார் 28 வருடத்தில் அடையமுடியுமா?

ஆனால் என்னைப் பொறுத்தவரையில், ஒரு உண்மையான மதத்தன்மையுடையவனுக்கு, கடவுள் தன்மையை அடைய, நீண்ட காலம் அல்லது மறுபிறவிகள் தேவை இல்லை. அவன் 'இங்கே இப்பொழுது' வாழ்ந்து, விடுதலை அடைந்து விடுகிறான். அந்த மோட்சத்தை, அந்த நிர்வாணநிலையை அடைந்துவிடுகிறான். மதத்தன்மைக்கு நிகழ்காலம் மட்டுமே சொந்தம். ஆகவே, அதற்கு

வருங்காலம் என்று ஒன்று இல்லை. அதனால் அதற்கு நீண்டகாலமோ மற்றும் மறுபிறவியும் தேவை இல்லை.

ஆகவே, மதம் பற்றிய எண்ணங்கள் ஒருவனுக்கு சுமார் 42 வயதில் ஏற்படுகின்றன. அப்பொழுதுதான் அவன் கோவிலைப் பற்றியும், கடவுளைப் பற்றியும் சிந்திக்கிறான். அது அவனுள் ஒரு குழப்பத்தை ஏற்படுத்துகிறது. இப்பொழுதுதான் தூசுபடிந்த குரானையும், பைபிளையும் எடுத்துப் பார்க்க விரும்புகிறீர்கள். சிலபேர்கள் மேற்கொண்டு என்ன செய்வது என்று புரியாமல் அப்படியே தனிமையில் அமர்ந்துவிடுவார்கள். சிலபேர்கள் சில மந்திரங்களை முணுமுணுக்க ஆரம்பித்துவிடுவார்கள். சிலபேர்கள், யாரையாவது குருவாக எண்ணி, வழிபட ஆரம்பிப்பார்கள். இப்படி ஒரு புதுமையான தேடுதலில் இறங்கி விடுவார்கள். ஆனால், அதனால் அடையப்போகிற பயன் என்ன என்பது வேறு விஷயம்.

இந்தத் தேடுதல், 42 வயதில் ஆரம்பித்து 49 வயதில் தீவிரமடைகிறது. அவரவர்கள் தங்கள் மனதுக்கு ஏற்ப, சில பாதைகளைத் தேர்ந்து எடுத்துவிடுகின்றனர். அப்பொழுது உலகப் பொருள்களில் நாட்டம் குறைய ஆரம்பிக்கிறது. முக்கியமாக பெண்களிடத்தில் உள்ள கவர்ச்சி, ஆசை குறைய ஆரம்பிக்கிறது. அதைப்போல, ஒரு பெண்ணுக்கும் ஏற்படுகிறது. அவளுக்கு சுமார் 40 வயதில் 'தீட்டு' நின்றவுடன், ஆண் கவர்ச்சியும் குறைய ஆரம்பிக்கிறது. இது இயல்பாக நடைபெறக்கூடியது,

ஆனால், சிலதேசங்களில், முக்கியமாக கிழக்கத்திய நாடுகளில், சிறிய வயதிலேயே பால் உணர்வை கட்டுப்படுத்தக் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள்.

ஏனெனில், பொதுவாக எல்லா மதங்களும், முக்கியமாக கிழக்கத்திய மதங்கள் அனைத்தும், பால் உணர்வுக்கு எதிரானவைகளே. தன் மகனுக்கு 14 வயது

வந்தால், அவனுடைய பெற்றோர்கள் அவனைத் தீவிரமாகக் கண்காணிக்க ஆரம்பிக்கிறார்கள். அதைப்போலத்தான் ஒரு பெண்ணையும் தனிமைப்படுத்தி, பல அடக்குமுறைகளை கையாளுகிறார்கள். அவனை அல்லது அவளை இன்னும் சிறிய குழந்தைதான் என்று எண்ணுகிறார்கள். அதனால், தன் பையனிடம் அல்லது பெண்ணிடம் ஏற்படும் மாற்றத்தைக் கண்டு அச்சப்படுகிறார்கள். ஆனால், அந்த வயதில், ஓர் ஆணின் மனதில், பெண்ணும், பெண்ணின் மனதில், ஆணும் குடியேறி விடுகிறார்கள் அது கனவோ, நனவோ, அதைப் பற்றிக் கவலை இல்லை. ஆனால், இது இயற்கையானதுதான். அதில் எந்தத் தவறும் இல்லை. ஆனால், அடக்கப்பட்ட பால் உணர்வு, பல விபரீத செய்கைகளுக்குக் காரணமாகி விடுகிறது. அவன் சுயஇன்பம் காண ஆசைப்படுகிறான். தன் பால் உணர்வை மறைக்கப் பலவிதங்களில் முயலுகிறான். அவைகள் அனைத்தும் கனவுகளாக மாறி வெளிப்படுகின்றன. இதனால், அவனிடம் ஒரு குற்ற உணர்வு ஏற்பட்டுவிடுகிறது. இந்த சுயஇன்பம் (Masterbation) காணுவது என்பது எல்லா தேசங்களிலும், எல்லோரும் அந்த வயதில் செய்யக்கூடியது தான் என்று அவர்களுக்கு யாரும் விளக்கிச் சொல்லு வதில்லை. பெற்றோர்கள் இதைப் பெரிய குற்றமாகக் கருதுவதால், அந்த இரண்டுக்கெட்ட வயதுடைய பையன், தன் உணர்வை மறைத்து வாழ முயலுகிறான்.

ஆனால், மேல்நாட்டில், இந்த அளவுக்கு, பால் உணர்வு அடக்குமுறை இல்லை. அதற்கு பதில், 40 வயதில் ஒரு மாறுபட்ட அடக்குமுறை அங்கே நிலவுகிறது. அதாவது, 40 வயதிலும், அவர்கள் பால் உணர்வு கொண்டவர்களாக இருக்கவேண்டும் என்று அந்த சமூகம் எதிர்ப்பார்க்கிறது. இது இயற்கைக்கு மாறான ஒரு அடக்குமுறைதான்.

அவர்கள், "என்ன இந்த வயதில் இப்படி ஆகிவிட்டாய். ஆரோக்கியமான மனிதன் 90 வயதுவரை கூட, பெண் இன்பம் காணமுடியும். 49 வயது என்பது ஒரு வயதே இல்லை. இப்படி எத்தனையோ டாக்டர்கள் சொல்லி இருக்கிறார்கள்" என்று அந்த நடுவயதுக் காரனிடம் சொல்லி, அவனிடம் ஒரு குற்ற உணர்வை ஏற்படுத்திவிடுகின்றனர். அவன் இப்பொழுது, இயற்கைக்கு விரோதமாக, பல மாத்திரை, ஊசிகளைப் போட்டுக் கொண்டு, பெண்ணோடு விளையாட முயலுகிறான். அதாவது, அடங்கி வரும் பால் உணர்வைத் தூண்ட முயற்சிக்கிறான். இந்த வகையில், அவன் இயற்கையை அடக்க நினைக்கிறான். அதை ஆள முனைகிறான். ஆனால், அவன் எதிர்ப்பார்த்த அளவுக்கு, முடியாத காரணத்தால், அவனிடமும் ஒரு குற்ற உணர்வு ஏற்பட்டுவிடுகிறது.

ஆகவே, கிழக்கத்திய நாடுகள் மக்களின் 14 வயதில் முட்டாள்தனமாகச் செயல்பட்டன. அதைப்போல மேற்கத்திய நாடுகள் 49 வயதில் செயல்படுகின்றன. 14 வயதில், 'பிரம்மச்சரியம்' என்பது முழுப் பொய். முட்டாள் தனமானது. இயற்கை உணர்வு முடக்கப்படுகிறது. இந்த வகையில், எல்லா மதங்களும், இயற்கைக்கு விரோதமாகவே செயல்பட்டிருக்கின்றன.

ஆனால், இந்தியா போன்ற கிழக்கத்திய நாடுகளில், சுமார் 50 வயதில் 'வனப்பிரஸ்த' (Vanaprastha) என்பதைப் புத்திசாலித்தனமாகப் புகுத்தி இருக்கிறார்கள். இந்த வார்த்தை மிகவும் அழகானது, மிகவும் அர்த்தமுடையது. வனப்பிரஸ்த என்றால் வனத்தை நோக்கிச் செல்லுதல் என்று அர்த்தம். அதாவது அந்த வயதில், ஒருவன் சகல உலக இன்பங்களையெல்லாம் உதறிவிட்டு, காட்டுக்குச் சென்று தனிமையாக, தவம், யோகம் என்று செய்ய வேண்டும். அதற்கு முன், அவன் வாழ்வில் பல பிரச்சனை சமாளித்து, தன் சக்தியை செலவிட்டிருக்கிறான்.

இப்பொழுது அந்த சக்தியை, தன்னையே அறிய உபயோகிக்கவேண்டும். இனிமேல் உலகப்பொறுப்புகள் என்று, ஒன்றும் அவனுக்குக் கிடையாது. அவனுடைய குழந்தைகளெல்லாம் வளர்ந்து, மணம் புரிந்து தனித்து வாழ முற்பட்டு விட்டார்கள். இனிமேல், ஒருவன் தன் உள்ளே சென்று தன்னையே அறியவேண்டும்.

அடுத்து 56வது வயதில், அடுத்த மாற்றம் நிகழுகிறது. இப்பொழுது ஒருவன் காட்டையோ அல்லது இமயமலையோ நோக்கி, உண்மையிலேயே செல்ல முனைகிறான். உலகத்து வாழ்க்கை ஒரு முடிவுக்கு வருகிறது. இறப்பு நெருங்கிக் கொண்டிருக்கிறது. சுமார் 49 வயதில், ஒருவனுக்கு பெண் இன்பத்தில் நாட்டம் போய்விடுகிறது. 56வது வயதில், இந்த சமூகத்திலும் நாட்டம் குறைய ஆரம்பிக்கிறது. அவன் பிறரைப் பற்றி எந்த அக்கரையும் எடுத்துக்கொள்ளுவது இல்லை. அவர்களுடைய அபிப்ராயத் தைப் பற்றி, எந்தக் கவலையும் படுவது இல்லை.

ஆனால், ஒரு ரோட்டரி சங்கத்திற்கோ, லயன்ஸ் கிளப்புக்கோ (ROTARY AND LIONS CLUBS) சென்று பாருங்கள். எத்தனை வயதானவர்கள், நன்றாக உடையணிந்து, குலாவுவதும், சிரிப்பதுமாக சில முட்டாள் விளையாட்டில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த லயன்ஸ் என்ற பெயரே, குழந்தைத்தனமானது, சிரிக்கக்கூடியது. சிறிய குழந்தைகளின் சங்கத்திற்கு இது பொருந்தும். லயன்ஸ் என்றால் சிங்கம் என்று அர்த்தம். இவர்கள் எந்த வகையில் இந்த வயதில் சிங்கத்திற்கு ஒப்பானவர்கள்! அதனுடைய சக்தி என்ன, ஆண்மை என்ன, தைரியம் என்ன? இவர்களுக்கு இந்த வயதில் என்ன சக்தி, என்ன ஆண்மை இருக்கப்போகிறது?

மனம், பொதுவாக பைத்தியத்தன்மை நிரம்பியது என்பதற்கு இது ஒரு உதாரணம். 56 வயதில், ஒருவன் சமூகத்தை விட்டு விலகி வரமுயலவேண்டும். எல்லா

ஈடுபாட்டையும் குறைத்துக்கொள்ள வேண்டும். இதுவரை வாழ்ந்தாகிவிட்டது. போதும். இனிமேல் உலகத்தில் என்ன இருக்கிறது? இப்பொழுது ஒருவன் சமூகத்திற்கு நன்றி சொல்லிவிட்டு, மெல்ல வெளியே வரவேண்டும்.

56 வயதில் ஒருவன் உண்மையிலேயே சந்நியாசி ஆகிவிடவேண்டும். இந்த உலகத்தைத் துறக்கவேண்டும். தான் கற்றவை, அறிந்தவை அனைத்தையும், ஒரு மாஷ்டரின் அல்லது ஒரு குருவின் காலடியில் சமர்ப்பித்து விடவேண்டும். பொருள் பற்று சுத்தமாக நீங்கிவிட வேண்டும். இதுதான் இயற்கையாக நிகழக்கூடியது. வாழ்விற்கு எப்படி ஒரு நுழைவு வழி உண்டோ, அப்படி வெளிவழியும் உண்டு. அப்படி இல்லாவிட்டால், ஒருவன் வாழ்வு பூரா, அதிலேயே இருந்து மூச்சு அடைத்து இறக்க வேண்டியதுதான். அந்த 'வெளிவழி' சந்நியாசத்துக்கு உரியது. ஆகவே, இந்த வயதில், ஒருவன் வெளிவழியாக வாழ்க்கையிலிருந்து வெளியே வந்துவிடவேண்டும்.

இப்படியாக ஒருவன் 63 வயது அடைந்ததும், அவன் மறுபடியும் ஒரு குழந்தையைப் போல ஆகிவிடுகிறான். அதாவது, முற்றிலும் தன்னைப் பற்றியே சிந்திக்க ஆரம்பிக்கிறான். இதுதான் தியானத்தன்மையின் அறிகுறிகள். அவன் சிறிது சிறிதாக, தன் உள்ளே செல்ல ஆசைப்படுகிறான். எல்லாம் அவனை விட்டு நீங்கி, அவன் மட்டும் தனித்து இருப்பதில் முழுமையான நாட்டம் கொள்ளுகிறான். இப்படி உங்கள் மையம் உங்கள் உள்ளே மலர ஆரம்பிக்கிறது. ஆனால், ஒரு குழந்தையின் உள்மையத்திற்கும், இப்பொழுது இந்த வயதில் ஏற்பட்டிருக்கும் உள்மையத்திற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. இது வாழ்வின் பல பரிமாணங்களைக் கண்டு வந்தது. பல வாழ்க்கை அநுபவங்களைப் பெற்று வந்தது. அதனால், இந்த உலகத்தைப் பற்றிய கூர்மையான அறிவோடும், புரிந்துகொள்ளுதலோடும், இந்தக் குழந்தைத்தனம் ஏற்பட்டிருக்கிறது. இதுதான் வித்தியாசம்.

ஆகவே, நீங்கள் இந்த அநுபவங்களோடு, மறுபடியும் குழந்தை இயல்பை அடைகிறீர்கள். அதாவது வெகுளித் தன்மையை (Innocent) அடைகிறீர்கள். இப்பொழுது நீங்கள் உங்கள் உள்மையத்தை நோக்கி, பிரயாணம் செய்ய ஆரம்பிக்கிறீர்கள். அது கிட்டத்தட்ட இறப்பை நோக்கிச் செல்லுவதற்குச் சமம்தான். அதாவது, இறப்பு உங்களை நோக்கி வருவதற்கு முன்பே, நீங்களே இப்பொழுது அதை வரவேற்கும் தன்மையில், அதை நோக்கிச் செல்லுகிறீர்கள்! இதுதான் தியானம்,

இப்பொழுது, உங்களுக்கு இறப்பையும் கொண்டாடும் மனப்பக்குவம் ஏற்பட ஆரம்பிக்கிறது. அதில் மகிழ்ச்சியுடன் இரண்டறக் கலக்க விரும்புகிறீர்கள். இதுவரை, கடவுள் இந்த உலகத்தில் பலவற்றைக் கற்றுக்கொள்ள பல சந்தர்ப்பங்களை அளித்தார். நீங்களும் உங்களால் முடிந்த அளவு கற்றுக்கொண்டீர்கள். இப்பொழுது அவைகளையெல்லாம் விட்டுவிட்டு, அமைதி அடைய விரும்புகிறீர்கள். இதுதான் உங்கள் சொந்த வீடு. இதுவரை இந்த வீட்டை உலகத்தில் பல இடங்களில், பல பொருள்களில் தேடினீர்கள். ஆனால், கிடைக்கவில்லை. இப்பொழுது புரிந்து, உங்களை நோக்கியே வருகிறீர்கள். அந்த உலகப் பொருள்களையெல்லாம் மனதார விட்டுவிட்டதால், நீங்கள் மறுபடியும் வெகுளித்தன்மையை அடைகிறீர்கள். ஒரு குழந்தையின் வெகுளித்தன்மை, இந்த உலகப் பொருள்களை அடைவதற்கு முன் ஏற்பட்டது. இப்பொழுது வயோதிகத்தில் ஏற்படும் வெகுளித்தன்மை இந்த உலகத்தை அறிந்து, அநுபவப்பட்டு விட்டுவிட்டதால் ஏற்படுவது. இதுதான் வித்தியாசம்.

இந்த 63 வயதில், உங்கள் சக்தி, உங்கள் உள்ளேயே சுற்றி சுற்றி வருகிறது. இதுவரை இந்த உலகத்தில் பாய்ந்த சக்தி (Extrovert), இப்பொழுது தன் உள்ளேயே நோக்கி (Introvert) பாய ஆரம்பிக்கிறது. உங்கள் பேச்சு மற்றும்

படிப்பது அனைத்தும் குறைய ஆரம்பிக்கிறது. நீங்கள் அமைதியில், மேலும் மேலும் செல்ல ஆரம்பிக்கிறீர்கள். ஒரு முழுமையான சுதந்திரத்தை அடையவேண்டும் என்று ஆவல் ஏற்படுகிறது. உங்களைச் சுற்றி உள்ளவற்றிலிருந்து, விடுதலை அடைய விரும்புகிறீர்கள். உங்களுடைய சக்தி, மெல்ல மெல்ல உங்களுக்குள்ளேயே அடங்க ஆரம்பிக்கிறது. இப்பொழுது 70 வயதில், நீங்கள் இறப்பிற்குத் தயாராகி விட்டீர்கள். நீங்கள் மேற்சொன்ன முறைகளில், இயல்பாக வாழ்ந்து வந்திருந்தால், உங்களது உண்மையான இறப்பிற்கு, 9 மாதங்களுக்கு முன், அது வருவது உங்களுக்குத் தெரிந்துவிடும். எப்படி ஒரு குழந்தை பிறப்பதற்கு, ஒரு தாயின் வயிற்றில், சுமார் 9 மாதங்கள் எடுத்துக் கொள்ளுகிறதோ, அதைப்போல, நீங்கள் இறப்பதற்கு 9 மாதங்களுக்கு முன், அது தன் அறிவிப்பை வெளியிடும். இது மீண்டும், மீண்டும் ஒரு வட்டம் போல், உங்களிடம் பல பிறவிகளாக நடந்து வந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது நீங்கள் மறுபடியும் கர்ப்பப்பையில் நுழைகிறீர்கள். ஆனால், இந்தக் கர்ப்பப்பை, உங்கள் தாயின் வயிற்றில் இல்லை. அது உங்களுக்குள்ளேயே இருக்கிறது.

ஹிந்துக்கள், கோவிலின் மிக உள்பகுதியை, 'கர்ப்பக்கிரகம்' என்று அழைப்பார்கள். அது ஒரு கர்ப்பப்பைக்குச் சமம். இந்த வார்த்தை மிக அர்த்தமுடையது. நீங்கள் உங்கள் உள்ளே உள்ள கர்ப்பப்பையில், இறப்பிற்கு 9 மாதங்களுக்கு முன் நுழைய வேண்டியதை, இது சுட்டிக்காட்டுகிறது. உங்கள் உடலை கோவிலாகப் பாவித்தால், அந்த கர்ப்பக்கிரகம் உங்கள் உள்ளே உள்ள 'உள்மையம்' தான். அது ஆண்டவனின் சந்நிதிக்குச் சமம். அங்குக் கடவுள்தன்மை,மெல்லிய ஒளித் தன்மையில் மிகவும் அடக்கமாக இயங்குகிறது. அதனோடு நீங்கள் இரண்டறக் கலக்கவேண்டும்.

இதுதான் ஒரு மனிதனின் வாழ்வில் இயற்கையாக ஏற்படுவது. அப்படி ஒருவன் வாழ்ந்தால், அவன் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படவேத் தேவை இல்லை. அவனிடம் எந்த இறுக்கமும், ஆசையும் இருக்காது. அவைகள் அனைத்தும் வளரும்பொழுது இயல்பாகத் தோன்றி, பிறகு இயல்பாக மறைய ஆரம்பித்துவிடும்.

ஆனால் கூடியமட்டும், "இங்கே இப்பொழுது" வாழ, இப்பொழுதிலிருந்தே முயற்சி செய்யுங்கள். அடுத்தவை அனைத்தும் அது இயல்பாக உங்களைத் தேடிவரும். அதைத் தேடி நீங்கள் ஓடவேண்டியதில்லை. இதில் நம்பிக்கையாக, முழுமையாக இருங்கள். ஒரு குழந்தை, தான் வளரும்பொழுது, அது எப்பொழுது வாலிபத்தை அடையமுடியும் என்று எண்ணுவதில்லை. அது இயல்பாக வளரும்பொழுது, அது தானாகவே நிகழுகிறது. அதற்காக அந்த குழந்தை எந்த முயற்சியும் செய்யத் தேவை இல்லை. ஒரு ஆறு எப்படி இயல்பாக, கடலை நோக்கி வருகிறதோ, அதைப்போல உங்கள் வாழ்க்கை அமையட்டும். இதற்கு நீங்கள் மிக இயல்பாக, எதையும் இலேசாக எடுத்துக்கொள்ளும் தன்மையில், எதையும் எதிர்ப்பார்க்கா மல், எதையும் அனுமதிக்கும் தன்மையில், இருக்கவேண்டும். இதை மிக நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்.

எப்பொழுது நீங்கள் வருங்காலத்தைப் பற்றி சிந்திக்க ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுதே, ஆசைகள், எதிர்ப்பார்ப்புகள் அனைத்தும் உங்களை வந்து அடைகின்றன. அப்பொழுது, 'இப்பொழுது இங்கே', இந்த நேரத்தில் நீங்கள் வாழவில்லை. அதைத் தவறவிடுகிறீர்கள்.

ஒரு குழந்தை, தன் குழந்தைத்தனமான வாழ்க்கையை பூர்ணமாக வாழவில்லை என்றால், அது தன் இயல்பாக, அவனது வாலிபப்பருவத்தில் புகுந்துவிடும். அது வேறு எங்கேதான் செல்லும்? ஒரு குழந்தை, சுமார் 4 வயதில், வெறுமனே ஆடிப்பாடி மகிழாமல், வண்ணாத்திப்

பூச்சியைக் கண்டு ஆனந்தப்படாமல் சென்றால், சுமார் 20 வயதில், அதைப்போல செய்ய ஓர் ஆர்வம் அவனுக்கு ஏற்படும். ஆனால், இது எவ்வளவு முட்டாள்தனமானது. அவனை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்ப்பதைத் தவிர, வேறு வழியில்லை. அவன் மனத்தில் மிச்சமிருக்கும் குழந்தைத்தனத்தைக் களையவேண்டும். ஆனால், அந்தக் குழந்தை, எந்த அடக்குதலும் இல்லாமல், இயல்பாக வாழ்ந்திருந்தால், பாம்பு தன் மேல்தோலை உரிப்பதுபோல, மிக இயல்பாக, அவன் தன் குழந்தைத் தனத்தை விட்டு, வாலிபத்தன்மைக்குச் செல்லுவான். அவன் முகத்தில் ஒரு தெளிவு இருக்கும். ஒரு வசீகரம் இருக்கும்.

அதைப்போல, உங்கள் வாலிபத்திலும் முழுமையாக வாழுங்கள். உங்கள் சந்நியாசிகள் மற்றும் வேதங்கள் சொல்லியவற்றைப் பின்பற்ற வேண்டாம். அவைகள் அனைத்தும் ஒரு சமூகத்துக்கு வேண்டுமானால் சரியாகவரும். ஆனால், நிச்சயம் ஒரு தனி மனிதனுக்கு அல்ல. இதை சிந்தித்துப் புரிந்துகொள்ளுங்கள். ஆனால், தனி மனிதன்தான், பிறகு சமூகமாகிறான். ஆகவேதான், நான் தனிமனிதனிடம் அக்கரைக் கொள்ளுகிறேன். ஆனால், உங்கள் பழைய ஏடுகள் அனைத்தும் சமூகத்தை நெறிப்படுத்துவதிலேயே இருக்கின்றன. அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை. அதனுடைய பயன்கள் மிகவும் மேலோட்டமானது. பெரும்பாலும் எதிர்விளைவு கொண்டது. ஏனெனில், ஒருவனது இயல்பான உணர்வுகள், சமூகத்திற்காக அடக்கப்படுகிறது. அந்த அடக்கப்பட்ட உணர்வுகள், அவன் மேலே வளர, வளர, அதில்தான் கலக்க ஆரம்பிக்கும். அப்பொழுது அது விஷத்தன்மையுடைய தாகிறது. ஆகவே, இந்த நேரத்தை கொண்டாடி மகிழுங்கள். உங்கள் உணர்வுகளை விழிப்போடு கவனியுங்கள். அதற்காக, மனம் போனபடி வாழ நான் சொல்லவில்லை. அது ஹிப்பிகளுக்கு வேண்டுமானால் சரியாக இருக்கும்.

நீங்கள் இப்பொழுது ஒன்றை நன்றாகப் புரிந்துகொள்ளவேண்டும். அதாவது, 14 வயதிலிருந்து 21 வயது வரை, ஆண்களிடத்தில் பால் உணர்வு மிகத் தீவிரமாக இருக்கும். அவர்களது சக்தியின் பரிமாணம் முழுவதும் இந்த உணர்வாகவே இருக்கும். அவர்களது உடலில் உள்ள ஒவ்வொரு திசுக்களும், பால் உணர்வால் துடித்துக்கொண்டிருக்கும். அப்பொழுதுதான், உங்கள் பழைய மதங்களெல்லாம், பிரம்மச்சரியம் என்பதைப் புகுத்தி, பெண்ணையே நினைக்கக்கூடாது என்று சொல்லி, அதை அடக்க முயலுகிறது. இது எவ்வளவு இயற்கைக்கு விரோதம்? இதை நான் விளக்கமாகச் சொல்லவே, என்னை இந்த மதவாதிகள் மட்டும் அல்ல, இந்த அறிவற்ற சமூகமே வெறுக்கிறது.

அதற்காக, நான், நீங்கள் அந்த வயதில் கண்ட பெண்களிடம் சென்று பெண் இன்பம் காணுங்கள் என்று வற்புறுத்தவில்லை. இதை நீங்கள் நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். நான் பால் உணர்வை, சமாதி நிலைக்கு மாற்றவேண்டும், மாற்றமுடியும் என்று சொல்லி வருகிறேன். ஆனால், இதை இந்த பழைய மதவாதிகளோ, இந்த சமூகமோ கவனிப்பதில்லை. இப்படி நான் சொல்லுவது, இந்த 14லிருந்து 21 வயது வாலிபர்களுக்குத் தான், 70 வயது அடைந்தவர்களுக்கு அல்ல. இதை நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். உங்களது 17 வயதில், உங்களது பால்உணர்வு மிக உச்சத்தில் இருக்கிறது.

என்னுடைய "சிற்றின்பத்திலிருந்து, பேரின்பத்திற்கு" (SEX TO SUPER-CONSCIOUSNESS) என்ற புத்தகத்தைப் படித்து, சில வயதானவர்கள் என்னிடம் வந்து, "நாங்கள் அந்தப் புத்தகத்தைப் படித்தோம். ஆனால், அதனால் நாங்கள் எதையும் அடைந்ததாகச் சொல்லமுடியாது. நீங்கள் எப்படி அடைந்தீர்கள்?" என்று கேட்கிறார்கள். அதற்கு நான், "நீங்கள் அந்தக் காலத்தை கடந்து வந்துவிட்டீர்கள்.

இப்பொழுது அது உங்களால் முடியாது. இதற்கு நான் பொறுப்பல்ல. நீங்கள் இந்த சமூகத்தையும், பழைய மதவாதிகள் சொன்னதைக் கடைப்பிடித்து வந்திருக்கி றீர்கள். உங்களுடைய பால் உணர்வு அடக்கப் பட்டிருக் கிறது. அது இப்பொழுது வியாதி பிடித்து உள்ளது'' என்றேன்.

ஆகவே, இந்த வாலிப வயதில், அவர்கள் தகுந்த துணையைத் தேர்ந்து எடுத்து, விழிப்புடன் பால் உணர்வு கொள்ளலாம். இது தவறில்லை. அதுபோல் அவர்களுக்கு அந்த வயதில் பால் உணர்வு சம்மந்தமாக, பல நல்ல புத்தகங்களைப் படிக்க அநுமதிக்கலாம். ஏன், "பிளேபாய்'' (Playboy) போன்ற பத்திரிகைகளைப் பார்க்கப் படிக்க அநுமதிக்கலாம். இதை அவர்கள் ஒரு குற்ற உணர்வாக கருதாத வகையில், நீங்களே எடுத்துச் சொல்லலாம். ஆனால், "உங்கள் உணர்வில் விழிப்பாக இருங்கள். இது இந்த வயதில் இயற்கை. ஒவ்வொன்றையும் ஆழ்ந்து நோக்குங்கள். அந்த உணர்வையே, சாட்சியாக நின்று, அது வருவதையும், போவதையும் வெறுமனே பாருங்கள். அவைகளை அடக்கவேண்டாம். அப்பொழுதுதான் அதைப் பற்றிய உண்மை உங்களுக்கு விளங்கும்'' என்று சொல்லுங்கள்.

ஆனால், இப்பொழுது உள்ள வாலிபர்கள் என்ன செய்கிறார்கள்? அந்த வயதில், மிகவும் ரகசியமாக விபச்சாரிகளிடம் சென்று, பல வியாதிகளைப் பெற்று அவதிப்படுகிறார்கள். அல்லது பால் உணர்வு புத்தகத்தை, பைபிளுக்குள் வைத்து படிக்கிறார்கள்! நீங்கள் எவ்வளவுக் கவ்வளவு, உங்கள் பிள்ளைகளை பெண்ணையே பார்க்கக் கூடாது என்று அடக்கி வைக்கிறீர்களோ, அவ்வளவுக் கவ்வளவு, அவர்கள் வீறுகொண்டு சந்தர்ப்பத்தை ரகசியமாகத் தேடி அலைகிறார்கள். ஒரு பெண்ணினுடைய உடை, தன் மேலே பட்டாலும் உணர்ச்சிவசப்

படுகிறார்கள். அதில் என்ன இருக்கிறது? இப்படி அவர்கள் பல விபரீதக் கற்பனைகளில் ஈடுபட்டு, மனத்தையும், உடலையும் கெடுத்துக் கொள்ளுகிறார்கள். இதுதான் உங்களுடைய பிரம்மச்சரிய தத்துவத்தின் விளைவு. ஆனால், இது வெளியில் தெரியாது. ஆனால், இது வயதான காலத்தில், மிகவும் அசிங்கமாக வெளிப்படும். இப்படி அடக்கப்பட்டு வாழ்ந்த ஒரு வயோதிகனின் கண்களைக் கூர்ந்துப் பாருங்கள். அதில் பால் உணர்வு வெளிப்படும். இயற்கையாக, இந்த வயதில் அவனுடைய கண்கள் ஒரு குழந்தையின் கண்ணைப் போல, வெகுளித்தனமாக இருக்கவேண்டும். அதற்கு அவன், தனது வாலிப வயதில், பால் உணர்வை சரியாகப் புரிந்து, நடந்திருக்க வேண்டும்.

ஆகவே, பால் உணர்வு என்பது அந்தப் பருவத்தில் வெளிப்படுவதுதான் இயல்பு, அழகு எல்லாம். ஒவ்வொன்றிற்கும் ஒரு காலம் உண்டு. உங்கள் மதவாதிகளையும், தத்துவவாதிகளையும் கேட்காதீர்கள். முக்கியமாக, கிழக்கத்திய மதவாதிகளின் கருத்துகளுக்கு முக்யத்வம் கொடுக்காதீர்கள். இயற்கையை கேளுங்கள். அது சொற்படி நடங்கள். இயற்கையோடு ஒத்துப் போங்கள். அதற்கு மாறாக நடந்தால், நீங்கள் கண்டிப்பாகத் தண்டிக்கப் படுவீர்கள். காதல் செய்யும் பருவத்தில் காதல் செய்யுங்கள். பற்று அற்று **இருக்க** வேண்டிய காலத்தில், பற்றற்று இருங்கள். இதுதா**ன் இயற்**கையின் பாடம், வேதம், பைபிள் எல்லாம்.

ஆனால் **இப்**பொழுது உள்ள மேற்கத்திய விஞ்ஞானிகள் என்ன சொல்லுகிறார்கள். எப்படி ஒரு ஆண், 55 வயதுக்குப் பிறகு பால் உணர்வு மிக்கவனாக இருக்கவேண்டும், என்று இயற்கைக்கு விரோதமாக பரிந்துரைக்கிறார்களோ, அதைப்போல, தீட்டு நின்ற சுமார் 50 வயதுப் பெண், கலவியின் உச்சத்தை எளிதில் அடையமுடியும் என்று சொல்லி வருகிறார்கள். ஏனெனில், அப்பொழுது அவளுக்கு கர்ப்பபயம் இருக்காதாம்.

இதனால்தான் மேற்கத்திய வயதான ஆண்களும், பெண்களும் நரம்பு வியாதியால் அவதிப்படுகிறார்கள். இது எவ்வளவு இயற்கைக்கு விரோதம் என்று அவர்கள் சிந்திக்கவே இல்லை. இதை நியாயப்படுத்தினால், வயதான கிழவிகளெல்லாம், இரத்தம் குடிக்கும் வௌவால் (Vampire) போல், ஆண்களைச் சுற்றி சுற்றி வருவார்கள் இதனால்தான் மேல்நாட்டில், வயோதிகப் பெண்கள், வாலிபர்களை காதலிக்கிறார்கள். இது எவ்வளவு அருவருப்பானது.

என்னுடைய பல பிறவிகளின் அநுபவத்தில் சொல்லுகிறேன். ஒருவனது சுமார் 49 வயதில் ஒரு இயல்பாக வாழ்ந்த ஆணோ, பெண்ணோ, பிற பெண்களிடமோ, அல்லது ஆண்களிடமோ எந்த பால் கவர்ச்சியுடையவர்களாக இருப்பதில்லை. அந்த வயதில், அந்த ஆர்வம் மங்கிவிடுகிறது. இதுதான் இயற்கை, உண்மை.

14 வயதில் வந்த பால் உணர்வு, சுமார் 49 வயதில் முடிவுக்கு வருகிறது. எந்தத் தோற்றத்திற்கும், ஒரு முடிவு உண்டு. எழும்பிய கடல் அலைகள், கீழ் நோக்கி வரத்தான் வேண்டும்.

ஆனால், 60 வயது கிழவன், ஒரு நாளைக்கு 5 தடவை கலவியில் ஈடுபடுவது என்பதும், 14 வயதி வாலிபனுக்கு எந்த பால் உணர்வும் இல்லாமல் இருப்பதும், ஏதோ உடல் கோளாறால் ஏற்படுவது. இவர்களை தகுந்த மனோவைத்தியர்களிடமோ, பால்இயல் டாக்டர்களிடமோ காட்டவேண்டும்.

அடுத்து, நாம் இந்த உலகத்தில் வந்திருப்பது, வாழ்வின் ரகசியத்தை அறிய, அதன் பேரின்பத்தை அடைய. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். இதற்கு நீங்கள் அது சொற்படிதான் நடக்கவேண்டும். அப்பொழுதுதான் அது தன் ரகசியத்தை வெளிக்காட்டும்.

59, 60 வயதில், ஒருவன் மதத்தன்மையில் ஆழ்ந்து, அமைதியாகச் செல்லவேண்டும். அந்த அமைதியும், ஒய்வுத்தன்மையும், அவனை தியான நிலைக்கு அழைத்துச் செல்லுகிறது. இந்தத் தியான நிலை, உலகப்பற்றை, ஆசையைக் குறைக்க வழிவகுக்கிறது. அப்பொழுதுதான், இதுவரை, நீங்கள் வாழ்ந்த வாழ்வின் அர்த்தமற்ற தன்மையை புரிந்துகொள்ளுவீர்கள். ஆனால், அதைக் கடந்துதான், இந்த நிலைக்கு வரவேண்டும். இன்பத்தின் அருமை, துன்பங்களைக் கடந்து வந்து, அடையும் பொழுதுதான் புரியும். ஆகவே, அந்த அர்த்தமற்ற வாழ்வும் இன்றியமையாததுதான். அதுவும் உங்கள் முழு வாழ்வின் ஒரு பகுதிதான். அதை ஒதுக்கமுடியாது. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். அதற்குப்பிறகு நிலைத்து நிற்பது என்ன? உங்களது விழிப்புணர்வு (Awareness) மட்டும்தான். இதை பிரக்ஞை (Consciousness) என்றும் கூறலாம். இந்த நிலையில் நீங்கள் பேரமைதியில் இருக்கிறீர்கள். அப்பொழுது இந்த உலகத்தை இதுவரை பார்த்தவன், இப்பொழுது தன்னையே பார்த்துக் கொள்ளுகிறான். இதுதான் வாழ்வின் ரகசியம். இதை நீங்கள் அநுபவப்பட்டு, அறிந்துகொள்ளவேண்டும், புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் உங்கள் வாழ்வை, எந்த எதிர்காலத்திலும் இல்லாமல், 'இப்பொழுது இங்கே' பூர்ணமாக ஒவ்வொரு கட்டத்திலும், இயற்கையின் தன்மைக்கு ஒத்து வாழ்ந்து வந்திருந்தால், விழிப்புணர்வோடு செயல்பட்டு வந்திருந்தால், அந்த விழிப்புத்தன்மை, உங்களின் 70 வயதில் பூர்ணத்வம் அடைந்து, உங்கள் இறப்பை, 9 மாதங்களுக்கு முன்பே, உங்களுக்கு அறிவித்துவிடும். இதைப்போல, பல ஞானிகள், சித்தர்கள், தங்கள் இறப்பை, முன்கூட்டியே அறிவித்திருக்கிறார்கள். இந்த 9 மாதங்களுக்கு முன்பு, இந்த அறிவிப்பு யாருக்கும் ஏற்பட்டதாக நான் அறியவில்லை.

இந்த 9 மாதம் என்பது மிகவும் அர்த்தம் உள்ளது. நீங்கள் ஒரு கர்ப்பப்பையில் நுழைந்து, வளர்ந்து, வெளியே வர ஒன்பது மாதமாகிறது. அதைப்போல, நீங்கள் எல்லாவற்றையும் துறந்து, உங்கள் மைய கர்ப்பப்பையில், முழுவதுமாக நுழைவதற்கு 9 மாதமாகிறது. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள்.

அந்த 9 மாதத்திற்கு முன்பு, அது இறந்த காலத்தோடு, சிறிதாவது சம்மந்தப்பட்டே இருக்கும். அப்பொழுது அது வருங்காலத்தோடும் சம்மந்தப் பட்டுத்தான் இருக்கவேண்டும். இறந்தகாலம், எப்பொழுதும் வருங்காலத்தோடு கலந்துதான் இருக்கும். ஏனெனில், உங்களுடைய எதிர்கால ஆசைகள், எதிர்ப்பார்ப்புகள் அனைத்தும் இறந்த காலத்திலிருந்தே உற்பத்தி ஆகின்றன. வருங்கால எண்ணங்களின் தாய், இறந்தகால எண்ணங்கள்தான். நிகழ்காலம் என்பது இதற்கு அப்பால் இயங்குவது.

ஒரு மனிதன் நிகழ்காலத்தில் முழுமையாக வாழும்பொழுது, அவன் இறந்தகால மற்றும் எதிர்கால எண்ணங்களால் பாதிக்கப்படுவது இல்லை. அந்த எண்ண மூட்டைகள், அவனை பாதிப்பது இல்லை. அவன் அந்த சுமையை தூக்கிக்கொண்டு அலையவில்லை. அவன் மிக இலேசாக இயங்குகிறான். அவனை, இந்த புவிஈர்ப்பு சக்தி (Gravitation) ஒன்றும் செய்வது இல்லை. உண்மையில், அவன் இந்த உலகத்தில் நடப்பதில்லை, பறவையைப் போல் ஆகாயத்தில் பறக்க ஆரம்பிக்கிறான்.

இப்படி வாழும் அவன், இறப்பதற்குமுன், 9 மாதங்களில் அதை அறிந்தவுடன், அதை ஆர்வமுடன், மகிழ்ச்சியுடன் வரவேற்கத் தயாராக இருக்கிறான். அதைக் கொண்டாட நினைக்கிறான். அவன் பிறரிடம், "என்னுடைய கப்பல் வந்துகொண்டிருக்கிறது. நான் இந்தக் கரையில், இன்னும் சிறிது நாட்கள்தான் காத்திருக்க வேண்டும். சீக்கிரம், என் சொந்த வீட்டிற்குச்

சென்று விடுவேன். இந்த வாழ்க்கை மிகவும் அழகானது, அற்புதமானது. நான் அதை மிகவும் நேசித்து, வாழ்ந்து, பலவற்றைக் கற்றுக்கொண்டேன். நான் வரும்பொழுது எதையும் கொண்டு வரவில்லை. எனக்கு இந்த உலகத்தைப் பற்றி, எதுவும் தெரியாது. ஆனால், இப்பொழுது இதை விட்டுச் செல்லும்பொழுது, மிகவும் அநுபவம் அடைந்து செல்லுகிறேன்'' என்று சொல்லுவான்.

இந்த உலகத்தில், தனக்கு நேர்ந்த நல்லது, கெட்டதுக்கு நன்றி சொல்லுவான். ஏனெனில், இந்த இரண்டினாலும், அவன் கற்றுக்கொண்டது ஏராளம். ஞானிகளிடமிருந்தும், பாபிகளிடமிருந்தும், மிகச் சாதாரண மக்களிடமிருந்தும், ஏன் இந்த உலகத்தில் உள்ள அனைத்துப் பொருள்களிடமிருந்தும் கற்றுக்கொண்டவை மிக அதிகம். இதற்காக, ஒருவன் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாகிறான். இப்படி ஒருவன் வாழ்ந்து, கடைசியில் எல்லாவற்றிற்கும் நன்றி சொல்லி விடைபெறும் பொழுது, இறப்பு மிக அழகாகவே இருக்கும். அப்பொழுது இறப்பு, உங்களுடைய பகைவன் இல்லை என்பதை உணருவீர்கள். அது உங்கள் வாகழ்க்கையின் உச்சத்தன்மை என்பதைப் புரிந்துகொண்டு, அதை ஒரு நல்ல நண்பனாகத்தான் கருதுவீர்கள். அது வாழ்வின் முடிவு அல்ல, வாழ்வின் உச்சம் (Climax) என்று உணருவீர்கள்.

அது, பெரும்பாலோருக்கு வாழ்வின் முடிவாகத்தான் தோன்றும். அதற்குக் காரணம், அவர்கள் வாழ்வில் முழுமையாக வாழவில்லை. அது தொடர்ந்து வருகிறது. அப்பொழுது, அது வாழ்வின் முடிவாகத் தோன்றும். முழுமையாக வாழ்ந்தவர்களுக்கு, இறப்பு ஒரு நிறைவைக் கொடுக்கும்.

ஆகவே, இந்த கணத்தில், நீங்கள் வாழ்ந்திருந்தால், அந்த நிறைவை நீங்கள் கண்டிப்பாக அடைவீர்கள். இந்த கணம் என்பது, ஒரு சிறிய காசுக்கு சமம்தான்.

● ● ●